

# டைனோசர் ஆயிரம் சூழ வலஞ்செய்து....

**---- ( சிறுகதைகள் )**

**எஸ். ரமேஷ்**
**ஸ்ரீவில்லிபுத்தூர்**

*Shakespeare's  Desk*

*Details about the Book....*


1. Title of the Book : ***Dinosaur Ayiram Soola valan cheidhu..*** **-short stories – ( Tamil )**
2. Name of the Author : **S. Ramesh**
3. Content of the Book : Fiction – Tamil Short stories
4. Nature of the Book : Original work by the author
5. Language of the Book : Tamil
6. Author's Address : **S. Ramesh**

   Shakespeare's Desk
   **No. 33, South Car Street,**
   **Srivilliputtur – Pin.626 125**
   **Virudhunagar District –**
   **Tamil Nadu.**
   **Cell : 87542 24076**
   **E-mail : rameshzillion@hotmail.com**
7. Year of work : 2015
8. Copyright : vests with the Author
9. Name of the Publisher: Shakespeare's Desk
10. Price of the book : **Rs. 120 /-**


இந்தக் கதை சுத்தமான கற்பனை. இந்தக் கதையில் தோன்றும் ஆட்கள், இடங்கள், ஊர்கள், கதாபாத்திரங்கள் யாவுமே, தற்போது வாழ்ந்து கொண்டிருப்பவர்களையோ, வாழ்ந்தவர்களையோ அல்லது இனி மேல் எதிர்காலத்தில் வாழப்போகிறவர்களையோ குறிக்காது.

# எஸ். ரமேஷின் சிறுகதைகள்
# விநோத உலகின் வசீகரம்

பல சூழல்களில் நிகழும் அனுபவங்களை / நிகழ்வுகளைக் கதைகளாக்குபவர்கள் தான் அதிகம். ஆனால் குறிப்பிட்ட சூழலில் குறிப்பிட்ட ஆளுமைகளை வைத்தே தீராமல் கதை சொல்பவர்கள். மிகவும் குறைவு. அத்தகைய குறைந்த எண்ணிக்கையிலான எழுத்தாளர்களுள் ஒருவர் எஸ். ரமேஷ். மேற்குத்தொடர்ச்சி மலை சார்ந்த ஸ்ரீவில்லிபுத்தூர் தான் பெரிதும் கதைக்களன். இதனை ஒட்டியுள்ள பின்புலமும் மனிதர்களும் தான் கதைகளில் இடம் பெறுவார்கள். சரளமான விவரிப்பு இவரது பெரிய பலம்.

பல்வேறான ஆளுமைகளில் உருக்கொண்டு அடிக்கடி சந்தித்து, அரட்டையடித்து, நேரத்தைக் கொண்டாடும் ஓர் இளைஞர் பட்டாளம், கால ஓட்டத்தில் எப்படியெல்லாம் உருக்குலைந்து போகிறது என்பது **'தடங்கள் '** கதைகளில் சொல்லப்படுகிறது. அத்திகுளம் மூர்த்தி, இன்னொருவனின் மனைவியுடன் ஓடி விட, கஞ்சாப்பழக்கத்தால் கெட்டழிந்து போகின்றனர் இசைக் கலைஞர்களான டேவிடும் , சிவசங்கரும். சிறுநீரகக் கோளாறால் இறக்க நேரும் சிவராஜன், சர்க்கரை நோயால் பார்வையிழந்து ஓய்வு காலத்தில் தவிக்கும் ஆசிரியர் செந்தில் நாதன், கால் எலும்பு முறிந்து போன கவிதைப்பித்தன் - இவர்களைப் பற்றிய அக்கறையில் விசனங்கொள்ளும் கதை சொல்லியான கதிரவன்.

கிறித்தவ மதத்திற்கு மாறிய பிறகும், தங்களது சாதிக்கொடுமை அவலம் தீராது அல்லாடும் அருந்ததியர் சமூகம் குறித்து 'ஸ்வாமி' கதையில் விவரிக்கப்படுகிறது. புதுமைப்பித்தனின் 'புதிய கூண்டு' கதை போல. உன்னதப்பாட்டில் நேசமிக்கவராக கர்த்தர் இருந்தாலும், வெளிப்படுத்தின விசேஷத்தில் பயங்கரமானவராகவே கர்த்தர் காட்டப்படுவதை பூர்வாங்க வாசகங்களாக எடுத்துக்காட்டி விடுகிறார் ஆசிரியர்.

'அவருடைய சிரசும் மயிருளனளம் வெண் பஞ்சைப் போலவும் உறைந்த மழையைப் போலவும் வெண்மையாயிருந்தது. அவருடைய கண்கள் அக்கினி ஜுவாலையைப் போலிருந்தது' என்றும்,

அவருடைய பாதங்கள் உலைக்களத்தில் காய்ந்த பிரகாசமான வெண்கலம் போலிருந்தது. அவருடைய சத்தம் பெருவெள்ளத்து இரைச்சலைப் போலிருந்தது' என்றும் இடம்பெறும் வாசகங்கள், நிச்சயம் அருந்ததியர் சமூகத்தினருக்கு ஆறுதல் அளிக்கப்போவதில்லை என்பது தெரிந்து விடுகிறது.

எந்தவிதமான பதிவிலும் ஆசிரியரின் கேலியும் கிண்டலும் இடம்பெற்று விடுகின்றன. ஓரிடத்தில் சுவரில் ஒருவன் 'இயேசு வருகிறார்! 'என்று எழுதி வைக்க, 'சிலுவை தயாராக இருக்கிறது!' என்று இன்னொருவன் அதன் கீழே எழுதி விடுகிறான்.

பள்ளியின் காலைப் பிரார்த்தனையின் போது, பேச வேண்டிய முறை வரும் அர்ச்சனா ஜோக்லேக்கர் என்னும் ஆசிரியை, கணவன் இல்லாத சோகத்தில் / தவிப்பில் தன்னை மறந்த நிலையில், ஆண்டு விழாவுக்காகத் தயாரித்திருந்த நரசிம்ம அவதார வசனத்தைப் பேசத் தொடங்கி அதில் ஒன்றிணைந்து நரசிம்மமாகிவிட்டதாக சீற்றமும் ஆவேசமும் பெருக, வியர்க்க – விதிர் விதிக்க நேர்வது 'நரசிம்மம் ' கதையில் பதிவாகின்றது.

நாகரிக அடையாளங்களும் உறவுப்பிணைப்புகளும் மறைந்து வருவதால் உண்டாகும் வருத்தம் 'ந.க.எண். 42/1996 தேதி 20.12.1996' 'அமுதாரக்கல் ' ஆகிய கதைகளில் வெளிப்படுகின்றன. ந.க.எண். '42… கதை சொல்லியின் பெரிய பாட்டி சீனம்மாள் இறந்து ஒன்பது வருடம் ஆகியும் இன்னும் உயிர்ப்புடன் இருப்பதாகவே பழைய மனோபாவத்திலான உறவினர்கள் கருத, இக் காலப்போக்கினர், சீனம்மாள் இறந்து போனதை ஒரு சராசரி நிகழ்வாக எடுத்துக் கொண்டு விடுகின்றனர், பெயர் மாற்றம் செய்தல் போன்ற அடுத்த கட்ட நடவடிக்கையில் இறங்கி விடுகின்றனர். பழைய வீட்டினைச் சீர்திருத்தும் போது அடித்தளத்தில் கிடந்த பெரிய கல்லினைத் தோண்டி எடுக்கின்றனர், பெரிய வைபவங்களில் சமைக்கும்போது சோறினை ஆறப்போடும் பரந்து விரிந்த பலகைக்கல் அது. இப்போது

விற்றால் என்ன பெறும்? என்றாகிப் போன நிலை 'அமுதாரக்கல்' கதையில் எடுத்துரைக்கப்படுகிறது. அமுதாரக்கல் என்னும் சொல்லாட்சியே அழகானது.

கதலி, டைனோசர் ஆயிரம் சூழ வலஞ்செய்து... என்னும் கதைகள் அபூர்வமான நகைச்சுவை வார்ப்புகள். எஸ்.வி.வி, கல்கி, தேவன் என்னும் தமிழின் நகைச்சுவை ஜாம்பவான்கள் வரிசையிலும் இந்திய-ஆங்கிலத்தின் ஆர்.கே. நாராயண் வரிசையிலும் இடம்பெறத்தக்கவை. பட்டப்பெயர்களிலுள்ள விநோதங்களை, விசித்திரங்களைப் பகடி செய்வது 'கதலி'. தலைப்புக்கதையின் பட்டப்பெயர் பெற்றவர் பற்றிய குறிப்பு இப்படி இடம் பெறும்.

சமையல் செய்யும்போது கதலி வாழைப்பழத்தை எடுத்து நறுக்கி, அதை லேசாக எண்ணையில் பொரித்து எடுத்து, துளி உப்பும் காரமும் சேர்த்து அதைப் பொறியலாக மாற்றி, அதற்கு கதலி வாழைக்காய் பொரியல் என்று பெயரிட்டுப் பரிமாறி பேர் பெற்றவர் கதலி நரசிம்மய்யங்கார். இப்படி ஒவ்வொருவருக்கும் குடும்பப் பெயர், பட்டப்பெயர், சிறப்புப்பெயர், தொழிற்பெயர், காரணப்பெயர், இடுகுறிப்பெயர் என்று நானா விதங்களிலும் பட்டப்பெயர்கள்.

ஒரு நகரில் திடீரென்று டைனோசர் நடமாடத் தொடங்கினால் என்னென்ன விபரீதங்கள் நிகழும் என்பது 'டைனோசர் ஆயிரம் சூழ வலஞ்செய்து' கதையின் மையம். ஊர்க்காரர்கள் கண்டதும் திகைப்பும், வியப்பும் அடைகின்றனர். கோயில் சார்ந்தவர்கள் அதற்கு வடகலை நாமம் போடுவதா! தென்கலை நாமம் போடுவதா என்று போட்டியிடத் தொடங்க, போட்டி பூசலாகி, பூசல் நீதிமன்ற வழக்காக பூதாகரம் கொள்ளுகிறது. இடைக்காலத் தீர்ப்பில் வேறொரு சிக்கல் சேர்ந்து விடுகிறது – "ஆண்டாள் கோவில் டைனோசருக்கு தென்கலை நாமமோ, வடகலை நாமமோ எந்த நாமமும் போடக்கூடாது என்றும், வழக்கின் தீர்ப்பு வரும் வரை, தினந்தோறும் டைனோசருக்கு விபூதிப் பட்டையை நெற்றியில் பூச வேண்டும்" எனவும் உத்தரவு பிறப்பிக்கப்படுகிறது.

முறை வைத்து நாமம் போட்டு விட அனுமதி வந்ததும், மாறி மாறி நாமங்கள் இட, நாமக்கட்டியில் சேர்ந்திருந்த சுண்ணாம்பு தோல் அரிப்பை உண்டு பண்ண, புண்ணாகி, சீழ் வடிந்து நாறும் நிலைக்குப் போய் விடும் பரிதாபம் வரை விவரித்து, பகடியின் விளம்பைத் தொட்டு விடுபவராகத் தெரிகிறார் ரமேஷ்.

ரமேஷ் கதைகளின் இன்னொரு அம்சம், பாலியல் உலகின் விந்தைகள். முருகு மற்றும் தளிகை கதைகள் இந்த அம்சம் கொண்டவை. திருவிதாங்கூர் மன்னரிடமிருந்து வசூலாக நிலுவை நின்ற மூன்றாண்டு கப்பத்தொகையை வெற்றிகரமாக வசூலித்து விட்டு, தன் படையுடன் மதுரை திரும்பும் ராணி மங்கம்மாள், இரவில் மடவார் வளாகத்தில் சற்று நேரம் ஓய்வெடுக்கிறார். அப்போது ராணியைக் குளிப்பாட்டும் பிரியம்வதாவின் நெருக்கத்தில் தழுவலில், வருடலில் ஒரு வித பாலியல் ஆனந்தம் கொள்கிறார் ராணி. தன்பால் காமத்தின் தடயத்தின் குறிப்புள்ளதாக இக்கதையை (தளிகை) வாசிக்க இயலும்.

’முருகு’ கதை நம் காலத்து அடிப்படைவாதிகளால் புரிந்து கொள்ள இயலாத கதை. ஆனால் சாதாரண கிராமியச் சமூகம் மெலிதான முறுவலுடன் ஏற்றுக் கடந்து போகக் கூடியது. 25 ஆண்டுகளாக பிள்ளை இல்லாத பெத்தனாட்சியம்மாவுக்கு ஓர் உபாயம் சொல்லப்படுகிறது. நாடகத்தில் முருகன் வேடமிட்டு நடிப்பவருடன் கூடினால், அம்முருகன் போலவே பிள்ளை வாய்க்கும் என்பது அந்த உபாயம். அந்தக் கூடல் முடிந்ததும் அந்நடிகன் அவ்வூர்ப்பக்கம் திரும்பக்கூடாது என்பது நிபந்தனை.

சரியா / தப்பா என்பதல்ல இங்கு பிரச்சனை. நம் சமூகத்தில் நம் மரபில் இப்படி ஆயிரம் விஷயங்கள் இருந்தன. இருக்கின்றன. அவை இலை மறை காயாக இருந்து வந்துள்ளன. இவற்றை எழுத்தாளன் வாசகன் முன் வைக்கக் காரணம், பாலியல் ரீதியில், உளவியல் ஆய்வுகள் சொல்லாத விஷயங்கள் கூட, சமூகத்தின் நடைமுறையில் இருப்பதன் அரிதான தன்மையினையும் அதிசயத் தன்மையினையும் உணர்த்தவே. இதை ஏற்பதும் கைவிடுவதும் சமூகத்தின்

பொறுப்புத்தான். தவறென்று/ சரியன்று என்று சமூகம் நிந்திக்கத் தொடங்கினால், அதுவே அதனைக் கைவிட்டுவிடும்.

குழந்தை இல்லையென்றால், ஆண்-பெண் இருவரில் யாருக்கோ குறை என்பதைச் சரியாகத் தெரியாமலேயே, பெண்ணைப் பழித்து சுலபமாக வேறு மார்க்கங்கள் காட்டப்பட்டு வந்துள்ளதை சமூகம் பதிவு செய்துள்ளது. அடுத்து கோயில் கோயிலாக வழிபட்டுப் பரிகாரம் தேடுமாறு சொல்லப்படும் (அ) மருந்து மாயங்களைத் தேட வைக்கும். வசதியுள்ளவர்கள், நவீன மருத்துவத்தின் துணையுடன் செயற்கைக் கருவூட்டலை நாடலாம்.

அடிப்படைவாதிகளின் பிரச்சனை, புனித நூல்கள் அனுமதித்துள்ளவற்றைக் கூட காதில் வாங்காது, கூக்குரலிட்டு திகிலை ஏற்படுத்துவது தான். வடகிழக்கு இலங்கையின் பெண் போராளியும் எழுத்தாளருமான சர்மிளா செய்யத்திற்கு தற்போது நிமிடம் தோறும் மிரட்டலும் எச்சரிக்கையும் விடப்படுவது தான் நிதர்சனமாயிருக்கிறது. பெண் முக்காடிடுவதிலிருந்து பிள்ளைப் பேற்றுக்கு உபாயம் காணுவது வரை அவளின் தனிப்பட்ட விஷயங்களல்லவா? முடிவெடுக்கும் முதல் உரிமை அவளுக்குத்தானே…

தனி மனித சுதந்திரத்திலிருந்து அந்தரங்க வாழ்வு வரை தலையிட்டு அனைத்தையும் அவஸ்தையாக மாற்றிக் கொண்டிருக்கும் அடிப்படைவாதிகள் தான் இன்றைக்குப் பிரச்சனையே ஒழிய, எழுத்தாளர்களல்ல.

எழுத்தாளர்கள் அதிகாரத்தை, அதன் அடக்குமுறையைத்தான் எதிர்க்கின்றனர். அது அரசின் அதிகாரமாயினும் சரி, அடிப்படைவாதிகளின் அதிகாரமாயினும் சரி.

'அடிப்படைவாதிகள், சமூகத்தின் பாதுகாவலர்கள் என்னும் பங்கு பணியினை தாமாகவே எடுத்துக்கொண்டு, தமக்கேயுரிய சட்டவிரோத பஞ்சாயத்துக்களை நிறுவியதும், புனித நூலான குரான்

எங்களுக்குக் கற்பித்திருக்கும், பெண்களின் கண்ணியத்திற்கும் உரிமைகளுக்கும் நிஜத்தன்மை அளிப்பதை சாத்தியமற்றதாக்கியுள்ளது'. (*Chronicle of a death online* / Kannan Sundaram / *The Hindu* dated 17.04.15)

ஆக எஸ். ரமேஷினால் மத-ஆன்மீகப் போக்குகளை விமர்சனம் செய்ய முடிகிறது. மனித ஆளுமைகளின் பலவீனங்களை, பைத்தியக்காரத்தனங்களை பகடி செய்ய வாய்க்கிறது. சமூகத்தின் விநோதங்களை எடுத்துக்காட்ட முடிகிறது. அக்கறை மிக்க எழுத்தாளனால், கருணை கொண்ட எழுத்தாளனால், எழுத்து மூலம் ஆன்மாவில் சிலிர்ப்பை உண்டு பண்ணி விட முடியும் என்று பிடிவாதமாக நம்பிடும் எழுத்தாளனால் மட்டும் இவை சாத்தியமாகின்றன.

இவற்றைப் பார்க்கவும் பகிர்ந்து கொள்ளவும் வாய்ப்புக்கிடைக்கும் வாசகர்கள் நிச்சயம் பாக்கியவான்களே…

**சா. தேவதாஸ்**

**17, ஏப்ரல் 2015**

## சமர்ப்பணம்...

1. என்றென்றும் ஆதரவு தரும் நண்பர் ***சிவகாசி வார முரசு*** ஆசிரியர் ராஜா சொர்ண சேகர் அவர்களுக்கும்,

2. ***மஞ்சரி*** மாத இதழ் ஆசிரியர் குரு மனோகரவேல் அவர்களுக்கும்,

3. நண்பர்கள் கோதையூர் மணியன், இராஜபாளையம் இரா. கதைப்பித்தன், கவிதா தாசன், மனம் மகிழ ராஜாராம், ப. அடைக்கலம், எஸ்.எஸ். ஆர்.லிங்கம், குறிஞ்சிச் செல்வர் கொ. மா. கோதண்டம், மற்றும் தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றம், ஸ்ரீவில்லிபுத்தூர் கிளையின் நண்பர்களுக்கும்,

4. ஸ்ரீவில்லிபுத்தூர் பென்னிங்டன் நூலகக்குழு அலுவலர்கள் அனைவருக்கும்,

5. இந்நூலைப் பிழை திருத்தம் செய்து, ஆலோசனையும், அணிந்துரையும் தந்த ஆசான், மொழிபெயர்ப்பாளா் சா.தேவதாஸ் அவர்களுக்கும்,

6. இந்நூல் வெளிவர அனைத்து உதவிகளும் செய்த நண்பர்கள் அனைவருக்கும்...

7. கணினியில் தட்டச்சு செய்து கொடுத்த தம்பி க.செல்வநாதனுக்கும்...

## உள்ளே..................

# 1. தடங்கள்

என் பிரிய வாசகரே,

நீங்கள், எங்கள் ஸ்ரீவில்லிபுத்தூருக்கு எப்போதாவது வருகை தந்து, அதன் தென்மேற்கு மூலையில் திருப்பாற்கடல் கண்மாயை ஒட்டிய சாலை பிரிந்து செல்லும் இடத்தில் உள்ள பெரிய சுவரில் சுண்ணாம்புப்பூச்சு சோரம் போய், ஆயிரத்து தொள்ளாயிரத்து அறுபதுகளில், அந்நாளைய காங்கிரஸ்காரர்கள் ஸ்தாபித்த இரண்டடுக்கு முனிசிபாலிட்டி அலுவலகத்திற்கு வருகை தந்ததுண்டா?

ஒரு வேளை அவ்வாறு அந்தக் கட்டிடத்தின் உள்ளே நுழைய உங்களுக்கு ஒரு வாய்ப்பு கிடைத்திருப்பின் (உங்கள் விருப்பத்திற்கு நேர்மாறாக அது போல நேர்ந்திருக்கும்) அதன் மைய போர்டிகோவின் இடதுபுறம் உள்ள படிக்கட்டுகளில் ஏறும் போது, எதேச்சையாய்ப்பின்னே திரும்பிப் பார்த்தால், ஒரு பழைய பூங்கா உங்கள் கண்களில் தட்டுப்படாமல் போகாது.

நிசப்தம் குடிகொண்டிருக்கும் அந்தப்பூங்காவில், மிகச்சரியான வட்டம் அமைத்து, அதில் சீபா புல் வகைச்செடியும், விசிறி வாழையும், கொன்றையும், இன்ன பிற விருட்சங்களும், தெக்கத்திப் பகுதிகளுக்கே உரித்தான புளிய மரங்களும், பேச்சு மூச்சற்றுக் கிடக்கும் பரப்பில் ஒரு எட்டு அடி உயர சலவைக்கல் பீடத்தின் மேல், குடையின் கீழ் மார்பளவு உயர அலுமினிய பெயிண்ட் பூச்சில், தரை நோக்கி லேசாகப் புன்னகைத்தபடி மோகன்தாஸ் கரம்சந்த் காந்தி என்பவர் அமர்ந்திருக்கிறார். அதன் பின்புறம் நீங்கள் நோக்கினால், ஒரு செவ்வக வடிவ அறையும், அதனருகே உயரமான இரும்புத் ஸ்தம்பத்தில் கட்டப்பட்டிருக்கும் பழைய காலத்துக் கூம்பு வடிவ ஒலிபெருக்கியும்.

அந்த செவ்வக அறை, ஒரு காலத்தில் ரேடியோ அறை எனப்பட்டது. அதைச் சுற்றிலும் மூணடி அகலத்தில், அரை அடி உயரத்தில் செங்காவி மேல் பூச்சில் ஒரு சிமிண்ட் தளம். கட்டிடத்திற்கு அடிபலம் சேர்க்கவும், அதில் பூச்சிகள் நுழையாமலும் போடப்பட்ட கெட்டியான சிமெண்ட் தளம்.

கட்டிட ஒப்பந்தக்காரருக்கும், உள்ளூர் கட்சிக்காரர்களுக்கும் எந்தவித 'ரகசிய ஒப்பந்தமும்' ஏற்படாத காரணத்தால் சிமிண்ட், மணல், ஜல்லி இவைகளின் கலவை சரியான விதத்தில் போடப்பட்டு, அதன் சுவர்களும், கிராதி ஜன்னல்களும் பல்லிளிக்காமல், இன்னமும் கெட்டியாய் நிற்கும் அந்த இடம், அதை ஸ்தாபித்த தொள தொள கதர்ச்சட்டை விபூதி சுப்பையா பிள்ளையின் நேர்மைக்கு ஒரு திடப்பொருள் அத்தாட்சி.

மேற்படி செவ்வகக் கட்டிடத்தின் கிழக்குப்பக்கம் விரிந்த திடல். அதன் கிழக்குப் பக்கம் தென்வடலாக புளிய மரங்கள். அதற்கு அப்பால் குட்டையாய் திட்டுச்சுவர். திட்டுச்சுவரின் நேர் கீழே மூக்கைப் பொத்திக்கொள்ளத்தோன்றும் ஸ்ரீவில்லிபுத்தூர் நகரத்தின் மக்கள் கழுவிக் குளித்த நீர் பாயும் சாக்கடை. அதற்குக் கிழக்கே கீரைப்பாத்தித் தோட்டங்கள்.

செவ்வகக் கட்டிடத்தின் நான்கு புறத்திலும் உள்ள சிவப்பு நிறக்குட்டை சிமெண்ட் மேடைக்கு நேர் மேலே நீளவாக்கில், நான்கு பக்கத்திலும் குடை பிடித்தாற் போல ஸன்ஷேட். கொடும் வெயில் காலத்திலும், மண்டையைப் பிளக்கும் பங்குனி, சித்திரை பகற்பொழுதுகளிலும், ஊரே ஆண்டாள் கோவில் மடப்பள்ளி சமையலறை அடுப்பு போல அனல் தகித்துக் கொண்டிருக்கும் வேளையிலும், தல விருட்சங்களின் தயவிலும், செவ்வகக் கட்டிடத்தின் ஒரு அனுசரணையிலும், அந்த சிமெண்ட் மேடை மட்டும் வெம்மை அடையாது. இந்த அமைப்பே எங்க ஊர்க்காரர்கள் பலருக்கும் பெரும் அனுகூலமாக மாறி விட, நாள், பொழுது , கிழமை, பருவ ருதுக்களின் மாற்றம், என்று எந்த விவஸ்தையும் இல்லாமல் ஏதாவது ஒரு கூட்டம் அந்த சிவப்பு சிமெண்ட் மேடையில் டேரா போட்டுக் கொண்டிருக்கும்.

காலையில், துப்புரவு வேலை செய்யும் தோட்டிகள் அங்கே உட்கார்ந்திருக்க, மேஸ்திரி, அவர்களுக்கு ஆள், ஆளாக பணி ஒதுக்கீடு செய்வார். அந்தத் தோட்டிகள் சைக்கிள்களை நிறுத்தி விட்டு, தங்களுக்குள்ளாக வரவு-செலவு- வட்டி, வாசி கொடுக்கல்-வாங்கல் கணக்கு வழக்குகளைப் பார்ப்பதும் அதே சிமெண்ட் மேடையில் தான்.

ஆவி பறக்கும் டீ கிளாஸ்கள், பீடி வாசம், இன்ன பிற குளிக்காத தோட்டிகளின் முடை நாற்றம் யாவும் கலந்து அந்த

சிமெண்ட் மேடை அலங்கோலமாகும். காலை ஒன்பது மணிக்கு மேல், முனிசிபாலிட்டிக்கு மனு கொடுக்க வரும் ஜனம், அந்த மோகன்தாஸ்.... அய்யாவின் சிலையின் பின்னே உள்ள செவ்வக அறையின் படிகளில் உட்கார்ந்து மனு எழுதிக்கொண்டிருக்கும். அல்லது எழுதிய மனுக்களை சரி பார்த்துக் கொண்டிருக்கும். முனிசிபாலிட்டி ஒப்பந்தக்காரர்கள், தங்கள் வகை ஆட்களுடன் பேசி சலசலப்பு உண்டாக்குவார்கள்.

பத்து மணிக்கு மேல் சாவகாசமாய் உள்ளே வரும் குமாஸ்தாக்கள், தட்டச்சர்கள், சிப்பந்திகள், சலவை வேட்டியில் வரும் வார்டு கவுன்சிலர்கள், கரை வேட்டி, இஸ்திரி சட்டைகளின் மொடமொடப்பு, வாய்ச்சவடால்கள், வாகனங்கள் வருகை, பத்து பத்தரைக்கு மேல் களை கொள்ளும் அந்த அலுவலகத்தில் எதுவுமே ஆமை வேகம், நத்தை வேகத்தில் தான் வேலை நடக்கும் என்பது கடவுளே பார்த்துப் பார்த்து நொந்து போன விதி.

அலுவலகத்தின் நேர் எதிரே இருக்கும் செவ்வக ரேடியோ அறையைச் சுற்றி இருக்கும் தரை மேடை தான் சகலருக்கும் புகலிடம். இரவில் பத்து மணிக்கு மேல், அங்கு நிலவும் முக்கால் வாசி இருளில், கதம்பப் பூவை தலையில் சூடிய ஏழைப்பெண்கள் அந்த இடத்தின் இருட்டைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு, தங்கள் வயிற்றுப்பாட்டைத் தேடிக்கொண்டனர்.

ஒரு சில கிரக ராசிகளின் ஏடா கூடமான அமைப்பினால், மேற்படி ஸ்தலத்தில் ஒரு கோஷ்டி உருவாகி விட்டது. அது தவிர்க்க இயலாத விதத்தில் ஒன்று சேர்ந்த ஒரு இன்னிசை வாத்திய கோஷ்டி.

தன் பிறவியிலேயே இசைவாணராய்ப் பிறந்து விட்ட காரணத்தால், செந்தில்நாதன், பி.லிட்., எம்.ஏ., எம்.எட்., தமிழ் பட்டப்படிப்புகளைப் படித்து முடித்துவிட்டு, அதில் தமிழைக் கரைத்துக்குடித்து விட்டு, அது ஜீரணமாகாமல் போனதால், அடிக்கடி ஏப்பம் விடும் போதெல்லாம் தமிழிசைப் பாடல்களையே ஏப்பமாக விடுபவர்.

பழைய காலத்து பி.யூ.சி.யும்., ஆசிரியர் பட்டயப்படிப்பும் முடித்து விட்டு, சாத்தூர் அருகே தனியார் பள்ளிக்கூடத்தில் "அறம் செய விரும்பு. ஆறுவது சினம். இயல்வது கரவேல் " என்று அரை டிராயர்

பையன்களை மேய்க்கும் கணபதி வாத்தியார், நல்ல டிரிபிள்ஸ் வாத்தியக்காரர்.

ஸ்ரீவில்லிபுத்தூருக்குக் கிழக்கே நாலு மைல் தொலைவில் இருக்கும் இருநூறு ஓட்டு வீடுகள் மட்டுமே உள்ள அத்திகுளம் கிராமத்தை சர்வ தேச அளவில் முக்கிய நகரமாகக் கருதி, அங்கு வாழ்ந்து, இறுமாப்பு கொண்டிருக்கும் பொறியியல் டிப்ளமோ படித்த பாடகர் அத்திகுளம் மூர்த்தி.

தனது இடது உள்ளங்கையை தனக்குக் கடவுள் தந்தது, கஞ்சா கசக்குவதற்கு மட்டுமே என்று தப்பான அபிப்ராயம் கொண்டிருக்கும் தபேலா சிவசங்கர். அவருடன் சேர்ந்து தன் இடது கை உள்ளங்கை ரேகைகளைத் தொலைத்து விட்ட கித்தார் மாஸ்டர் டேவிட் மத்தேயு. டேவிட் மத்தேயு மிகப் புராதனமான சி.எம்.எஸ். பள்ளி ஆசிரியர்.

சேர், டேபிள், வீட்டுச் சாமான்களைத் தவணையில் விற்கும் டி.எம்.எஸ். சிவராஜன், டி.எம்.எஸ் என்பது அவரது பட்டப்பெயர். ஏழரைக்கட்டை சுருதியில்,

*"சொல்லடி அபிராமி!*
*வானில் சுடர் வருமோ?*
*எனக்கு இடர் வருமோ?*
*பதில் சொல்லடி அபிராமி!"*

என்று அபிராமிக்குத் தனது கோரிக்கை மனுவை வாய்மொழியாகவே வைத்தாரென்றால், அவரது முகத்தின் நரம்புகள் எல்லாம் விரியும். கழுத்தின் நடுப்பகுதி புடைக்கும். உடலின் ரத்தமெல்லாம் முகத்தில் பாய, உச்சக்கட்ட ஆரோகணத்தில் ஸ்வர சஞ்சாரம் செய்து கேட்பவரைக் கிறங்கடிப்பார்.

சில சந்தர்ப்பங்களில், இவர்களோடு வந்து சேரும் பெரியவர் தமிழ்நேசன்,ஒரு மரபுக்கவிஞர். பழைய எல்.பி. அரக்கு ரெக்கார்டுகளில் மட்டுமே கிடைக்கக்கூடிய தஞ்சை ராமையாதாஸ், மருதகாசி, பாபநாசம் சிவன் ஆகியோரின் பாடல்களை வரி விடாமல் பாடுவார். ஆனால் சுருதி சேராது. தாளக்கட்டு உதைக்கும். அவரது நரைத்த தலைக்கு மதிப்பு தந்து அவரைச் சேர்த்துக் கொண்டார்கள். பிறகு,

கவிதைப்பித்தன் எப்போதாவது  வந்து சேர்ந்து கொள்வார். இவர் கண்ணதாசனிடம் இரண்டு வருசங்கள் குப்பை கொட்டியவர். குப்பை கொட்டியவர் என்றால், உண்மையிலேயே அதைத்தான் செய்து கொண்டிருந்தார். கண்ணதாசனிடம் வந்து சேரும் பல கவிதைகளைப் படித்து, ருசி பார்த்து, நல்லதை நகல் எடுத்து, மற்றவைகளைக் குப்பைக் கூடைக்கு அனுப்புவது இவரது வேலை.

இந்தப் பஞ்சாமிர்தக் கூட்டணியில், சாப்பாட்டு இலையோரம் இருக்கும் மாங்காய் ஊறுகாய் போல நானும். என்னை எதற்காக அவர்களுடன் கூட்டணி சேர்த்துக் கொண்டனர் என்பது இன்றளவும் எனக்குப் புரியாத புதிரே.

வார இறுதி நாட்களில், நான் வீட்டை விட்டு வெளியே கிளம்பி, நேராக தேரடி வீதிக்குப் பின்புறம் உள்ள வெங்கடேஸ்வரா தியேட்டர் போகும் வழியில் உள்ள கணபதி வாத்தியார் வீட்டுக்குப் போய் விடுவேன். அவர், சிவப்பு நிற ஓரிழைத் துண்டை மட்டும் இடுப்பில் கட்டிக் கொண்டு, முக்கால் நிர்வாணக் கோலத்தில் உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருப்பார்.

எனது குரல் கேட்டதும், 'இதோ வர்றேன், கொஞ்சம் பொறுங்க கதிரவன் ' என்று சொல்லுவார். அவரது வீட்டுக்குள்ளேயிருந்து சைவ வேளாளர் குடும்பங்களுக்கே உரித்தான நல்ல வாசமுள்ள சமையல் மணம் வெளியே வந்து வீதியையே நிரப்பும். தனது சின்ன ஓட்டு வீட்டுக்கு வெளியே வரும் கணபதி, அரைக்கை சட்டையை மாட்டிக் கொள்வது வீதியில் தான். கதர் வெள்ளை வேட்டி, கதர் வெள்ளைச் சட்டை என்று காங்கிரஸ் மயமாகக் காட்சி தருவார் அவர்.

நான் எனது சைக்கிளை உருட்டிக் கொண்டு, அவரோடு சேர்ந்து, அதே வீதியில் இருக்கும் சிவசங்கரையும் சேர்த்து இழுத்துக் கொண்டு, சிவ-நாச்சியார் ஆரம்பப்பள்ளி வழியாக ஈ.பி. ஆபிஸ், சக்கரைக்குளத்தெரு கடந்து முனிசிபாலிட்டி ஆபீஸ் பூங்காவில் நுழையும் போது, அந்த இடமே வெறுமையாய், மௌன விரதம் பூண்டிருக்கும்.

டி.எம்.எஸ். சிவராஜனும், அத்திகுளம் மூர்த்தியும் அங்கு அதே சமயத்தில் கொஞ்சம் முன்ன பின்னதாக வந்து எங்களுடன் சேர்ந்து கொள்வார்கள்.
அவர்களுக்கு நாங்கள் வந்திருக்கும் தகவலைச் சொல்ல வேண்டியதில்லை. ருஷ்ய டாக்டர் பாவ்லாவ் ஆய்வு செய்த , மணியடித்தால் ஓடி வரும் நாய்க்குட்டியைப் போல, பனி விலகி இளவெயில் சூடேறும் பொழுதில் ஏதோ உள்ளுணர்வு தோன்ற அவர்கள் வந்து சேர்ந்து விடுவார்கள்.

கணபதி வாத்தியாருக்கு டிரிபிள்ஸ் வாத்தியத்தைக் கையில் எடுத்துக் கொண்டு வர வேண்டும் என்ற அவசியம் இல்லை. ஒரு கனத்த பைண்டிங் போட்ட புத்தகம் அவருக்குக் கையில் இருந்தால் போதும். உடனே, அதைத்தன் தொடையின் மேல் படுக்கை வசத்தில் வைத்துக் கொண்டு, தாளம் தட்ட ஆரம்பித்து விடுவார்.

ரேடியோ ரூம் எப்போதும் பூட்டியே இருக்கும். அதன் வெளிப்புற சிமெண்ட் மேடை எங்களைப் பார்த்ததும் 'வாங்கண்ணே! வந்து உட்காருங்க! நல்ல ஒரு பாட்டைப் போடுங்க!' என்று சொல்லி வரவேற்பு கொடுக்கும்.

ரேடியோ ரூம் வாசலில் உள்ள இரண்டடுக்கு படிகளில், மேல் படியில் கணபதி வாத்தியார் உட்கார்ந்து கொண்டு, கதர்ச்சட்டையைக் கழட்டிக் கீழே வைத்து விட்டு, தனது 'தாள வாத்திய' பைண்டு புத்தகத்தை தொடைகள் மேலே வைத்துக் கொண்டு, 'என்ன சிவராஜன் ஆரம்பிச்சுரலாமா? கவிதைப் பித்தன் இன்னும் வரலியா?' என்று கேட்டபடி அவரை மேலிட்டு ஒரு பார்வை பார்ப்பார்.

- 'என்ன வாத்தியார், நேத்திக்கு அங்க கிருஷ்ணன் கோவில்ல கச்சேரி. நானும் கித்தார் டேவிட் மத்தேயுவும் தான். இந்தக் காஜா மணி பிற்பாடு வந்து சேந்துக்கிட்டு, மலேசியா வாசுதேவன் பாட்டா ஒரு பிடி பிடிக்கறாரு. நான் விடல. டி.எம்.எஸ். ல நின்னேன்.

'பாட்டும் நானே, பாவமும் நானே!' பாடற போது ராத்திரி மணி ஒண்ணு. விக்னேஸ்வரியும், ராசலெட்சுமியும் மேடையில பின்னாடி உக்காந்து, கொட்டாவி விட்டுக்கிட்டு இருக்காங்க. எனக்குன்னா ஒரே

கடுப்பு. என்னடா இது! நாம இங்க ரெண்டு பேரு உசிரைக் கொடுத்துப் பாடிக்கிட்டு இருக்கோம். இதுக பின்னாடி சேர்ல உட்கார்ந்துக்கிட்டு, கொட்டாவி விடுதுகளேன்னு ஒரே ஆத்திரம். திரும்பி ஒரு முறை முறைச்சேன். கச்சேரி முடிஞ்சதும் செட்டில் பண்ற போது, பாட்டக்குளம் அய்யனார் எனக்கு இருநூறை எடுத்து நீட்டறாரு. பேசினது நானூறு. கச்சேரி முடிஞ்சதும் இருநூறு கொடுத்தா என்ன அர்த்தம்னு அங்கயே வெச்சு சத்தம் போட்டுட்டு, 'நீயும் வேணாம். உன் பணமும் வேணாம் 'ன்னு புறப்பட்டுட்டேன். அவன் பின்னாடியே ஓடி வந்து 'மன்னிச்சுக்கங்கண்ணேன். நீங்க இல்லாம ஏது கச்சேரி? 'தேங்காய் பழம் இல்லாம சாமி கும்பிட முடியுமான்னு சொல்லிக்கிட்டே இன்னொரு நூறை எடுத்து நீட்டறான்'. சரி போனாப் போகுது. இவ்வளவு கசறிட்டு பின்னாடி கொடுக்கறானேன்னுட்டு, வந்ததை வேணாம்னு சொல்ல வேணாம்னு பின்னாடி வச்சிக்கிட்டேன்.

இப்படி சொன்னபடி அத்திகுளம் மூர்த்தியை ஒரு பார்வை பார்ப்பார். அத்திகுளம் மூர்த்தியிடம் சொல்லுவதற்கு ஏதாவது சுய புராணம் இருக்கிறதான்னு ஒரு பார்வை. பதிலுக்கு மூர்த்தி தன்னிடம் கையிருப்பில் இருக்கும் இராஜபாளையம் கச்சேரி அனுபவத்தை எடுத்து, அவிழ்த்து விடலாமா என்று யோசிப்பார். ஆனால், தன்னை விட வயதில் மூத்தவரான சிவராஜனின் சுய ஜபர்தஸ்து, தோரணை, வாய்ச்சவடால் இவைகளின் முன்பு தன்னுடைய திறமை எம்மாத்திரம் என எண்ணி, சுய அடக்கத்துடன் தனது கதைகளை அவிழ்த்து விடாமல், அமைதியாய் வேறு பக்கம் திரும்பிக் கொள்வார்.

அத்திகுளம் மூர்த்திக்கும், சிவராஜனுக்கும், தொழில் முறைப் பனிப்போர் என்பது, போன நூற்றாண்டில் எழுபதுகளில் நடந்த அமெரிக்க --ருஷ்ய பனிப்போரை விட மோசமானது.

மேடையில் பாடுவதில் யார் யாரை அடித்து வீழ்த்துவது என்று நடைபெறும் போட்டி எனக்குப் பார்க்க சுவாரசியமாகத் தென்படும்.

அத்திகுளம் மூர்த்தி தொண்டையைக் 'க்ஹூம் ' என கனைத்துச் சரி செய்தபடி, 'வாத்தியார், ஒரு கார்ட் கொடுங்க' என்று கோரிக்கை வைத்தபடி, கணபதி வாத்தியாரின் முகத்தைப்பார்ப்பார்.

கணபதி வத்தியார், தன் வாயால் எச்சிலை உள்ளே இழுத்தபடி கித்தார் நரம்பில் ப்ளக்ட்ரத்தால் சுண்டியதும் வரும் ஒலி போல

'ட்ர்ரர்யொங்ங்' என்று உதடு குவித்து ஒரு ஒலி எழுப்புவார். கச்சேரி பாடுபவனுக்கு, இந்தக் கித்தார் கார்ட் ஒலி என்பது மிக முக்கியமான ஒலிக்குறிப்பு. க்ளட்ச்சைப் பிடித்து, கியரை மாற்றி, வண்டியை இயக்குவது போலத்தான் இந்த கார்ட் இசைக்குறிப்பும்.

உடனே, மூர்த்தி, தன் வசம் உள்ள பழைய 1960'களிலான அல்லது 1970'களிலான பாடல்களில் ஏதாவது ஒன்றை மூன்று கட்டை சுருதியில் அவிழ்த்து விடுவார்.

கணபதி வாத்தியார், தனது தொடைகள் மேலே படுக்கை வசத்தில் இருக்கும் பைண்ட் செய்யப்பட்ட புத்தகத்தை 'தட்…தட்…தட்… ' என்று கைகளால் மாறி மாறித் தாளம் தட்டுவார். அத்துடன் வாயும் 'உச்… உச்… உச் ' என தாளமிடும். மூர்த்திக்கு மூச்சுப்பிடித்துப் பாடும்போது, நெஞ்சு ஏறி இறங்கும் கன்னங்கள் துடிக்கும். முடி சிலிர்க்கும். வியர்வைத் துளி நெற்றிப்பொட்டிலிருந்து துளித்துளியாய் அரும்பி, வழிய ஆரம்பிக்கும்.

'உன் பாட்டையெல்லாம் நான் நல்ல பாட்டுன்னு ஒத்துக்க மாட்டேன் ' என்ற ரீதியில், டி.எம்.எஸ். சிவராஜன் அவரை நிராகரிக்கும் பாவனையில் ஒரு பார்வை பார்ப்பார்.

பல்லவி, அனுபல்லவி முடிந்ததும், இடையில் சரணத்திற்கு முன்பாக வரும் வார்த்தைகளற்ற இசைக்கோர்வையை இட்டு நிரப்ப வேண்டியது என்னுடைய பொறுப்பு. புத்தகத்தில் கைத்தாளம் போடும் கணபதி வாத்தியார், அனுபல்லவி முடியும் போது என்னை ஒரு அர்த்தமுள்ள பார்வை பார்த்தபடி தனது வலது தாடையை உயர்த்தி ஒரு சமிக்ஞை கொடுப்பார். அதைப் புரிந்து கொள்ளும் நான், உடனே எனது வாயால், தாள வாத்திய நிரவலை இட்டு நிரப்புவதோடு, அதற்கு எனது கைகளாலேயே ஒரு பாவமும் செய்து காட்டுவேன். இசை நிரவலை (சேலா) நான் முடிக்கும் போது, மூர்த்திக்கு மேலும் ஒரு கித்தார் கார்டு தேவைப்படும். ஆனால், அவர் முறையாக சங்கீதம் கற்றவர். அதனால், பாடும் போதே, ராகத்தின் நெளிவு சுளிவுகளில் அவர் குழைவார். ஸ்வர சஞ்சாரமும் உண்டு. தியாகராஜ பாகவதரின் 'ராஜன் மகராஜன் ' பாடும் போது துக்கடாக்களைச் சரியாகப் பாடி அசத்தி விடுவார். மூர்த்தி 'ராஜன் மகராஜன் ' பாடினால் சிவராஜனுக்குச்

சுத்தமாகப் பிடிக்காது. மூர்த்தியின் ஸ்பெஷல் அயிட்டமே அந்தப்பாட்டு தான்.

மூர்த்தி பாடி முடிக்கும் வரை டி.எம்.எஸ். சிவராஜன், உலையில் கொதிக்கும் அரிசி போலப் பொருமிக் கொண்டிருப்பார். மூர்த்தி அவரைப் பொருட்படுத்தாமல் ராகங்களை அனுபவித்து மூச்சுப் பிடித்துப் பாடுவார். மூர்த்தி முடித்ததும், ஒரு நொடி கூட தாமதியாமல் 'வாத்தியார், எனக்கு ஒரு கார்டு கொடுங்க' என்று வேண்டுவார். கணபதி வாத்தியார், 'என்னய்யா இது? பாவிகளா, ஒரு நிமிசம் எனக்கு ரெஸ்ட் கொடுக்கக்கூடாதா? என்று சலித்துக் கொள்வார்.

வாத்தியார் வாயால் கார்டு கொடுத்ததும், உடனே சிவராஜன் தொலைந்து போன டி.எம்.எஸ்.ஸின் அரக்கு ரிக்கார்டு பாட்டை எடுத்து வெளியே விடுவார். அந்தப் பாட்டு ஒரு வேளை அதைப்பாடிய டி.எம்.எஸ். ஸுக்கே மறந்து போயிருக்கும். அப்படி ஒரு பாட்டு. அதை சிவராஜன் மனப்பாடம் பண்ணி நெட்டுரு போட்டு வைத்திருப்பார். அந்தப் பழைய பாட்டை நெக்குருக பாடும்போது இடையில் இசை நிரவலை (சேலா) நான் முடித்ததும், சரணத்தைத் தொடங்குதைத் தாமதப்படுத்துவார். உடனே, நான் அவர் விட்ட இடத்தில் தாளக்கட்டை ஒன்று, இரண்டு, மூன்று என எண்ணி, எங்கு ஆரம்பிக்க வேண்டும் என பாடிக் காட்டுவேன். உடனே அவர் வாயிலிருந்து 'சபாஷ்!' என்ற பாராட்டு வரும். இந்த 'சபாஷ்' விருது எனக்கு ஒரு தேசிய விருது மாதிரி. பழைய பாட்டுக்களின் வரிகளை அவர் சில சமயம் தவற விடும் போது, அதை எடுத்துக் கொடுப்பேன். அவர் முகம் உடனே மலரும்.

எனக்கும் எப்போதாவது வாய்ப்புக் கிடைக்கும். மூக்காலேயே முணுமுணுக்கும் இளையராஜாவின் அவலச்சுவை நிரம்பிய பாடல்கள் ஒரு அரை டஜன் என் கையிருப்பில் இருந்தன. வாத்தியார் என்னைப் பார்த்து,

- 'நீங்க ஏதாவது எடுத்து விடுங்க கதிரவன் ' என்பார்.
- 'எது வேணும்? '
- 'உங்களுக்குன்னு ஒரு ஃபேவரைட் பாட்டு வெச்சிருக்கீங்களே, அது தான்.

என் ஃபேவரைட் என்னவென்று தன் வாயால் சொல்ல மாட்டார். அது தான் அங்கு விசேஷம்.

நான் அவரைப் புதிராகப் பார்க்க, அவர் என் கண்களைப் பார்க்க, ஒரு நயன பாஷை உரையாடல் நடைபெற்றுக் கொண்டிருக்கும். நான் தயங்குவேன். உடனே, அவர் வாயால் ஆலாபனையை ஆரம்பித்தபடி, புத்தகத்தில் கையால் தட்ட ஆரம்பிப்பார்.

நான் 'கா… கா… கா…' என்று ஆரம்பிப்பேன். அவர் வாயால் தாளம் கூட்டியதும்,

*'ஆகாரம் உண்ண எல்லோரும் ஒன்றாக*
*அன்போடு ஓடி வாங்க.*
*என்ற அனுபவப் பொருள் விளங்க,*
*காக்கை அண்ணாவே, நீங்கள்*
*அழகான வாயால் பண்ணாகப் பாடுறீங்க'*

… என்று சி.எஸ். ஜெயராமனின் குரலில், கிழவன் பாடுவது போல பாடுவேன். பலரும் நான் பாடுவதைக் கேட்டு விட்டு சிரிப்பார்கள்.

இந்தப் பாட்டை முதல் தடவை பாடும் போது, அதில் வரும் வரியில்,

*'பச்ச மயிருங்க.*
*பகிர்ந்துண்டு வாழுங்க.*
*பழக்கத்தை மாத்தாதீங்க. '*

என்று சரணத்தை முடித்தேன். கேட்டுக் கொண்டிருந்த எல்லோரும் விழுந்து விழுந்து சிரிக்க ஆரம்பித்து விட்டனர். உடனே, தமிழ் நேசன் என்னை இடையில் நிறுத்தி, 'கதிரவன், அது பச்ச மயிருங்க, இல்லை. அது பட்சமாயிருங்க. பகிர்ந்துண்டு வாழுங்க'. அப்படின்னு வரும்.

'பட்சம்' அப்படின்னா சார்பு இல்லாம. அதாவது ஒரு தலைப்பட்சமா யாரையாவது சார்ந்து இருக்காதீங்கன்னு அர்த்தம் ', என்று என் பாட்டைத் திருத்தி விளக்கவுரை, பதவுரை எல்லாம் சொல்லித் தந்து, அதற்கு ஒரு கோனார் தமிழ் உரை விளக்கம் தந்தார்.

அது முதல், அந்தப் பாட்டை நான் பாடும் போதெல்லாம், 'பட்சமாயிருங்க... பகிர்ந்துண்டு வாழுங்க' என்று பாடும் போது, கணபதி வாத்தியார் என்னை ஒரு மாதிரியாக கேலியாகப் பார்த்து கோணலாய் ஒரு புன்சிரிப்பு சிரிப்பார்.

ஒத்திகை களை கட்டி விட்டால், பூங்காவுக்கு வரும் மொத்தக் கூட்டமும் எங்களுடன் சேர்ந்து உட்கார்ந்து விடும். அந்த இடம் கல்யாணக் கச்சேரி போல களை கட்டி விடும். கேலியும், கிண்டலும், ஏடாசியும், நக்கலும், பகடியுமாக அந்தப் பூங்காவே களை கட்டி விடும். தேநீர், நொறுக்குத்தீனி, சோடா, கலர் எல்லாம் நாங்கள் கேட்காமலே வந்து கொண்டிருக்கும். காற்றில் கலகலப்பு சேர்ந்து விடும். பாடகர்கள் துள்ளிக்கொண்டே பாடுவார்கள். கணபதி வாத்தியார் தான் பாவம். கை ஓய்ந்து விடும்.

கச்சேரிக்கு ஒத்திகையெல்லாம் பார்ப்பதற்கு, நேர அவகாசம் எதுவும் கிடையாது. மூர்த்தியும், சிவராஜனும் மோத ஆரம்பித்தால் அது முடியவே முடியாது. பாட்டுக்குப் பாட்டு கதை தான். இடையில் தபேலா சிவசங்கர் வந்து சேருவார். அவர் வரும் போது, எந்த வாத்தியத்தையும் கையில் கொண்டு வர மாட்டார். ஆனால், தபேலா சிவசங்கர் இசையில் ஒரு மன்னன். ஒத்திகையில், சரணம் முடிந்ததும், தனது இசை நிரவல் (சேலா) வருவதற்கு முன்பாக, சிகரெட்டை ஒரு இழுப்பு இழுத்து விட்டு, புகையை வெளியே விடாமல், உள்ளேயே இறுக்கி விட்டு, பிறகு தபேலாவில், தனது பிர்க்காவை உதிர்ப்பார். தாளம் பிசகாத சுருதி சுத்தம் உண்டு. தபேலாவின் வார் பிடித்து, சாதம் இல்லாத பகுதியில், ரவையை ஈரப்படுத்தி ஒட்ட வைத்து, அதைத் தட்டியதும் 'டங்ங்...டங்ங் ' என அதிரும்படி அதை ஸ்வர சுத்தமாக வைத்திருப்பார். ஒரு பாட்டின் துவக்கத்தில் வரும் தொகையறா எங்கு ஆரம்பமாகி எங்கு முடியும் எனத் துல்லியமாய் அவருக்குத் தெரியும்.

பி.ஆர்.சி. பஸ் டெப்போவுக்குப் பின்புறம் உள்ள அரச மரத்தடி பிள்ளையார் கோவில் உள்ள காம்பவுண்டில் சில சமயங்களில் தாளங்களோடு ஒத்திகை நடக்கும். அந்த இடத்தின் அமைப்பு என்னவென்றால், எவ்வளவு மோசமான சல்லடைப் பாடகனும், அங்கு உட்கார்ந்து பாடினால், அந்தக் கட்டிடத்தின் கல் காம்பவுண்டு சுவரில் பட்டு, குரலின் பிசிறுகள் நீங்கி, பாட்டு தானாகவே செப்பமாகி விடும். அந்தப் பிள்ளையார் கோவிலின் அரச மரத்தடி கல் சுவருக்கு இந்த

மகிமை இருப்பது வெகு நாட்களுக்கு எனக்குத் தெரியாது. எங்கள் பாடகர் குழுவின் காதல், கோபம், வீரம், கொள்கை முழக்கம், விரக்தி... காமம், உற்சாகம் என சகல தினுசுகளிலும் பாடிய தாளக்கட்டுப் பாடல்கள் அனைத்தையும், பின்னிரவு நேரத்தில் அகால ராத்திரி வேளைகளிலும் பொறுமையாய்க் கேட்டுக் கொண்டிருந்த பிள்ளையாருக்கு, உணர்ச்சி பாவங்களில் மாற்றம் ஏற்படாமல், அவர் ரொம்பப் பொறுமையாய் அவைகளைக் கேட்டுக் கொண்டிருந்ததே பெரிய ஆச்சரியம் தான். ரொம்ப சாந்த சொரூபி அந்தப் பிள்ளையார்.

ஒத்திகை களை கட்டியதும், கித்தார் வாசிக்கும் டேவிட் மத்தேயு தபேலா சிவசங்கரைப் பார்த்து, தன் அடித்தொண்டையில், எம்.ஆர். ராதா குரலில்,

- 'சங்கரா, கோழி புடிச்சிட்டு வாடா. சுதியே ஏறலே!' என்பார். அவருக்கு ரெண்டு இழுப்பு இழுத்தால் தான் கித்தாரில் விரல் பிடிப்பு வரும். டேவிட் மத்தேயுவின் சங்கேத மொழி சிவசங்கருக்கும் புரியும். அவர் உடனே எழுந்திருந்து, தன் சைக்கிளை எடுத்துக் கொண்டு வெளியே போவார். அடுத்த அரை மணி நேரத்தில் அவரிடம் சின்ன கசங்கிய பொட்டலம் இருக்கும். இருவரும் தூண் மறைவுக்குப் போவார்கள். அங்கே கோல்டு ஃப்ளேக் சிகரெட்டின் புகையிலையை உதிர்த்து விட்டு, அதன் காலி காகிதக்குழலில் கஞ்சாத் தூளைக் கசக்கி ஏற்றி, கித்தார் டேவிட் மத்தேயுவிடம் தருவார் சிவசங்கர்.

முதல் இரண்டு இழுப்பு இழுத்ததும், டேவிட் மேத்யூவின் கண்கள் செருகி விடும். கசங்கிய 'சிகரெட் ' இப்போது சிவசங்கருக்கு வரும். அவர் அதை வாங்கி இழுக்க ஆரம்பித்து விடுவார். கடைசி இரண்டு இழுப்பு இருக்கும் போது, அதை மீண்டும் டேவிட் மத்தேயுவிடம் தருவார். மற்ற விஷயங்களில் இந்த இருவருக்கிடையே ஒற்றுமை இருக்கிறதோ இல்லையோ, இந்தக் கஞ்சாப்புகை இழுப்பு விஷயத்தில் இருவருக்குமிடையில் சண்டை வரவே வராது.

பிள்ளையார் கோவில் வளாக ஒற்றை டியூப் லைட் தரும் வெளிச்சம், அந்த வளாகத்திடம் பாடகர் குழு மற்றும் வாத்தியக் குழு இவை யாவும் கொண்ட உறவு ஒரு விளக்கவியலா அற்புதம்.

முனிசிபாலிடியின் சிவப்பு நிற சிமெண்ட் மேடை அதற்கு நேர் எதிர்.

சிமெண்ட் மேடை ஒத்திகையில் வாத்தியங்கள் இருக்கவே இருக்காது. அதில் ஒத்திகை பார்க்கும் போது, அருகில் இருக்கும் புகை பிடிக்கும் ஆசாமிகளின் புகைத்தொல்லை இடைஞ்சலாக இருக்கும். பாடகர் யாராவது பாடிக்கொண்டிருக்கும் போதே, அருகில் யாராவது ஒருவர் புகையை விடுவார். உடனே, புகையால் பாதிக்கப்படும் கணபதி வாத்தியார், ராகத்தோடு இரண்டு தடவை ஏற்ற இறக்கமாக இறுமுவார். எல்லோரும் பாட்டோடு பாட்டாக சிரிப்பார்கள். ஒத்திகை ஆரம்பித்த கொஞ்ச நேரத்திலேயே, ரேடியோ ரூமின் பின்புறம் மறைவாகச் சென்று சிகரெட்டில் கஞ்சா ஏற்றி, புகைத்து விட்டு, எங்கள் அருகில் வந்து சிமெண்ட் மேடையில் சுருண்டு படுத்து விடுவார் சிவசங்கர். அதைப் பார்த்துக் கொண்டிருக்கும் கணபதி வாத்தியார்,

'பாருங்க கஞ்சா சாமிகள் படுத்துக் கிடக்கறதை' எனக் கேலி செய்து பேசுவார். சிவசங்கருக்கு 'ஞானி' என்று பட்டம் சூட்டியது கவிதைப்பித்தன் தான்.

- 'நல்லா வித்தை தெரிஞ்சவங்க எல்லாம் ஏதாவது ஒரு ஏடாகூடமான பழக்கவழக்கத்துக்கு அடிமையாயிடுறாங்க அதான் ஏன்னு தெரியல' என விசனப்பட்டுச் சொல்லுவார்.

கச்சேரியில், சிவசங்கர் தபேலா போடுவதே தனி அழகு. அவரது பிர்க்கா துண்டாக தனித்து நிற்கும். வார் கட்டி வைத்த வாத்தியத்திலிருந்து 'கும்…கும்… கும்… ' என்று வரும் அழுத்தம் பாட்டைத் தூக்கி நிறுத்தும். கச்சேரியில் ரொம்ப முக்கியம் டேவிட் மத்தேயுவின் கித்தார் ராஜ்ஜியம் தான். அவருக்கு கீ போர்டும் தெரியும். கித்தாரிலிருந்து வரும் வயரை இழுத்து நேராக ஆம்ப்ளி.்.பயருக்குக் கொடுத்து வைத்திருப்பார். அவரது கித்தாரின் 'டைங்… டொய்ங் ' மட்டும் தனித்து கேட்க வேண்டும் என ஆசைப்படுவார். அது பேராசை. மேடைக்கச்சேரி என்பது காய்கறி அவியல். எல்லாம் சேர்ந்த ஒரே கலவை. தனது கித்தார் மட்டுமே கச்சேரி என்று நினைத்துக் கொண்டிருப்பார் டேவிட் மத்தேயு. இதனால், தான், மேடையில் இருக்கும் போது, ஆம்ப்ளி.்.பயர் அருகே இருக்கும் சவுண்ட் சர்வீஸ்காரனைப் பார்த்துக் கண்ணசைப்பார். அவன் அதைப் புரிந்து

கொண்டு, கிதாரிலிருந்து வரும் வயர் இணைப்பைப் பார்த்து, அடையாளம் கண்டு கொண்டு, கீழே இருக்கும் ஆம்ப்ளி.்.பயரில் அதிக பட்ச சத்தம் வருமாறு ஏற்றி வைத்து விடுவான். கச்சேரியில் பாடும் பாட்டுக்காரனின் பாட்டு எதுவும் வெளியே கேட்காது. டேவிட்டின் கித்தாரிலிருந்து வரும் 'டொய்ங்… ட்ரொய்ங் ' மட்டும்தான் கேட்கும்.

கச்சேரி முடிந்த மறுநாள், முனிசிபாலிட்டி பூங்காவின் சிவப்பு மேடையில் ,முந்தின நாள் கச்சேரி குறித்த திறனாய்வு இருக்கும். தானே கச்சேரியின் மையம் என்பது டேவிட் மத்தேயு எப்போதுமே சொல்லுவது.

- 'நேத்திக்கு கச்சேரி, கிளப்பிட்டோம். சிவராஜன் பாட்டு எடுபடல. நான் தான். அஞ்சு கச்சேரி புக்காயிருக்கு. மூணு மினி வாங்கியிருக்கேன் ', என்று சுய தம்பட்டம் அடிப்பார். 'மினி' என்பது சின்னக்கச்சேரி. ஐநூறு, ஆயிரத்துக்கு எங்காவது அய்யப்ப சாமி பஜனைக் கோஷ்டிக்காகப் போய் வாசிக்கும் சின்ன நிகழ்ச்சியாக இருக்கும்.

டேவிட் மத்தேயு புக் செய்து வாங்கி வரும் நிகழ்ச்சிகளைக் கேலி செய்வது சிவராஜன் தான்.

'இந்த டேவிட் புக் பண்ணிட்டு வர்ற கச்சேரி என்ன லட்சணம்னு தெரியாதா? போயி வாசிச்சா அஞ்சு இட்டிலி, கெட்டிச் சட்டினி மட்டும் தருவான். வேணாலும் போனாப் போகுதுன்னு பீடி, தீப்பெட்டிக்கு வழி பண்ணுவான்', என்பார் சிவராஜன்.

சில சமயம், சிவராஜனை மட்டம் தட்டி டேவிட் மேத்யூ,

'சிவராஜன்… அவன் ஒரு சல்லடைப் பாடகன் ', என்று விரல்களால் உதறிக் காட்டி அவனை நிராகரிப்பார்.

சில சமயங்களில், கச்சேரி முடித்து விட்ட பிறகு, பேசிய பணம் கிடைக்காது. உடனே டேவிட் மேத்யூ கச்சேரி ஏற்பாடு செய்தவர்களிடம் போய்க் கெஞ்சுகிற தோரணையில், இரங்கி 'அய்யா, பணம் கொடுக்காட்டினாலும் பரவாயில்ல. ஏதாவது தானியம் தவசியாவது

கொடுங்க' என்று கேட்பார். அந்த ஒரு கணம் அவரைப் பார்க்க ரொம்பப் பரிதாபமாக இருக்கும்.

புதிதாக யாராவது பாட வந்தால், அவர்களைக் கொண்டு வந்து அறிமுகப்படுத்துவார் தமிழ் நேசன். 'இவரு என்னோட நண்பர். இவருக்கு நல்லா பாட்டு வரும். மேடைல ஒரு வாய்ப்பு கொடுத்துப் பாருங்க!' என்பார்.

இந்தக் கூட்டணியில் பிற்பாடு வந்து சேர்ந்து கொண்டவர் தான் மம்சாபுரம் கீபோர்டு நீலக்கண்ணன். அவர் மெட்ராசில் சில வருஷ காலம் ஒரு இசையமைப்பாளரிடம் இருந்தார். இவர் போட்டுக் கொடுத்த மெட்டுக்களை வாங்கிக் கொண்டு, இவருக்கு ஏதோ ஐநூறு, ஆயிரம் என்று கொடுத்து ஊருக்கு அனுப்பி விட்டார்கள். ஆறு மாதம் கழித்து, அவர் போட்ட மெட்டை, திரையில் முன்னணி நடிகர் பாடிக் கொண்டிருந்தார்…

… மேடையில் நான் ஒரு பின்னணிப் பாடகன். பின்னணிப் பாடகன் என்றால் மேடையில், பின் வரிசையில் உட்கார்ந்து கொண்டு, எப்போதாவது அவர்களாகவே கூப்பிட்டால் ஒண்ணோ, ரெண்டோ பாட்டுப் பாடுவேன். எனக்குச் சம்பளமாக ஒரு சூடான டீ கிடைக்கும். நாடக மேடையில் கதாநாயகனுக்குத் தானே எப்போதும் முதல் மரியாதை ?!…

எனக்குத் தொழில், மேடையில் பாட்டுப் பாடுவது கிடையாது. மனு எழுதிக் கொடுப்பது. உள்ளூர் முனிசிபாலிட்டி தொடங்கி, மாநில முதலமைச்சர் வரை கோரிக்கை மனுக்களைத் தமிழிலும், ஆங்கிலத்திலும் வடித்துக் கொண்டிருப்பது என் வேலை. வருகிற ஆட்களே என் கை வேலையைப் பார்த்து விட்டு அவர்களாகவே நான் எதிர்பார்ப்பதற்கும் மேலாகவே சட்டைப் பையிலிருந்து எடுத்துக் கொடுத்து விடுவார்கள். யாராவது கிராமத்துக்காரர்கள் பஞ்சப்பாட்டு பாடினால், நான் அவர்களிடம் எதுவும் கேட்பதில்லை. 'நீங்க ஒண்ணும் தர வேணாம். போயிட்டு வாங்க!' என்று சொல்லி அனுப்பி விடுவேன்.

மேடைக் கச்சேரி செய்வது தான் அத்திக்குளம் மூர்த்திக்குத் தொழில். அதனால் முனிசிபாலிட்டி பூங்கா ஒத்திகைகளில் அவர் கவனம் எடுத்துக் கொள்வார். எனக்கு அந்தப் பிரச்னை இல்லை.

மைக்கை எடுக்க வேண்டிய கையில், பாஸ்போர்ட்டை எடுத்துக் கொண்டு, ஒட்டகங்கள் மேயும் பேரீச்சை மரங்கள் உள்ள தேசத்திற்கு வேலை செய்யப் பறந்து விட்டேன். எடுத்துக் கொண்ட தொழிலில் மட்டுமே கவனமாயிருந்தேன். அலுவலக வேலையில் கண்ணும் கருத்துமாய் இருந்தேன், ஆறு வருஷங்களாய். எனது விசாவை நீட்டித்து, இன்னொரு ஆறு வருஷங்கள் வேலை செய்ய விருப்பமா என்று என்னிடம் கேட்டார்கள்.

'வேண்டாமப்பா.. எனக்கு என் சொந்த ஊர் போதும். சொந்த ஊருக்குப் போறேன். என்னை நல்லபடியா அனுப்பி வையுங்க!' என்றேன்.

விமான நிலையத்தில் என்னைக் கட்டித் தழுவி, கை குலுக்கி 'போய் வா. இன்னொரு தடவை இங்கு வர வாய்ப்பிருந்தால் எங்களிடமே வேலைக்கு வந்து விடு. இன்ஷா அல்லாஹ்!' என்று வாழ்த்து சொன்னார்கள்.

எமிரேட்ஸ் விமானத்தில் சென்னைக்கு வழியனுப்பி வைத்தார்கள்.

ஊரில் காலடி வைத்ததும், முனிசிபாலிட்டி பூங்கா தான் ஞாபகத்துக்கு வந்தது. குளித்து உடை மாற்றிக் கொண்டு, தேரடிக்குப் பக்கத்தில் வெங்கடேஸ்வரா தியேட்டர் போகும் வீதியில் உள்ள கணபதி வாத்தியார் வீட்டுக்குத்தான் முதன் முதலில் போனேன்.

'அவரு இங்க இல்ல. தன் பெட்டி படுக்கையோட அவர் வேலை செய்யற துலுக்கபட்டிக்கே போயிட்டாரு. இனிமே இங்க வர மாட்டாரு', என்று சொல்லி விட்டு கதவைச் சாத்திக் கொண்டார் வாத்தியாரின் தங்கை.

சைக்கிளைத் திருப்பிக் கொண்டு, செட்டியார் பலசரக்குக் கடை அருகே உள்ள சின்ன சந்தில் நுழைந்து தபேலா சிவசங்கரின் வீட்டின் முன்பு நின்றேன். கதவின் நாதாங்கியில் நவ்தால் மஞ்சள் நிறப் பூட்டு தொங்கியது.

நான் நிற்பதைப் பார்த்து விட்டு, பக்கத்து வீட்டு அம்மாள் என்னிடம் வந்தார்.

- 'அம்மா, இங்க சிவசங்கருன்னு ஒருத்தர் இருந்தாருல்ல… அவரு இங்க இல்லையா?' என்று தயங்கிக் கேட்டேன்.

  - 'ஓ…. அந்தாளா!' என்றபடி பின்னாடி திரும்பி, 'என்னாங்க, சிவசங்கரைத் தேடி, அவருக்குத் தெரிஞ்சவங்க வந்திருக்காங்க!' என்று குரல் கொடுத்தபடி என்னிடம் 'இதோ அடுப்பை விட்டுட்டு வந்துட்டேன்! ' என்றபடி வீட்டுக்குள்ளே விரைந்தார். லுங்கியை சரி செய்தபடி வந்த வீட்டுக்காரர் என்னிடம்,

'யாரு, சிவசங்கரையா தேடி வந்திருக்கீங்க? அவன் ஒரு கஞ்சா கிராக்கி. அவன் செத்துப் போயி ரெண்டு, ரெண்டரை வருஷம் ஆச்சு!' என்று சொல்லி என் காதுகளில் இடி இடித்தார் அவர்.

- 'சார்… யாரு சிவசங்கரா? எப்படி செத்து போனாரு?'

- 'அதான். தூள் தான். ரொம்ப கஞ்சா கசக்க ஆரம்பிச்சுட்டாரு. வேலைக்கும் போகல. வக்கீல் ஆபீஸ்ல குமாஸ்தா வேலை பார்த்துக்கிட்டு இருந்தாரு. அங்கயும் இருக்கல. எப்பப் பார்த்தாலும் கஞ்சா போட்டுட்டு வீட்டுக்குள்ளேயே சுருண்டு படுத்துடுவாரு. பொண்டாட்டிக்காரி சொல்லிப் பார்த்தா. அவரு கேட்கற மாதிரி இல்ல. இந்தத் தெருவுல இருக்கற எல்லார் கிட்டயும் கடன் வாங்கித் தான் அவ குடும்பம் நடத்தினா. ரெண்டு பிள்ளைங்க. அவளும் என்னதான் செய்வா, பாவம்! அவன், சிவசங்கரு ஒரு நாள் வயித்தைப் பிடிச்சுக்கிட்டு சுருண்டு விழுந்துட்டான். அவ்வளவு தான். பெறகு எழுந்திருக்கவே இல்ல. தர்மாஸ்பத்திரிக்கு நான் தான் ஆட்டோவுல வெச்சுக் கொண்டு போனேன். பெரிய டாக்டரே நாடி பிடிச்சுப் பாத்துட்டு உதட்டைப் பிதுக்கி 'இவரு அப்பவே போயிட்டாரு'ன்னு சொன்னார். பாவம், அவரு சம்சாரம் மகேஸ்வரி தான். நல்ல புண்ணியவதி. அவருக்குக் கடைசிச் சடங்கு செய்யறதுக்கும் நான் தான் பணம் கொடுத்தேன். அவர்

சம்சாரம் தன் பிள்ளைங்களைக் கூட்டிக்கிட்டு அவளோட அண்ணன் வீட்டுக்கு சேத்தூருக்குப் போயிட்டா', என்றார்.

வெளியே, வீதியில் தலையைக் குனிந்தபடி, சைக்கிளை மெதுவாக உருட்டியபடி முனிசிபாலிட்டி பூங்காவிற்குள் நுழைந்தேன்.

ரேடியோ ரூம் திறந்திருந்தது. ஏதோ 'அறிவொளி இயக்கம் ' என்று வெளியே போர்டு தொங்கிக் கொண்டிருந்தது. உள்ளே, மேஜை, நாற்காலிகளில் ஆண்கள், பெண்கள் சமமாக அமர்ந்து விவாதம் செய்து கொண்டிருந்தார்கள்.

உச்சிப்பொழுது கடந்த பின், பசி வயிற்றைக்கிள்ளியது. வெளியே வந்து போஸ்ட் ஆபீஸ் வாசலை ஒட்டியிருக்கும் ஆறுமுகம் டீக்கடையில் பெஞ்சில் உட்கார்ந்து டீ சொல்லி விட்டு, தினசரி பேப்பரை எடுத்து விரித்த போது,

'யாரு கதிரவனா? எங்க பல வருசமாவே உம்மக் காணலியே! எங்க போனீங்க?' என்ற குரல் கேட்டது.

திரும்பிப் பார்த்த போது, கவிதைப் பித்தன். காலைச் சாய்த்துச் சாய்த்து நொண்டிக் கொண்டே வந்தார்.

- 'என்ன அண்ணே! நீங்களா? என்னாச்சு? என்ன இப்படி சாய்ச்சு சாய்ச்சு நடக்கறீங்க?!'
- 'அதை என்ன சொல்ல? விதி தான். போன வருசம் ராஜபாளையம் பக்கத்துல என் குல தெய்வம் சொக்கலாம்பட்டி முருகன் கோவிலுக்குப் போயிருந்தேன். திரும்பி வர்ற போது, இராஜபாளையம் பஸ் ஸ்டாண்டுல இறங்கற போது, தவறிக் கீழே விழுந்துட்டேன். கால் எலும்பு முறிஞ்சு போச்சு. அன்னில இருந்து, இப்படித்தான். சாய்ச்சு சாய்ச்சுத்தான் நடக்க முடியுது' என்றார்.
- 'நம்ம கோஷ்டி ஆளுங்க எல்லாம் எங்க? எங்க போனாங்க?'

கவிதைப் பித்தன் மௌனமாய்த் தலையைக் குனிந்து கொண்டு, பேசாமல் கனத்த மௌனத்துடன் இருந்தார். தலை நிமிர்ந்து

என்னைப் பார்க்காமல் தன் முன்னே நீண்டு கிடந்த முனிசிபல் ரோடு தார்ச்சாலையைப் பார்த்தார்.

வெயிலின் உக்கிரம் தார்ச்சாலையின் மேற்பரப்பில் கொப்பளித்துக் கொண்டிருந்தது. சாலையில் அங்குமிங்கும் ஓரிரு வாகனங்கள் மட்டுமே போய் வந்து கொண்டிருந்தன. மேற்குத்தொடர்ச்சி மலைத்தொடரில் இருந்து வீசிய காற்றில் ஒரு பாடு வெப்பம் ஏறியிருந்தது. உடல் புழுங்கியது. கவிதைப் பித்தனின் மௌனம் என்னைப் பாரமாய்த் தாக்கியது.

- 'அண்ணே, சொல்லுங்கண்ணேன்! ஏன் பேசாம இருக்கீங்க? நம்ம ஆளுங்க எல்லாரும் எங்க போனாங்க? வாத்தியார் மூர்த்தி, டேவிட், டி.எம்.எஸ். எல்லாரும் எங்க போனாங்க? ஒருத்தரையும் காணலையே! வாத்தியார் வீட்டுக்குப் போனேன். அவரு இல்லைன்னு சொல்லிட்டு 'பட் ' ன்னு கதவைச் சாத்திக்கிட்டாங்க!'

டீக்கடை பெஞ்சில் என்னுடைய பைண்டு செய்த புத்தகம் கிடந்தது. கவிதைப் பித்தன் அதை வாஞ்சையாய்த் தடவிக் கொடுத்தார். தன் தொண்டையைக் கனைத்துக் கொண்டார்.

- 'வாத்தியார் விவகாரம் இப்படி ஆகும்னு எனக்கு முன்னமே தெரியாமப் போச்சு. உங்களுக்கே தெரியும், அவரு மாசத்துக்கு பதினைஞ்சு நாள் கச்சேரி, கச்சேரின்னு ஊர் சுத்தறவருன்னு. அவர் திருப்பூர் பக்கமா அடிக்கடி கச்சேரி பண்றதுக்கு தொடர்ந்து போய்க்கிட்டிருந்துருக்காரு. அங்க திருப்பூர்ல கச்சேரியில பாட்டுப்பாட வந்த பொண்ணு கூட பழக்கம் ஏற்பட்டிருச்சு.

அந்தப் பொண்ணுக்கு போலியோ அட்டாக்ல ஒரு காலு சூம்பிப் போயி, மேடையில சாய்ஞ்சு நின்னுக்கிட்டுத்தான் அது பாடுமாம். இவரு, நம்ம வாத்தியார் அந்தப் பொண்ணைக் கணக்குப் பண்ணிட்டாரு. அடிக்கடி திருப்பூர்ல அந்தப் பொண்ணு கூட சேர்ந்து சுத்தியிருக்காரு. ரெண்டு பேரும் அங்கயே தனியா லாட்ஜ்ல போயி வேற தங்கியிருக்காங்க. நம்ம வாத்தியார் நல்ல டிரிபிள்ஸ் வாத்தியக்காரர்னு எல்லாருக்கும் தெரியும். தொழில் வித்தை தெரிஞ்ச எல்லாருக்கும் எதாவது ஒண்ணு அப்படி இப்படின்னு இருக்கறது தான். கணபதி

வாத்தியாருக்கு வயசு அம்பத்தி ஒண்ணு. தலை பூரா நரைச்சு பாம்பே மிட்டாய் மாதிரி போயாச்சு. ஆசை மட்டும் போகல. அந்தப் பொண்ணுக்கு இருபத்து நாலு தானாம். அவ கிட்ட வாத்தியார் ரொம்ப நெருக்கமா இருந்தது, பிற்பாடு தான் எங்களுக்குத் தெரிய வந்தது. அடிக்கடி பள்ளிக்கூடத்துல சி.எல். போட்டுட்டு திருப்பூரு போயிருக்காரு. கடைசில அந்தப் பொண்ணு மூணு மாசம்னு உண்டாயிட்டா.

வாத்தியார் வீட்டுக்கு இது தெரியாது. பிறகு, அந்தத் திருப்பூர் பொண்ணு பொறுத்துப் பாத்துடட்டு, பொட்டி படுக்கையோட நேரா இவரு வேலை பார்க்கற பள்ளிக்கூடத்துக்கே வந்துட்டா. இவரு, அரண்டு போய், அந்தப் பொண்ணைத் துலுக்கப்பட்டியில ஒரு வாடகை வீட்டுல தங்க வெச்சுட்டு, இப்ப அந்தப் பொண்ணோட தான் குடித்தனம் நடத்திக்கிட்டு இருக்காரு. வாத்தியாரோட வீட்டுக்காரங்க விஷயத்தைக் கேள்விப்பட்டு, 'இனிமே அவளோடயே இருந்துக்க. இங்க வீட்டுப்பக்கம் வந்துராத' அப்படின்னு சொல்லிட்டாங்களாம். குழந்தை பிறந்து ஒரு வருசம் ஆகிப் போச்சு.

- 'பெறகு ?'
- 'பெறகு என்ன பெறகு?'
- 'நம்ம அத்திகுளம் மூர்த்தி எங்க?'
- 'அந்தாளா? அந்தக் கதையை ஏன் கேக்கறீங்க கதிரவன் ? அது பெரிய மானக்கேடு! அவ அந்தப் பொண்ணு கிருஷ்ணாபுரம்காரி இருந்தால்ல. அதான் அந்த ஜீவா. அவளைப் பார்க்கற போதெல்லாம் இவரு நம்ம மூர்த்தி அசடு வழிஞ்சுருக்காரு. வேகம் அதிகமாகி, நம்ம மூர்த்தி மேடையிலயே எல்லார் முன்னாடியும் ஜீவா கிட்ட வௌக்கெண்ணெய் மாதிரி வழிஞ்சு நின்னிருக்கான். நம்மாளுக ரொம்ப வெவரம். இதைப் புரிஞ்சுக்கிட்டானுவ.

ஒவ்வொரு கச்சேரி முடிஞ்சதும், ரெண்டு பேரும் செங்கோட்டை ரயில்ல குத்தாலம் போயிருக்காங்க. நம்மாளு ரொம்ப மஞ்சக் குளிச்சுட்டான். அந்த ஜீவா பொண்ணுக்கு ஏற்கனவே ஒரு புருசன் இருக்கான். மில் வேலைக்குப் போறான் போல. நம்ம மூர்த்தியும், ஜீவாவும் தென்காசி வழியா கேரளாவுக்குள்ள ஓடிட்டாங்க. அவ, அந்த ஜீவாவோட புருசன்காரன் போலீஸ்ல, என் பொண்டாட்டிய மூர்த்திங்கறவன் முப்பது பவுன் நகைக்காக கடத்திக்கிட்டுப் போனதா

புகார் கொடுத்துருக்கான். போலீஸ் நம்ம மூர்த்தி மேல கேஸ் எழுதி, எப்.ஐ.ஆர். போட்டுட்டு அவன் எப்படியும் வருவான்னு காத்திருக்காங்க.

தேநீர் கிளாஸ்கள் காலியாகின. கவிதைப் பித்தன் ஒரு ஃபில்டர் சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டார்.

- 'பெரிய ராமாயணமாவுல்ல இருக்கு!'
- 'கித்தார் டேவிட் என்ன ஆனார் தெரியுமா?'
- 'அந்தாளா! அவரு ஞானியாச்சே!'
- 'கஞ்சா தான் அவரை ஒரு வழி பண்ணிருச்சி. நரம்புத் தளர்ச்சி வந்து, கிட்டத்தட்ட சுய நினைவே இல்லாம கோமாங்கற நெலமைல, அவரை எடுத்துக்கிட்டுப் போயி, பாளையங்கோட்டை கிறிஸ்தவ மிஷன் ஆஸ்பத்திரில சேத்தாச்சு. ஏழு மாசமா சொரணை இல்லாமயே படுத்துக் கெடக்காரு'.
- 'அடத் துயரமே!'
- 'பின்ன என்ன கதிரவன், ஒரு மனுசனுக்கு கூறுபாடு வேணாம்! அழகான பொண்டாட்டி. ரெண்டு பசங்க. இவரு இருபத்து நாலு மணி நேரமுமா போதையிலேயா கிடக்குறது?!'
- 'சிவசங்கரோட சேர்ந்தா சிவ பூஜையா பண்ணுவாரு?!'

… இப்போது சாலையில், பின் மதிய இறங்கு வெயிலில் தூசி பறந்து கொண்டிருந்தது.

தார்ச்சாலையின் சூடு , முகத்தில் வெப்பத்தை அப்பியது. ஒன்றிரண்டு பாதசாரிகள் தவிர்த்து ஆட்களே இல்லாமல் சாலை வெறிச்சோடிக் கிடந்தது. டீக்கடைக்காரர், பால் சட்டியைச் சாம்பல் தேய்த்துக் கழுவிக் கொண்டிருந்தார். கண்ணாடி பாட்டிலைத் திறந்து, தனது இரண்டு விரல்களை உள்ளே நுழைத்த கவிதைப் பித்தன் இரண்டு கடலை மிட்டாய்களை வெளியே எடுத்து, அதை ஒவ்வொன்றாய்க் கடித்து ருசித்துச் சாப்பிடத் தொடங்கினார்.

- 'டி.எம்.எஸ்… அதான் நம்ம சிவராஜன் கதை என்னாச்சுன்னா…'

- 'வேணாம்னேன்… ஏதாவது கெட்ட சேதியா இருக்கும். சொல்லாதீங்க? நம்ம ஆளுகளுக்கு எந்தக் கெட்டதும் நடக்கக் கூடாதுன்னு ரொம்ப வருசமாவே ஆண்டாள் கிட்ட தினமும் வேண்டி, சாமி கும்பிட்டுக்கிட்டு இருக்கேன். இது பதினாறு வருசமா நான் செஞ்சுக்கிட்டு வர்றது. '
- 'கதிரவன், உங்க நல்ல மனசு எனக்குப் புரியுது. அந்த ஆண்டாளுக்குப் புரியலயே! சிவராஜன் விஷயத்துல விளையாடிட்டா. நம்ம டி.எம்.எஸ். சிவராஜனுக்கு ரொம்ப வருசமாவே கிட்னி கோளாறு இருந்துருக்கு. பாவிப்பய அதை நம்ம கிட்ட சொல்லல. வைத்தியம் பார்க்க வசதியும் இல்ல. ரெண்டு கிட்னியும் ரிப்பேராகி, திருச்சிக்கு கொண்டு போயிருக்காங்க. 'இப்படி ரொம்ப முத்திப் போன பிறகா இவரைக் கொண்டு வர்றதுன்னு திருச்சி டாக்டர் திட்டி சத்தம் போட்டிருக்காரு. '
- 'அப்புறம்! '
- 'அப்புறம் என்ன. ஆளு முடியாமப் போயி, பிறகு அங்கேயே ஆஸ்பத்திரியிலயே இறந்து போயிட்டாரு. அவருக்கு எத்தனை பிள்ளைங்க தெரியும்ல?'
- 'எத்தனைண்ணேன்? '
- 'மூணு பிள்ளைங்க. மூணும் பொண்ணுங்க. அதுல மூத்தது இப்பத்தான் சமைஞ்சு வயசுக்கு வந்துருக்கா!'
- 'ஆண்டவா! திருச்செந்தூர் முருகா!'
- இந்த மூணு பொம்பளைப் பிள்ளைகளை எப்படிக் கரையேத்தறதுன்னு சிவராஜன் பொஞ்சாதி தினசரி கலங்கிட்டிருக்கா…'
- 'முருகா…'
- 'செந்தில்நாதன் பள்ளிக்கூடத்துல ரிட்டயராகியாச்சு. அவருக்கு சக்கரைச் சத்து. கண் பார்வை சுத்தமாப் போச்சு. அவர் வேலை பார்த்த பள்ளிக்கூடத்துக்கு உதவி கேட்டு போயிருக்காரு. வாட்ச்மேன் கிட்டச் சொல்லி கேட்டோட வாசல் வெளியிலயே பேசித் திருப்பி அனுப்பிட்டாங்களாம்?

நான் கண்களை மூடிக்கொண்டேன். இமைக்குளத்தில் கண்கள் உப்பு நீரில் நீந்த ஆரம்பித்தன.

கவிதைப் பித்தன் மௌனமாக எதுவும் பேசாமல் டீக்கடையின் சுவரில் இருந்த விளம்பர வாசகத்தில் கண் பதித்து நின்றார்.

அங்கு டீக்கடையிலும் கனத்த மௌனமே நிலவியது. ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டோம்.

- 'அப்ப நான் கிளம்பறேன் கதிரவன். இப்பல்லாம் நான் இங்க வர்றதேயில்ல. அந்த சிமிண்ட் மேடைப்பக்கமே போறதில்ல. இங்க முனிசிபாலிட்டில ஆர்.ஐ. ஒருத்தரு எனக்குத் தெரிஞ்சவரு. அவரை ஒரு சோலியா பாத்துட்டுப் போக வந்தேன். வர்றேன் கதிரவன் ' என்றபடி தன் கால்களைச் சாய்த்துச் சாய்த்து நொண்டியபடியே திருப்பாற்கடல் பக்கமாய் போய், தெருவின் திருப்பத்தில் மறைந்து போனார் கவிதைப்பித்தன்.

சைக்கிளை உருட்டிக் கொண்டு, அதில் ஏறுவதற்குப் பிடிக்காமல், இழுத்து உருட்டியபடியே சாலையில் மன பாரத்துடன் நடக்கத் தொடங்கினேன்…

...இப்பவும் நான் ஸ்ரீவில்லிபுத்தூர் முனிசிபாலிட்டிக்கு ஏதாவது காரியமாகப் போகும் போது, உள்ளே படிக்கட்டுகளில் ஏறும் போது, பின்னே திரும்பி, பூங்காவையும், அந்த சிவப்பு நிற சிமெண்ட் மேடையையும் பார்ப்பதே இல்லை. அதைப் பார்த்துட்டு மனசு கெடந்து பாடுபடுறதை என்னை மாதிரி ஆளுக தாங்கிக்க முடியாது. ஆமா.

-----------------------

## 2. ஆற்றும் பெரும் பசி

என் பிரிய வாசகரே,

ஸ்ரீவில்லிபுத்தூருக்கு ஆண்டாளை தரிசிக்க வரும் போது, அந்தக் கிழக்குப் பார்த்த, நட்டு வைத்த ஈட்டிகள் கொண்ட உயர்ந்த இரும்பு கேட் வழியாய் உள்ளே நுழைந்து விட்டு, சாமி தரிசனம் முடிந்த பின், நீங்கள் வாசலில் நின்றதும், மெல்லிய தென்றல் உங்கள் முகத்தை வருடுவது எனக்குத் தெரியும். பஹோவென்று மூன்று புறமும் திறந்த வெளி கொண்ட கல் மண்டபத்தின் உள்ளே நல்ல காற்றோட்டமும், குளிர்ச்சியும் உண்டு.

அங்கு இரும்பு கேட் வாசலில் நின்று, மூங்கில் தட்டில் பூ விற்கும் கிழவிகளைத் தாண்டி, வலது பக்கம் பார்வையைச் செலுத்தினால் தெரிவது நாகேஸ்வரா பால்கோவா கடை. எந்த ஊருக்குப் போனாலும், 'உனது ஊர் என்ன?' என்ற கேள்விக்கு 'ஸ்ரீவில்லிபுத்தூர்' என்று பதில் தந்ததும், வரும் அடுத்த கேள்வி: 'அது பால்கோவாவுக்குப் ஃபேமஸ் தானே ?

எப்பொழுதும் கூட்டம் ஈக்களைப் போல் மொய்த்துக் கொண்டிருக்கும் நாகேஸ்வரா பால்கோவா கடையில் பால்கோவா, நெய் அல்வா, பூந்தி, காராச்சேவு, பக்கோடா என்று சகல பட்சணங்களும் காலையில் தட்டுத்தட்டாய் அடுக்கப்பட்டு ஒரே மணி நேரத்தில் விற்பனை செய்து காலியாக்கப்படும்.

இன்னும் நாலு அடி கடந்து சென்றால், கல் நிலைப்படியை மிதித்து மேலேற, உடனே தென்படுவது பரமன் வெத்திலை பாக்குக் கடை. அதை அடுத்து சுந்தரபாண்டி ரேடியோ ரிப்பேர் கடை. ஒரு ஆள் கூட இல்லாத ரேடியோ கடையில் ஸ்குரூ டிரைவரை வைத்துக் கொண்டு பிரித்துப் போடப்பட்ட டிவி, டேப்ரிக்கார்டர் செட்டை எப்பொழுதும் நோண்டிக் கொண்டிருக்கும் சுந்தரபாண்டி. இந்தப் பரந்த உலகமே பூகம்பத்தால் கிடுகிடுத்து நடுங்கினாலும், அப்போதும் ஸ்குரூ டிரைவர் , ஸோல்டரிங் உபகரணங்களுடன் ஒரு டேப் ரிக்கார்டரையோ, அல்லது ஒரு விசி ஆரையோ குடைந்து, குடைந்து ரிப்பேர் செய்யும் அந்த எலக்ட்ரிகல் சுந்தரபாண்டியின் கடையில் இருந்து இசை மழை, இருபத்தி நான்கு மணி நேரமும்.

சுந்தரபாண்டியின் பிரசித்தி பெற்ற கடைக்கு அடுத்த கடை தான் தேவநாதன் டிபன் ஸ்டால். ஆறுக்கு பதினைந்து என்ற அளவில் இருக்கும் பெட்டிக் கடை போன்ற காரைப்பூச்சு கடை.

ஐந்து தனிப்பலகைகளை வெளியே எடுத்து வைத்து, அந்தக் கடையை காலை ஐந்தரை மணிக்கு தேவநாதன் திறந்து வைத்து, ஒரு நாற்பது வாட்ஸ் பல்பை எரிய விட்டதும், வியாபாரம் கன ஜோராக ஆரம்பம். சாப்பிட்ட இலைகளைப் போட, வாசலில் பெரிய பிளாஸ்டிக் டிரம், பெருமாள் கோவில் வாசலில் நிற்கும் இரு துவாரபாலகர்களில் ஒருவர் மட்டும் நிற்பது போன்ற தோற்றம்.

நாற்பது வாட்ஸ் குண்டு பல்பு வெளிச்சத்தில், ஸ்டவ் அடுப்பைப் பற்ற வைத்து, அலுமினியப் பாத்திரத்தில் பாலை ஊற்றிக் காய்ச்ச ஆரம்பித்ததுமே, ஏதோ உருசிய விஞ்ஞானி பாவ்லாவ் வைத்திருந்த ஆய்வுக்கூடத்தின் ருசி கண்ட நாய் போல, வாடிக்கையாளர்கள் கடை முன்னே வந்து வாலாட்டிக் கொண்டே நிற்பார்கள்.

சிறிய கெட்டிலில், ஜெயலட்சுமி கடையின் காபித்தூள் நீரில் கொதிக்க ஆரம்பித்து, முதல் டிகாக்ஷன் இறங்கியதும், முதல் காப்பியை டபரா செட்டில் வாங்கி, சில ரிட்டயரான வயசாளிகள், அந்தக் குளிரும் காலை வேளையில் ஆவி பறக்கும் காப்பியின் சூட்டையும், சுவையையும் அவர்களது உதடுகள் வழியே சர், சர்ரென்று உறிஞ்சி, சுவை இன்பத்தில் கண்களை சொருகி மூடியபடி அந்த டிக்கிரி காப்பியின் இன்ப ருசி, இனிப்போடு இனிப்பாக நெஞ்சக் கூட்டுக்குள் இறங்குவதை உணர்ந்து, பின் தேவர்கள் அருந்திய தேவாமிர்தம் என்பது கிட்டத்தட்ட அது போல ஒன்று தானோ என்று தங்களைத் தாங்களே வினவிக் கொண்டு, இடுப்பு வேஷ்டியில் சுருட்டி, மடித்து வைத்திருக்கும் சில்லரைக் காசுகளை அவிழ்த்து எடுத்து, முதல் நாணயங்களை தேவநாதனின் சிறிய மர மேஜையின் டிராயரில் தட்டி விட்டுப் போன பின்பு தான், வியாபாரம் சூடு பிடிக்கும்.

பொல பொலவென விடியும் பொழுதில், தேவநாதன், இடுப்பில் சலவைக்குப் போட்ட வேஷ்டியும், மேல் உடம்பில் முண்டா பனியனும், தோளில் சிவப்புத் துண்டும், நெற்றியில் மூன்று வரி பட்டை விபூதியுமாக பரிசுத்தமாய் ஒளிரும் போது, ஏதோ திருக்கயிலாய பரமசிவனே வேஷ்டி, பனியனில் வந்து காப்பிக் கடை நடத்துகிறாரோ என்று ஐயம் வரும்.

கோவிலில் பணி செய்யும் சிப்பந்திகள், பரிசாரகர்கள், விஸ்வரூப தரிசனத்திற்குப் போகும் வைகானஸ பூஜை செய்யும் சோழிய

பட்டர்கள், மற்றும் நெற்றியில் நாமம் தரித்த எவருக்கும் காலையின் சுப்ரபாதம் என்பது தேவநாதனின் இண்டு இடுக்கு காப்பி கடையில் தான்.

தேவநாதனின் வீடும், கடை அருகிலே தான், அதுவும் ஒரு சிறிய காரை வீடு தான். அந்தச் சிறிய வீட்டின் முற்றத்தில் ஓயாது, ஒழியாது காய்கறி நறுக்கியும், வெங்காயம் வெட்டியும், முட்டைக் கோஸ் அரிந்தும், தோசை மாவு அரைத்தும், பூரி, சப்பாத்திக்கு மாவு தேய்த்தும், தேங்காய் துருவியும், தங்களையே துருவிக் கொண்ட செட்டியக்குடித் தெரு பணியாளர்கள். அவர்களது கைப்பக்குவத்தில் தயாரான இட்லி, பூரி, கேசரி, காரா வடை, உளுந்த வடை, வெண் பொங்கல், உருளைக்கிழங்கு வெங்காய மசாலா என்று அலுமினியப் பாத்திரங்களில் கொண்டு வரப்படும் நளபாக தின்பண்டங்கள், அங்கே, மூலையில் உள்ள கண்ணாடி ஷோகேஸில் அடுக்கப்பட்டு, நறுக்கப்பட்ட வாழை இலை வந்து சேர்ந்ததும், சேகரும், வாசனும் ஒரு சமிக்ஞை கொடுக்க, அது ரயில் புறப்படலாம் என்பதற்கு கார்டு காட்டும் பச்சைக் கொடி போன்றது.

மேலும், வாடிக்கையாளர்களாக அருகில் உள்ள சந்நிதித் தெரு பட்டர்கள், மேட்டுத்தெரு மறவர்கள், காலையில் காலேஜ் போகும் மாணவர்கள் என வருவதால், ஓயாது இயந்திரம் போல கைகள் உழைத்தால் தான், வியாபாரம் பார்க்க முடியும். கடையின் இட நெருக்கடி, குறுகிய வாசல், ஒடுக்கமான கோவில் வாசலின் சந்து. 'மாமா, நாலு இட்லி, ரெண்டு உளுந்த வடை, பார்சல் ' என்று திருப்பித் திருப்பிக் குரல் கொடுக்கும் மாட வீதி சிறுவர்கள்.

இங்கு தேவநாதனுக்குத் தேவைப்பட்டது எடுபிடி வேலை செய்ய ஏகப்பட்ட கைகள். டிபன் பார்சல் கட்ட, சாப்பிட வரும் ஆட்களைக் கவனிக்க, அருகிலிருக்கும் வீட்டிலிருந்து சரக்குகளை எடுத்து வந்து வைக்க, என்று எப்போது பார்த்தாலும் இரண்டு, மூன்று ஆட்கள் தேவைப்பட்டுக் கொண்டே இருந்தார்கள்.

கடையில் நிரந்தர வேலையாட்கள் இரண்டு பேர். ஒருவர் பார்சல் கட்ட, இன்னொருவர் வருபவர்களை கவனிக்க. காபித் தயாரிப்பு தேவநாதனுடையது. டிகாக்ஷன் கொதிக்கும் ஸ்டவ்விற்குக் கீழே சிறிய மர மேஜை. அந்த மேஜையில் ஒரு டிராயர். அந்த

டிராயரிலிருந்து தான் தனலட்சுமி எனும் திருமகள், தேவநாதனைப் பார்த்துப் புன்னகைத்துச் சிரித்தாள்.

கடையின் காரைச் சுவரோடு, ஒட்டிப் பொருத்தப்பட்ட நீண்ட மரப்பலகைகள். அதன் கீழ் சிறு ஸ்டுல்கள். சுவரில் ராமர் பட்டாபிஷேக வரைகலை ஓவியம், கண்ணாடி ஃபிரேமுக்குள் அடைபட்டுக்கிடக்கும். ஒரே நேரத்தில் நான்கு பேர் தான் உள்ளே உட்கார்ந்து சாப்பிட முடியும்.

வெளியே ரெண்டு பேர். மற்றவர்கள் அமர்ந்து, கையில் தட்டை ஏந்தியபடியே பசியாற வேண்டியது தான். ஒருவர் அசைந்தால், அடுத்தவரின் முழங்காலில்தான் இடிக்கும், ஒருவர் சாப்பிட்டு முடித்து எழுந்து நின்றால், மற்ற இருவரும் அசைந்து இடம் தந்தால் தான், அவர் வெளியேற முடியும். மூன்று பேரும் நின்று உரசிக் கொள்வதில் எழும் சரீர மின்சாரத்தில் பொறி பறக்கும். வைணவ முதல் ஆழ்வார்கள் மூவர், ஒரு இருண்ட இரவில் கன மழை பொழிந்த நேரத்தில், ஒரு கல் மண்டபத்தில் ஒதுங்கிய கதை போலத்தான்.

ஆட்கள் அமருவதற்குத் தான் நெருக்கடியே தவிர, வியாபாரத்திற்கு அல்ல. கால் கடுக்க நின்றாவது, தேவநாதனிடம் ஒரு டிபன் தட்டை வாங்கிக் கொண்டு, நின்றபடியே சாப்பிட்டு விட்டு, கை அலம்பி விட்டு, மற்ற வேலைகளைப் பார்க்கப் போவது தான் அந்த ஆண்டாள் கோவில் வட்டார மக்களுக்கு வழக்கம்.
உச்சிப்பகல் பன்னிரண்டு மணிக்கு, எலுமிச்சை சாதம், தக்காளி சாதம், தயிர் சாதம், காராவடை, தொட்டுக் கொள்ள காரமான மாங்காய் ஊறுகாய். மூணு மணிக்கு மீண்டும் டிபன். சூடான காராவடை, பஜ்ஜி, கேசரி, சட்டினி, சாம்பார், காபி என விநியோகம் ஆக, கடையில் கூட்டம் மொய்க்கும். இரவு எட்டு மணி வரை தேவநாதனை உட்கார விடுவதில்லை மக்கள் கூட்டம்.

ஜனக்கூட்டம் இப்படி முண்டியடிக்கும் ரகசியம் என்னவென்றால், அவர் நிர்ணயித்த பொருட்களின் விலை தான். இருபது ரூபாய்க்குள் டிபன் முடித்துக் கொள்ள எங்கள் ஊரில் வேறு கடை இல்லை. தேவநாதனும் சலிப்பின்றி கடை நடத்துபவர். அவரிடம் வேலைக்கு வந்தவர்களுள் ஹனுமந்தய்யா என்ற மராட்டியர் ஒருவர் தான், நீண்ட காலம் வேலை செய்தவர். அந்த ஹனுமந்தய்யா, கடையில் பணியாளாய்ச் சேர்ந்து, டிபன் பரிமாறி, பரிமாறி, கண்

பார்வையெல்லாம் முழுக்க மங்கிப் போய், ஒரு நாள் கொதிக்கின்ற சாம்பாரை எடுத்து, சாப்பிட வந்தவரின் இலையில் இட்லியின் மேல் ஊற்றுவதற்குப் பதிலாக, அவரது வலது கையில் ஊற்றித் தொலைக்க, வந்த வாடிக்கையாளர் அலற, அதைப் பார்த்த தேவநாதன், வாயில் வந்த தெலுங்கு மொழியின் கெட்ட வார்த்தைகள் அத்தனையையும் பயன்படுத்தி, ஹனுமந்தய்யாவை ஒரு முழு சகஸ்ரநாம அர்ச்சனை பண்ணி வைக்க, அதுவே ஹனுமந்தய்யா கடையில் வேலை செய்த கடைசி நாளாயிற்று.

ஹனுமந்தய்யா, தனது அழுக்கு வேஷ்டியை உதறி, மேல் கட்டு மடித்து கட்டிக் கொண்டு, ஸ்ரீவில்லிபுத்தூரின் வடக்குப் பகுதியில் இருக்கும் வாழைக்குளத்தெரு வீட்டிற்குப் போனவர் தான். அதன் பின் திரும்பி வரவேயில்லை.

கோபித்துக் கொண்டு போனவரை மறுபடியும் வேலைக்குக் கூப்பிட ஒரு பையனை அனுப்பி வைத்தார் தேவநாதன். ஆனால், ஹனுமந்தய்யாவோ, அறுபத்து ஒன்பது வயதில், தனது கண் பார்வை முழுவதுமாய் மங்கிவிட்டதென்றும், இனி மேல் தன் கண்களால், ஆண்-பெண் என்ற வேற்றுமையைக் கூட பார்த்துக் கண்டுபிடிக்க முடியாதென்றும் பதில் சேதி அனுப்பினார்.

தன்னிடம் வேலை பார்த்தவன், ஏதாவது தொழிலாளர் நல கோர்ட்டுக்குப் போய், தன் மேல் வழக்குப் போட்டால், என்ன செய்வது என்று தீவிரமாய் யோசித்த தேவநாதன், ஒரு நாள் இரவு, தானே நடையாய் நடந்து போய், ஹனுமந்தய்யாவின் வீட்டுக்குப் போய், கதவைத் தட்டி, தன் பணியாளரின் சேம நலங்கள் எல்லாம் விசாரித்து விட்டு, ' வேலை செய்ய சிரமமாய் இருந்தால், வீட்டிலேயே இருந்து கொள்ளலாம்' என்றும் சொல்லி விட்டு, மடியில் இருந்து ஒரு ஐம்பது ரூபாய் நோட்டுக்கட்டை எடுத்து கொடுத்து விட்டு அதை வைத்துக் கொண்டு, வீட்டுச் செலவுகளை சமாளித்துக் கொள்ளும்படி சொல்லி விட்டு, பிறகு திரும்பி வந்து நிம்மதிப் பெருமூச்சு விட்டார்.

காபி கிளப் ஹோட்டல் நடத்துவது என்பது ருசியாக சமைத்துப் போடுவது தான். ஒரு வழக்கமான ருசியைக் கண்டவர்கள், பிறகு அதற்கு அடிமையாகி விடுவதுண்டு. பட்டணம் பொடி போடுபவனுக்கு அன்னம், தண்ணீர் எதுவும் தேவை இல்லை. மட்டை பொடி போதும். ருசி கண்ட நாவு வேறெங்கும் போவதில்லை. தேவநாதனும் பொடி

போடுவதுண்டு. ஒரு பத்து பேருக்கு ஸ்டிராங் டிகிரி காப்பி போட்டு விட்டு, அவர்கள் முகத்தில் திருப்தி ரேகைகள் படர ஆரம்பித்ததும், உடனே ஒரு மூலையில் முகத்தைத் திருப்பிக் கொண்டு, ஒரு சிட்டிகை பொடி எடுத்து உறிஞ்சிக் கொள்வார். 'உங்கள் பாராட்டுக்களை நான் ஏற்றுக் கொண்டேன் ' என்பது போல.

வேலை செய்வதில் சுவாரசியம் ஏற்பட்டு விட்டு, ஒரு பிடிப்பு ஏற்பட்டு விட்டால், பிறகு வேறெங்கும் கவனம் சிதறாது. தரமான, சுவையான, கைப்பக்குவமான சமையல் செய்யும் ஆட்கள், நிரந்தரமான வாடகைக் கடை, சுவையை விரும்பும் வாடிக்கையாளர்கள், தொடர்ந்து நிறைந்து கொண்டிருக்கும் கல்லாப்பெட்டி என மிக சௌகரியமாய் வியாபாரம் செய்ய ஆரம்பித்ததில், காலம் என்னும் சக்கரம் உருண்டோடிப் போனது அவருக்குத் தெரியவே இல்லை.

கல்யாணமான புதிதில், பழைய காலத்து எஸ்.எஸ்.எல்.சி. படிப்புக்கூட தேராத தேவநாதன், குடும்பம் என்று அமைந்ததும், முதலில் தன் மனைவியின் பக்குவமான சமையலின் ருசி கண்டு, அதையே ஒரு முதலீடாக வைத்து, கோவில் வாசலில் ஆரம்பித்த கடை தான் அது. பல வருஷங்கள் அவரது தர்மபத்தினி சமைத்துத் தந்த இட்லி, வடை, பொங்கல், சட்டினி, சக்கரைப் பூசணி சாம்பார் ருசி தான் அந்த வட்டாரத்திலேயே அவரது கடையை உச்சத்திற்குக் கொண்டு சென்றது.

பிற்பாடு, சம்பாதிக்க ஆரம்பித்ததை தன் மனைவியின் சொல்படி கோவில் வடக்கு வாசலில் யானை மகாலில் இருந்த ஸ்டேட் பாங்க் ஆ.ஃ.ப் இந்தியாவில் சேமிக்க ஆரம்பித்தார். குடிப்பதில்லை. கூத்தியாளைப் பார்த்ததில்லை. எவ்வளவு பணம் வந்தாலும் கர்வம் கொள்வதில்லை. மிடுக்கு இல்லை. அதனால், தனலட்சுமி தேவநாதனை அரவணைத்துக் கொண்டாள்.

தினசரி மாலை தேவநாதனுக்கு வரும் வாடிக்கையாளர்களில் ஒருவர் பெத்தையா பிள்ளை. மம்சாபுரம் கிராமத்துக்காரர். அவர் சாயங்காலம் டவுனுக்கு வந்தால், தேவநாதன் கடையில் டிபன் சாப்பிடாமல் போக மாட்டார். வறட்சி காலத்தில், ஒரு தடவை அவர் மம்சாபுரத்தில் போட்டிருந்த மிளகாய் வெள்ளாமை காய்ந்து போகவே, போர்வெல் போட கடன் வாங்க வேண்டியதாயிற்று. போர்வெல் போட்ட போதும் தண்ணீர் வரவில்லை. வாங்கிய கடன் அப்படியே நின்றது.

கடன் கொடுத்த உள்ளூர் நிலக்கிழார் அடுத்த வெள்ளாமையில், வட்டியுடன், அசலைக் கேட்டு நெருக்கவே, மேலும் ஓரிருவரிடம் கடன் வாங்க வேண்டியதாயிற்று.

வெளியில் உள்ள சில்லரைக் கடன்களை எல்லாம் மொத்தமாய்த் தீர்ப்பதற்கு ஒரே ஆளிடம் கடன் வாங்கினால் என்ன என்று பார்க்க, ஒரு நாள் தேவநாதன் காபிக் கடையில் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது, பேச்சு வாக்கில் தனக்குக் கடன் வேண்டும் என்று கோரிக்கை வைக்கவே, தேவநாதனும், நம்ம பெத்தையாபிள்ளை தானே எனத் தாராள மனதுடன் ஒரு தொகையும் தந்து, 'எதுக்கும் இருக்கட்டும் ' என்று ஒரு பச்சைக் கலர் புரோநோட்டில் தொகையை மட்டும் எழுதி, ஒரு கையெழுத்தும் அவரிடம் வாங்கிக் கொண்டார்.

ஓரிரு வருடங்களில், பெத்தையா பிள்ளையின் பெண்ணைக் கல்யாணம் பண்ணிக் கொடுக்க ஒரு தொகை தேவைப்பட்டது. இப்போது ஒரு புரோநோட்டு, இரண்டானது. பெத்தையா பிள்ளையின் மகன் பாலகிருஷ்ணனை உள்ளூர் கூட்டுறவு வங்கியில் வேலைக்குச் சேர்த்து விட, உள்ளூர் புள்ளி ஒரு பெருந்தொகை கேட்க, புரோநோட்டு மூன்றாகியது.

தொடர்ந்து வெள்ளாமையும் நொடித்துப் போனதால், மனம் நொந்த பெத்தையா பிள்ளை, தன்னிடம் இருந்த நிலங்கள் எல்லாவற்றையும் தேவநாதனிடம் கிரையம் கொடுக்க முன் வந்தார்.

- 'சாமீ! நம்ம கிட்ட மம்சாபுரத்துல குட்டதட்டி கம்மாய்ப் பாசானத்துல ஒரு ஏழரை ஏக்கர் நஞ்சை நிலம் இருக்கு. நான் உங்களுக்குத் தரவேண்டிய கடன் தொகை, அதுக்கு வட்டி, இதுக்கெல்லாம் ஒரு கணக்குப் போட்டு, ஒரு தொகைக்கு நீங்களே என் நிலத்தை எடுத்துக்கங்க' என்றார் பெத்தையாபிள்ளை.
-

தேவநாதனும் கணக்குப் போட்டுப் பார்த்து விட்டு,

- 'யோவ், பெத்தையாபிள்ளை! நீர் எனக்கு மூணே முக்கால் லட்சம் ரூபா அசலும், வட்டியுமா தரணும். உம்ம பகுதியில நஞ்சை ஏக்கர் முப்பதாயிரத்துக்குப் போகுதுன்னு கேள்விப்பட்டேன். அந்தக் கணக்குல உம்ம நிலம் இரண்டே

கால் லட்சம். உறை கிணத்துக்குத் தோராயமா ஒரு அம்பதாயிரம் போட்டுக்குவோம்!.

- 'சாமீ! இந்த தென்னை மரம், தேக்கு மரம், மா, இலுமிச்சை மரமெல்லாம் அங்க இருக்கு. அதுக்கும் சேர்த்து ஒரு தொகை போட்டுக்கங்க. பம்புசெட், மோட்டார் வகையறா இதையும் சேத்துக்கங்க'.
- 'சரி மரம், மட்டை இதுக்கெல்லாம் ஒரு இருபதாயிரம் போட்டுக்குவோம். பம்புசெட், மோட்டார் இதுக்கெல்லாம் ஒரு இருபத்தஞ்சாயிரம். போட்டுக்குவோம் '……………………..

இருவரும், அந்த நிலத்திற்கு ஒரு கிரையம், பேசி, மூணு லட்சத்திற்கு தொகையை நெருக்கிக் கொண்டு வந்தனர். பெத்தையா பிள்ளையோ, தான் இன்னும் எழுபதாயிரம் மட்டும் தர வேண்டியிருக்கும் என்றும், அதைப் பிற்பாடு நிலம் கிரையம் முடித்த பிறகு தருவதாகவும் வாக்குறுதி தந்தார்.

ஒரு சுபயோக சுபதினத்தில், ஸ்ரீவில்லிபுத்தூரில் திருவேங்கட அண்ணைகள் தெருவில் இருக்கும் சப்-ரிஜிஸ்தரார் ஆபிசில் தனது மம்சாபுரம், குட்டதட்டி கண்மாய்ப் பாசனத்தில் உள்ள ஏழரை ஏக்கர் நிலம், மின் இணைப்பு, கமலைக்குழி, உத்தி வாய்க்கால், ஸ்தாவர சொத்து, மாவடை, மரவடை, திட்டு, திடல் கம்மி, சாஸ்தி எனக் கணக்கிட்டு பத்திர எழுத்தர் தாடி மாதவன் தன் மணி மணியான கருப்பு மை எழுத்துக்களில் எழுதித் தர, நிலம் கிரையம் செய்யப்பட்டு, தேவநாதனுக்கு பெயர் மாற்றம் செய்யப்பட்டது.

கிரையம் செய்த நிலத்தில் மஞ்சுளா கரும்பு சாகுபடி செய்தார் தேவநாதன். ஆறு கிலோமீட்டர் தொலைவில் இருக்கும் மம்சாபுரத்திற்கு அடிக்கடி பஸ்ஸில் போய் வெள்ளாமையைப் பாாவையிட முடியாது என்பதால் தனக்கு ஒரு அம்பாசடர் கார் ஒன்றையும் வாங்கிக் கொண்டார் தேவநாதன்.

கார் வாங்கிய நேரம் அவருக்கு ஏறுமுகம். காரில் வயக்காட்டுக்குப் போய் நிலத்தை பார்வையிட்டு விட்டு, காரிலேயே திரும்பி வந்து அவர் இறங்கிய போது, ஏதோ பழைய காலத்து ஜமீன்தார்கள் அனுபவித்த வகையிலான செழிப்பு அவரிடம் தென்பட்டிருக்க வேண்டும்.

இந்த அம்பாஸடர் கார் சவாரியைப் பார்த்து விட்டு, ' இவர் ரொம்ப வசதியான ஆள் தான் ' என முடிவு கட்டி, இவருடன் உறவு கலக்க முன்வந்தனர் சிலர்.

தேவநாதனுக்கு ரொம்ப வசதியாகப் போய்விட்டது. தன்னிடம் பெண் கேட்டு உறவு கலக்க வரும் தன் தூரத்து சொந்தங்களிடம்,

"இந்தாப்பா, நல்லாக் கேட்டுக்க. என் குடும்பத்துல நாலு பொண்ணு இருக்கு. எனக்கு தொழில் காபிக்கடை நடத்தறதுதான். நான் பெரிய படிப்பு படிக்கல. ஆனா, என் பொண்ணுங்கள நல்லாப் படிக்க வெச்சுட்டேன். இந்தக் காபிக் கடையை நடத்தி, அதுல வருமானம் பார்த்து, ஏதோ வீடு ஒண்ணு வாங்கினேன். காடு, கரை வெச்சிருக்கேன். ஒரு காரும் இருக்கு. இப்ப என் வீட்டுல பொண்ணு எடுத்து சம்பந்தம் கலக்கறதுன்னா அது படி செய். ஆனா, என் கிட்ட எதையும் எதிர்பார்க்காத. நான் பத்து ரூவாய முதல் போட்டு நூறு ரூவா லாபம் எடுக்கறவன். என் கிட்ட சம்பந்தம் பண்ணிக்கிட்டா், என் காலத்துக்குப் பின்னாடி, இருக்கற சொத்தை நீங்களே பகிர்ந்து எடுத்துக்குங்க" என்றார்.

சரி, இந்தாளு தான் பிடி கொடுக்காத சம்பந்தம் பேசினா, எதிர்த்தரப்புல இருக்கறவனும் அப்படியே பேச வேணாமா? பொண்ணு கேட்க வந்தவனும் அவன் வகை ஆட்களும் சப்பைப் பயலுக. ஒரு பயலுக்கும் ஒண்ணும் தெரியல. ஒரு கல்யாணம், காட்சின்னு வர்ற போது, பலிச்ச மட்டும், பொண்ணோட அப்பன் கிட்ட கறக்கற விதத்துல கறக்கத் தெரியல.

இந்த சொய்யான்கள், தேவநாதன் கிட்ட, பேச்சோடு பேச்சா சொன்னது என்னண்ணு தெரிஞ்சா ஒரே கூத்து தான்.

- "சார், நீங்க எவ்வளவு தூரத்துக்கு இந்த ஊர்ல மதிப்போடயும், மரியாதையோடயும் வாழ்றீங்கன்னு ஊருக்குள்ள கேட்டுப் பார்த்தோம். எல்லோரும் உங்களப் பத்தி ஒசத்தியா தான் சொல்றாங்களே தவிர, ஒருத்தர் கூட உங்களைப் பத்தி தவறா ஒண்ணும் சொல்லல. இந்த ஊர்ல உங்களுக்கு நல்ல மதிப்பு இருக்கு. அந்த ஒரே காரணத்துக்காக உங்க குடும்பத்தோட சம்பந்தம் கலக்க நாங்க சம்மதிக்கறோம். இதுக்கு நாங்க பரிபூரண மனசோடு ஒப்புக்கறோம். உங்க கிட்ட ஒரு காலணா கூட சீர், செனத்தின்னு எதுவும் எதிர்பார்க்கல. உங்க

பொண்ணை நீங்க வெறும் கட்டுன பொடவையோட அனுப்பி வைங்க. எங்க வீட்டுல வெச்சு நல்லபடியாப் பாத்துக்கறோம் "

இப்படி ஒரேயடியா மாப்பிள்ளை வீட்டுக்காரர்கள், திருவண்ணாமலை சீனிவாசப் பெருமாள் கோவிலில் புரட்டாசி சனிக்கிழமை தேதியில் தரையோடு தரையாக சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கும் பக்தர்களைப் போல நெடுஞ்சாண்கிடையாக விழுந்து விட்டார்கள்.

தேவநாதனுக்கு புல்லரிப்பு ஏற்பட்டது. கல்யாணம் பண்ணுவது இவ்வளவு லேசா என உணர்ந்தார். அவரது முதல் பெண்ணின் திருமணம் நல்லபடியாக நடக்கணுமே என்று ஆண்டாளிடம் நேர்ச்சை செய்து கொண்டார்.

நல்லபடியாகவே நடந்தது. 'மத்தளம் கொட்ட, வரிசங்கம் நின்றூத' முதல் பெண்ணின் திருமணம், தெற்கு ரத வீதியில் பாப்புச் செட்டி கல்யாண மண்டபத்தில் வைத்து நடந்தது. அதிக கூட்டத்தைக் கூட்டவில்லை. அவரது உற்றார், உறவினர் என்று ஒரு முந்நூறு பேர் வந்திருந்தார்கள்.

கல்யாணச் செலவும், மொய் வசூல் பணமும் கிட்டத்தட்ட ஒரே அளவு தொகையாக இருந்தது.

முதல் பெண் கரையேறியதும், அடுத்தடுத்து மற்ற மூன்று பெண்களும் கரையேற ஆரம்பித்தார்கள். வீடு எப்போதும் உறவினர் வருகையால் கல்யாணக் களையில் இருந்தது.

நாலாவது பெண் கல்யாணமாகி, புகுந்த வீட்டுக்குப் போனதும், தன் வீடு வெறுமையாகி இருந்தது அவருக்குத் தெரிய வந்தது. அவரது மனைவியைத் தவிர ஒருவரும் இல்லை.

வீட்டின் கொல்லைப்புறத்தில், தொடர்ந்து சமையல் செய்யும் செட்டியக்குடித் தெரு ஆட்கள் தான் நெருங்கிய பங்காளிகள் என்று ஆகிப் போனது. கொல்லைப்புறத்தில் இருந்த பெரிய அடுப்பு ஓயாமல் இருபத்து நான்கு மணி நேரமும் எரிந்து கொண்டிருந்தது. அது அணைக்கப்படவே இல்லை.

வருமானத்தை என்ன செய்வது என்று தெரியாமல், ஒரு நண்பரின் ஆலோசனையின் பேரில், சிவகாசி ரோட்டில், நெசவாளர் காலனி அருகே காலி மனைகளாக வாங்கிப் போட்டு வைத்தார். இது போக, விவசாயத்திலும் ஒரு நல்ல வருமானம் குறையாது வந்து கொண்டிருந்தது....

... ஆண்டாள் கோவில் வாசலில், தெற்கு மாட வீதியில், மூன்றாவது வீட்டில் குடியிருப்பவன் ரங்காச்சாரி என்ற ரங்காச்சு.

அப்பாவை இழந்த ரங்காச்சு, அம்மாவின் தயவில் சட்டம் படித்து, சென்னை பார் கவுன்சிலில் பதிந்து விட்டு, வீட்டு வாசலில் 'கே. ரங்காச்சாரி எம்.ஏ.,பி.எல்., சிவில் & கிரிமினல் வழக்கறிஞர் ' என்ற போர்டை மாட்டி விட்டு, வீட்டுத் திண்ணையில் தனது மூதாதையர் விட்டுப் போன ஸ்தூலமான சொத்தாகிய பழைய விக்டோரியா காலத்து மர நாற்காலியில் வெற்று மார்புடன் அமர்ந்து கொண்டு, முன்னே இருக்கும் பெரிய சைஸ் மர மேஜையில் சி.பி.சி., சி.ஆர்.பி.சி., எம்.எல்.ஜே., ஜர்னல்கள், இதர சட்ட வியாக்ஞானப் புத்தகங்கள் சகிதம் படிப்பும், கையுமாக வேறு எதிலும் கவனம் செலுத்தாமல், வக்கீல் தொழில் செய்து வந்தான்.

'வக்கீல் தொழில் செய்து வந்தான்' என்றால் அவனிடம் யாராவது கட்சிக்காரர்கள் வந்தால் தானே தொழில் செய்ய முடியும்? கேஸ் நடத்த முடியும்? தான் படித்த சட்டத்துக்கும், தற்போது நீதிமன்றங்களில் உள்ள நடைமுறைக்கும் ரொம்பப் பெரிய இடைவெளி இருப்பதை உணர்ந்தான். ஒவ்வொரு இன மக்களும், தங்கள் தங்கள் இனத்தைச் சேர்ந்த வக்கீலையே தங்கள் சொந்த வழக்குகளுக்காக வாதாட அமர்த்திக் கொள்வதைப் பார்த்தான். நீதிமன்றம் போவதே வெறுப்பாக இருந்தது. அப்படியே ஏதாவது கேஸ் நடத்த அங்கு போனாலும், அன்று வழக்கறிஞர்கள், பார் ஸ்டிரைக் என்று நீதிமன்ற வேலைகள் யாவற்றையும் நிறுத்தி வைத்தனர்.

இதையெல்லாம் பார்த்து விட்டு 'போதுமடா சாமி' என்று முடிவு கட்டி விட்டு, வீட்டிலேயே சேர், டேபிள் சகிதமாக உட்கார்ந்து படிக்க ஆரம்பித்து விட்டான். வெளியே வீட்டு வாசலில் இருந்த அவன்

போர்டைப் பார்த்து விட்டு, உள்ளே வரும் கிராமத்து சனங்கள் அவனிடம்,

- 'சாமீ! நான் பக்கத்துல இருக்கற விழுப்பனூர் கிராமத்துல இருந்து வர்றேன். நமக்குச் சொந்தமா ஒரு மூணு கொட்டை விதைப்பாடு இருக்குங்கய்யா...' என்று தொடரும் வேண்டுகோள், கடைசியில் தாசில்தாருக்கு மனு எழுதுவதில் முடியும்.

இப்படியாக வருகிற யாவரும் கிராமத்து சம்சாரிகளாகவே அமைந்து, அவர்களுக்கு மனு எழுதித் தர அவன் முன் வந்தான். அவர்களாகவே ஏதாவது தொகையை எழுத்துக்கூலியாகத் தராத பட்சத்தில், இவனே அதற்கு ஃபீஸ் இவ்வளவு என்று வசூலும் செய்து கொண்டான். அப்படி வசூல் செய்யும் தொகை அவனுக்கு ஒரு விதத்தில் ரொம்பப் பயன்பட்டது.

வீட்டில் அம்மா மட்டுமே. அப்பா இல்லை என்பதால், காலை நேரத்தில் டிபன் சாப்பிட அம்மாவை எதிர்பார்த்துக் கொண்டிருக்க மாட்டான். சட்டையை மாட்டிக் கொண்டு, பையில் பணத்தை வைத்துக் கொண்டு, வீட்டுக்கு அருகே கல்லெறி தூரத்தில் இருக்கும் தேவநாதனின் காபிக்கடைக்குத் தினமும் போய்விடுவான்.

மதியச் சாப்பாடு, கண்டிப்பாய் வீட்டில் தான். அறுசுவை உணவெல்லாம் கிடையாது. ஆனால், அம்மாவின் கைப்பக்குவத்தில், எந்தத் தளிகையும் மணக்கும்.

மதியம் சாப்பிட்டு முடித்ததும், திண்ணையில் ஒரு குட்டித் தூக்கம். மாலையில் கண் விழித்தால் மணி மூணாகியிருக்கும். மாலை வெயில் திண்ணையின் முன்புறம் சரிந்து விழுந்து கொண்டிருக்கும். முகத்தைக் கழுவி விட்டு, நேராய் தேவநாதன் கடைக்குப் போய், ஒரு பஜ்ஜி, ஒரு வடை, சட்டினி தோய்த்துச் சாப்பிட்டு விட்டு, ஒரு காபியை வயிற்றில் ஊற்றிக் கொண்டால், பிறகு இரவு எட்டு மணி வரை இந்த பெட்டிஷன் எழுதும் படலம் தொடரும்.

சில நாட்களில், அம்மா, ஆழ்வார் திருநகரி, ஸ்ரீவைகுண்டம், வானமாமலை என்று பெருமாள் சேவிக்க திவ்ய தேச யாத்திரை

போய்விட்டால், அப்போதெல்லாம் தேவநாதனே சரணாகதி. மதியச் சாப்பாடு அங்கு தான். இவனை மட்டும் ஸ்பெஷலாக கவனிக்கச் சொல்லி, தன் கடைச் சிப்பந்திகளிடம் உத்தரவிடுவார் தேவநாதன். இவன் கடையின் வெளியே தோன்றியதும் தேவநாதன்,

- 'வாப்பா ரங்காச்சு! உள்ள வா! நல்லா சூடா வடை போட்டு உனக்காகவே எடுத்து வெச்சிருக்கேன், பார்! வந்து சாப்பிட்டுப் போ' என்பார்.

இவன் புன்னகைத்துக் கொண்டே கடைக்குள் பிரவேசம் செய்வான்.

இந்த பந்தம், பசை போட்டு ஒட்டியது போல சிக்கென்று பற்றிக் கொண்டது. தன் வீட்டின் எல்லா சுப காரியங்களுக்கும் ரங்காச்சுவுக்கு பத்திரிகை வைத்து அழைப்பு தந்தார் தேவநாதன். ரங்காச்சுவும் மறக்காமல் அந்த நிகழ்ச்சிகளுக்குப் போய் வந்தான்.

ரங்காச்சுவுவைப் பற்றி ஒரு உபரி தகவல். கோர்ட்டில் வாய்தா இல்லாத நாட்களில், நேராய் பென்னிங்டன் நூலகத்துக்குப் போய் விடுவான். அது தான் இவனுக்குச் சரணாலயம். அங்கு உட்கார்ந்து கொண்டு, எல்லா இலக்கியப் புத்தகங்களையும் மணிக்கணக்கில் படிப்பான். அப்படி படித்த இலக்கியக் கிறுக்கு, அவனைச் சாமி வந்து ஆட்டிப் படைக்கவே, உடனே அவன் கவிஞனாகி விட்டான்.

ஒரு நீண்ட உரைநடைப் பத்தியை எழுதி வைத்துக் கொண்டு, அதை மடக்கி மடக்கி ஒன்றன் கீழ் ஒன்றாக எழுதி, இது தான் புதுக்கவிதை என்று பிரஸ்தாபித்தான். இந்தக் குப்பைகளையெல்லாம் சில குடும்பப் பத்திரிக்கைகள் 'புதுக்கவிஞர் ரங்காச்சாரி, ஸ்ரீவில்லிபுத்தூர்' என்று அடைமொழியிட்டு பிரசுரம் செய்தது தான் வேடிக்கை.

ஒரு தடவை, ஒரு நீண்ட கட்டுரை ஒன்றை எழுதி, ஒரு பேனாவை எடுத்துக் கொண்டு, அதில் வேண்டாத பல வார்த்தைகளையெல்லாம் அடித்து நீக்கி விட்டு, எஞ்சி நின்ற வார்த்தைகளை மட்டும் தனியாக அவன் எடுத்து எழுதி, அதற்கு 'ரணம்' என்று பெயரிட்டு ஒருவருக்குமே புரியாத தமிழில் மாதா மாதம் வெளி

வந்து கொண்டிருக்கும் இலக்கியப் பத்திரிக்கைக்கு அனுப்பி வைத்தான்.

அந்தக் கவிதை, இரண்டு மாதங்களுக்குப் பின்பு அந்தப் பத்திரிக்கையின் நடுப்பக்கத்தில் பிரசுரமானது. உடன் ஒரு இதழ் அவனது முகவரிக்கு அன்பளிப்பாக அனுப்பி வைக்கப்பட்டது. அந்தக் கவிதை வெளியான பக்கத்தை அவன் மீண்டும் மீண்டும் படித்தான். கடைசி வரியிலிருந்து துவங்கி, மேல் நோக்கிப் படித்துக் கொண்டே வந்தான். மறுபடியும் படித்தான். அவனுக்கே ஒன்றும் விளங்கவில்லை. படித்து முடித்ததும் தன் தலையைத் தானே சொறிந்து கொண்டான். அந்த இதழ் வெளிவந்த பின், அதற்கு அடுத்த மாதம், அதே இதழில் அந்தக் கவிதையைப் பற்றி 'ஜனப்பிரியன், வாணியம்பாடி' என்பவர் கருத்து விமர்சனம் செய்து எழுதியிருந்தார்.

"…நிதர்சனத்தை நாடும் வெகு நீண்ட பயணத்தில் ஓடும் யதார்த்த இலக்கியப் பொருண்மைகளை நின்று, அவதானித்து, அதன் பிரதான மய்யமான சதை அம்சங்களை கிஞ்சிற்றும் குறையாதபடி எழுத்தில் தத்ரூபமாய் படிமங்களாக்குவது என்பது ஸ்ரீவில்லிபுத்தூர் ரங்காச்சாரியின் கவிதையில் வெகு நிஜமாய்ப் பகல் வெளிச்சம் போல் பளிச்சிடுகிறது. லயனல் டிரில்லிங், டி.எஸ். இலியட், மற்றும் டைலன் தாமஸ் ஆகியோரின் வார்த்தை ரசவாதம் சார்ந்த சாகித்யப் பொழிவுகளை அடியொற்றி, அதே இலக்கியப் பாட்டையில், அவரது கவிதை, தறி கெட்ட குதிரை பிடறி சிலிர்த்து ஓடுவது போல் நம் கண்ணெதிரே நெடுந்தூரம் இலக்கில்லாமல் ஓடுகிறது…' என்று விமர்சித்திருந்தார்.

அது ஒரு பாராட்டா அல்லது வசவா என்றே விளங்கிக் கொள்ள முடியாதபடி ஒரு விமர்சனம். அன்று முதல் மெய்யான மாற்று இலக்கியப் படைப்பாளிகள் வட்டத்தில் ஸ்ரீவில்லிபுத்தூர் ரங்காச்சு பிரபலமாகி விட்டான். 'ரணம்' என்பதைப் போன்றே, 'ஒரு கழுதையின் மதிய ஆகாரம்', 'பார்த்தாலும் அவலம் தான்', 'மறுமீட்சி அடைதல்', 'இருபது ரூபாய் தான் செலவாச்சு', தொட்டுக் கொள்ள காரமான மிளகாய்ச் சட்டினி', 'சாம்பார் பக்குவம்', 'ஏகாந்த நாட்கள் ' என்றெல்லாம் தலைப்புக் கொண்ட ஏகப்பட்ட கவிதைகளைத் தொடர்ந்து எழுதி மாதாந்திர இலக்கியப் பத்திரிக்கைகளை ஒரு வழி பண்ணினான். அதற்குப் பின், பல இலக்கிய அமைப்புகளும் 'கவிஞர் ரங்காச்சு,

'கவிதையின் பரிமாணம்' என்ற தலைப்பில் உரையாற்றுவார்' என்று அச்சிட்டு நோட்டிஸ் விநியோகித்தார்கள்.

இந்த ஸ்ரீவில்லிபுத்தூர் ரங்காச்சு, பிற்பாடு, பின்-நவீனத்துவம், சர்ரியலிசம், மேஜிக்கல் ரியலிசம், நனவோடை இயக்கம், கட்டுமானக் குலைவு மற்றும் இன்ன பிற வாய்க்குள் நுழையாத, அழுக்கு ஜிப்பா, தாடிக்கார இலக்கியவாதிகள் அடிக்கடி மென்று துப்பும் பதப்பிரயோகங்களுடன் கூடிய கவிதைகளை எழுதித் தள்ளி, இலக்கிய மன்ற உறுப்பினர்களை மாதக் கூட்டங்களில் சித்திரவதை செய்ய ஆரம்பித்தான்.

ஒரு திங்கட்கிழமை, தன் நித்திய வழக்கப்படி, காலையில் திருமுக்குளத்தில் குளித்துவிட்டு, நாலு முழ வேஷ்டி உடுத்திக் கொண்டு காலை டிபன் சாப்பிட தேவநாதன் ஹோட்டலுக்குப் போன போது, கடை பூட்டிக் கிடந்தது. வேறு வழியின்றி, வடக்கு ரத வீதி சுந்தரம் கபேவுக்குப் போய்ச் சாப்பிட வேண்டியதாயிற்று. தொடர்ந்து இரண்டு, மூன்று நாட்கள் ஹோட்டல் பூட்டப்பட்டிருப்பது கண்டு, ஏதோ மனதில் சம்சயம் ஏற்பட்டது.

அந்த வாரம் இறுதியில், ஒரு மாலையில் ஸ்ரீவில்லிபுத்தூர் ரயில்வே ஸ்டேஷனுக்கு காலாற நடந்து போய் விட்டு வரலாம் என்று போனான். ரயில்வே ஸ்டேஷன் டவுனிலிருந்து மூன்று கிலோ மீட்டர் தூரம். உறவு கொண்டாடாமல் ஒதுங்கி நிற்கும் தூரத்து உறவினன் போல், அது ஊருக்கு வெளியே இருந்தது. ஜவஹர்லால் நேரு சாலையில், பருத்தி கிட்டங்கி அருகே தேவநாதன் எதிரே நடந்து வந்து கொண்டிருந்தார்.

- 'வாங்க, மாமா! என்ன இவ்வளவு தூரம்? '
- 'ஒண்ணுமில்ல ரங்காச்சு! சும்மா அப்படி காத்து வாங்கலாமேன்னு வந்தேன் ! டாக்டர், எனக்கு சக்கரை வியாதி. அதனால, தினசரி காலையிலும், சாயங்காலமும், நடக்கணும்னு சொல்லிட்டார் '.
- 'அது சரி!'
- 'அதான் இப்படி தினசரி கிளம்பி ரயில்வே ஸ்டேஷன் பக்கம் வந்துர்றேன். வயசு அறுபத்தெட்டு. என்ன செய்யறது?'

- 'உடம்பைப் பார்த்துக்கோங்க, மாமா ! நல்லா ரெஸ்ட் எடுங்க !'
- 'இனிமே ரெஸ்ட் தான் ரங்காச்சு. ஹோட்டலை வேற யாருக்காவது வித்துட்டு வீட்டோட உக்காந்துறப் போறேன். உழைச்சு சம்பாதிச்சதெல்லாம் போதும். இனிமே பணம் வேண்டாம். மன நிம்மதி போதும் '.

மனசு திக்குற்றது ரங்காச்சுவுக்கு. தேவநாதன் ஹோட்டலை விற்கப் போகிறாரா?! - அப்ப என் அன்னபூரணி ?!?

அவனைப் பொறுத்தவரை தேவநாதனின் ஹோட்டல் என்பது அன்னபூரணி தான். இருபது ரூபாய்க்கு வயிற்றுத் துருத்தியை நிரப்பும் அன்னதாதா. அந்தத் தேவநாதனே கடையை மூடிவிட்டால் என் கதி அதோ கதி தான். வடக்கு ரத வீதி சுந்தரம் கபே நல்ல ஹோட்டல்தான். ஆனால் விலை அதிகம். அங்கு சமையற்கட்டு கரிப்புகை மண்டியிருக்கும். வேலையாட்களிடம் சுத்தபத்தம் இல்லை.

தேவநாதனின் ஹோட்டல் வீட்டு வாசலுக்கு அருகே. கூப்பிடு தூரத்தில் நல்ல மனிதர்கள். சுவையான சாம்பார் வடை. சுண்டியிழுக்கும் மிளகாய்ச்சட்டினி. கெட்டியான பொரிகடலைச் சட்டினி. மெத்து மெத்தென்ற உளுந்த வடை. ஆவி பறக்கும் மல்லிகைப்பூ… தவறு இட்லி… காதலன், காதலி ஏகப் பொருத்தம் போல ஒண்ணாச் சேர்ந்த பூரியும், கிழங்கு மசாலும். அடேங்கப்பா… அந்த நளபாக சொர்க்கத்தை எப்படி இழந்து விட்டு, தெருத்தெருவா வேற ஒரு ஹோட்டலைத் தேடிப் போறது ?! கோவிலுக்குள் கர்ப்பக்ருகத்தில் இருக்கும் ஆண்டாளுக்கும், ரெங்கமன்னாருக்கும், இடைவிடாமல் இந்த ஹோட்டல் தின்பண்டங்களின் நல்ல ருசி, மணம் தானே காத்து வழியா உள்ளே அனுப்பப்படுகிறது !!! அதைத் தினசரி அனுப்பி வெக்கறது காலம் காலமா நம்ம தேவநாதன் தானே!

இப்போ அந்தாளும் இருக்கற ஒரே ஹோட்டலையும் மூடிட்டு வெளியேறிப் போயிட்டா எவன் நமக்கு வாய்க்கு ருசியா பசியாத்துவான்?!?… அதுவும் இருபது, முப்பதுக்கு…

ஒரு வருஷம் ரோடு, ரோடா நாயா அலைய வேண்டியதாப் போச்சு ரங்காச்சுவுக்கு. ஊர்ல இருக்கறதுலயே உருப்படியான ஹோட்டல் இது ஒண்ணுதான். இராஜபாளையம் பஸ் நிற்கும் பஸ் ஸ்டாப்பில் பண்டம் சுத்தமாய் இருக்கும். விலை மும்மடங்கு. ஆனால், கைப்பக்குவமாய்ச் சுத்தமான சாப்பாடு உண்டு. காலையில் அங்கு காபிக் கடை திறந்தால், ஊரில் உள்ள எல்லா முக்கிய புள்ளிகளும் அங்கு குவிந்து விடுவார்கள். கூட்டத்தில், உள்ளே வருவதும், போவதுமான ஜன நெரிசல். போதாக்குறைக்கு ஊருக்கு வரும் வெளியூர் பக்தர்களும், அங்கு குவிந்து விடுவதுண்டு. பண்டங்களுக்குத் தான் தட்டுப்பாடு உண்டு. சாப்பிட வரும் கூட்டத்துக்குக் குறைவில்லை. அங்கும் இரண்டு, மூன்று நாள் போய்ச் சாப்பிட்டுப் பார்த்தான். மனதுக்கு ஒட்டவில்லை. வெண் பொங்கலையும் சாம்பாரையும் தராசில் நிறுத்திப் பார்த்து பார்சல் கட்டிக் கொடுத்தார்கள். தேவநாதனின் உபசரிப்பின் முன்னே ராமலிங்கம் பிள்ளை விலாஸ் எம்மாத்திரம் ?! தேவநாதனின் உபசரிப்பு என்பது தேவர்களின் உபசரிப்பு அல்லவா?!...

... அன்று வானமாமலை மடத்தில் ததியாராதனை*. ததியாராதனை என்றால் சரியான தளிகை* தான். சமையல் நம்ம புளியோதரை கிச்சப்பன் தான். அடி வெளுத்து விட்டான். அந்த அவியல், பொறியல், துவையல், சிப்ஸ், உருளைக்கிழங்கு, பொடிமாஸ், சேப்பக்கிழங்கு, கறியமுது, நல்ல கத்தரிக்காய், அவரைக்காய் போட்ட மணக்கும் சாம்பார், சாற்றமுது*, திருக்கண்ணமுது*, கெட்டித்தயிர், சுசியன், வடை, திருப்பணியாரங்கள்* இத்தியாதிகள்...

முதல் திரையில்* அமர்ந்து ஒரு பிடி பிடித்து விட்டான் ரங்காச்சு. சாப்பிட்டு முடித்ததும் தூக்கம் கண்களைச் சுழற்றிக் கொண்டு வந்தது. அங்கு மடத்தின் முன்னே உள்ள திண்ணையிலேயே தோள் துண்டை விரித்துப் படுத்து விட்டான்.

மாலை ஐந்து மணி வாக்கில் விழிப்பு தட்டியது. கண்ணை கசக்கிக் கொண்டு எழுந்து பார்த்த போது, உள்ளே போன சாப்பாடு உடலில் உரமேற்றியது தெரியவந்தது. பல மாதங்களாய் இப்படித்தான். எங்கெங்கு நல்ல ஆகாரம் கிடைக்குமென அலைய ஆரம்பித்து விட்டான் ரங்காச்சு.

தேவநாதனின் டிபனைப் பற்றி திடீரென்று மின்னல் வெட்டியது போல் ஞாபகம் வந்தது. உடனே ஒரு பேனாவை எடுத்தான். ஒரு கிழிந்த காகிதத்தை எடுத்தான். அந்த வானமாமலை மடத்தின் கல் திண்ணையில், கீழ்ப்படியில் உட்கார்ந்து கொண்டு, இங்கிலீஷில் ஏதோ

எழுத அது பதினான்கு வரிகளில் முடிந்தது. தொடர் மோனையில் வரும் ஸானட் என்று ஆனது.

## தேவநாதன் க.்.ப்தேரியா

ஆண்டாள் கோவில் அருகே கடையில்,
மர ஸ்டூலில் மண்ணெண்ணெய் அடுப்பின்
பின்னே அமர்ந்த நீ,
உன் தளவாடங்களோடு எப்போதும் சுறுசுறுப்பாய்.
பள்ளி எங்கும் போனதில்லை. எழுத்தோ தெரியாது.
கண்டோர் அதிசயிக்க நளபாகத்தில் கைதேர்ந்தவனே.
தாமரை இலை தண்ணீரில் படர்தல் போலே
உன் கல் தோசைகள் விரியும் போது
கிழக்கு விரியும். இந்நகர் மலரும்.
என்ன கலை! மங்களமான கைத்திறம் உன்னிடம்
அந்த மென்மையான இட்டிலிகள் செய்ய !
அல்லி வெண்மை, மல்லிகை மென்மை,
பொருக்குத் தட்டாது.
என் சகதர்மிணியின் ஸ்தனங்களை விடவும்
அவை மென்மை !
கொதிக்கும் காபி, மொறு மொறு வடை, வெங்காய
சாம்பார்.
நாவில் நிற்கும் ருசி ; தேர்ந்த தளிகை !

-----------------

எழுதி முடித்து, மோனை சரி செய்து, வரி நீக்கம் செய்து, செதுக்கி எடுத்துக் கொண்டு, ஒரு காகிதத்தில் அழகாய் தட்டச்சு செய்து, தேவநாதனிடம் கொடுக்க, அதற்கு தேவநாதன்,

- 'ரங்காச்சு, எனக்கு இந்த இங்கிலீஷெல்லாம் வராது! பள்ளிக்கூடம் பக்கமே நான் ஒதுங்காதவன். இருந்தாலும் இதை வெச்சுக்கறேன். என்ன ஏதுன்னு யார் கிட்டயாவது அர்த்தம் கேட்டுப் பாக்கறேன்" என்றார்.

தேவநாதனின் இரண்டாம் மாப்பிள்ளை சென்னையிலிருந்து மாமனாரைப் பார்க்க வந்திருந்தான். அந்தக் காகிதம் அவனிடம் கொடுக்கப்பட்டது. படித்துப் பார்த்தான்,

- 'யோவ் மாமா! உங்களை அந்தப் பையன் இந்திரன், சந்திரன்னு வருணிச்சு எழுதியிருக்கான். உம்ம கடையில தோசை வார்த்த பிறகு தான், ஊர்ல கிழக்கு விடியுதாம். உம்ம சமையலுக்கு இப்படி ஒரு ரசிகன் இருப்பான்னு இப்ப தான் எனக்குத் தெரிய வருது. அந்தப் பய ஒரு சுழி சுழிச்சு எழுதியிருக்கான். அவனை விடாதீங்க மாமா! பிடிச்சு வெச்சுக்கங்க!' என்று ஸானட்டைக் குறித்துச் சிலாகித்துச் சொல்ல, தேவநாதனுக்கு தன் நாற்பத்தி எட்டு வருட சமையல் வாழ்வில் ஏதோ ஒரு பல்கலைக்கழக டாக்டர் பட்டம் பெற்றது போன்ற புளகாங்கிதம்…

… ஒரு நாள் காலை டிபன் சாப்பிட்டு விட்டு, கடை வாசலில் உள்ள பிளாஸ்டிக் டிரம்மில் கையைக் கழுவிக் கொண்டு, வேஷ்டியில் கை ஈரத்தைத் துடைத்துக் கொண்டு, சட்டைப் பையில் இருந்து பணத்தை எண்ணி ரங்காச்சு தேவநாதனிடம் தரும் போது, அவர்,

- 'கடையை வித்துட்டு, இழுத்து மூடிட்டு பொண்டாட்டியைக் கூட்டிண்டு, எங்காவது காசியில போய் உக்காந்துரலாம்ன்னு தான் நெனச்சுண்டிருந்தேன். நீ எழுதின நாலு வரியைப் படிச்சு, என் மாப்பிள்ளை அர்த்தம் சொன்ன போது, என் வாழ்க்கையில ஏதோ பெரிய சாதனையைச் செஞ்சு முடிச்ச மாதிரி தெரிஞ்சது. இது வெறும் சமையல் இல்ல. அதுக்கும் மேல. ரொம்பப் பெரிசுப்பா. அது என்னன்னு என்னால விளக்கிச் சொல்ல முடியல.

ஆனா, அந்த வரியைப் படிச்சுத் தெரிஞ்சுண்ட பெறகு, இனிமே இதே தொழில் தான். கடைசி மூச்சு வரை இங்கேயே இந்த ஆண்டாள் காலடியிலயே கிடந்து இதே தொழில் செஞ்சு கடைசி வரை இருக்கறதுன்னு முடிவே பண்ணிட்டேன். எங்கயோ போக இருந்தவனை இழுத்து நிறுத்தி இங்கேயே இருக்க வெச்சுட்ட நீ' என்றபடி பாத்திரத்திலிருந்து கொதிக்கும் பாலை எடுத்து ஆற்றியபடி,

- 'உனக்கு ஃபில்டர் காபி போட்டுத் தர்றேன். இருந்து சாப்பிட்டுப்போ' என்று அவனை வலுக்கட்டாயமாக உட்கார வைத்தார் தேவநாதன்.

ஆண்டாள் கோவில் வாசலில் காலை விஸ்வரூப பூஜைக்கு 'டமடம' என மேள, தாள வாத்தியங்கள் ஒலிக்க ஆரம்பித்தது, ரங்காச்சுவின் காதுகளில் அது பலமாக ஒலிக்கத் தொடங்கியது.

----------------------

**பதவுரை**

1) **ததியாராதனை** – சமையல், சாப்பாடு
2) **சாற்றமுது** – ரசம்
3) **திருக்கண்ணமுது** – பாயாசம்
4) **திருப்பணியாரங்கள்** - எண்ணையில் பொரித்த வடை முதலானவை
5) **முதல் திரையில்** - சமையலறைக்கு அருகே அமர்ந்து விசேஷமான சாப்பாடு சாப்பிடுவது
6) **தளிகை** – சமையல்

அந்த ஸானட் கவிதை….

You that seateth café by Andal temple beside
Bestride upon stool behind kerosene stove
Busy with thy wares, quick in spirit
One that dons a banian snow – white
Schooling thou hast none, lettered scarce
Yet schooled in catering makes one amaze
As dosas hot on plate spread as lotus pad
Dawn lights the day, the town unfold
What art, subtle blessed skill thou possess
To churn out those gentle idlis
White as lily, soft jasmine, no crusts
Better than my better half's bed ?
Piping coffee, crisp vada, sambar of onion
Tingling in taste, neat recipe fine.

-----------

## 3. அமுதாரக்கல்

'பார்த்து... பைய...பைய... இப்படிக் கொஞ்சம் நகர்ந்து இங்கிட்டு வாங்க... யோவ், ராசு... நீ தெக்கால கொஞ்சம் நகர்ந்துக்கய்யா. அங்க நழுவுது பார். இன்னொரு ஆளயும் சேத்துப் புடிக்கச் சொல்லு. மெதுவா... பைய... நகர்ந்து வாங்க... விடாத பிடி... பிடி... '

ஒழுங்கான ஒரு சதுரமாக இல்லாமல் கொஞ்சம் நீட்டலாக இருந்த அந்த அமுதாரக் கல்லை மூன்று பேர் தூக்கிப் பிடித்து வீட்டின் கொல்லைப்புறத்தில் நின்று கொண்டிருந்தனர். அந்தக் கருங்கல்லோ அவர்களது உடம்புகளை கீழ் நோக்கி இழுத்தது. நீயாச்சு நானாச்சு என்று நல்ல கனத்தில் அவர்களுக்கு சவால் விட்டுக் கொண்டிருந்தது. மூச்சுப் பிடிக்க முடியாத ஆட்கள் மீண்டும் அதை அங்கேயே 'தொம்' மென்று கீழே வைத்து விட்டனர்.

- 'கொஞ்சம் அணைச்சுத் தூக்கணும்பா'
- 'அய்யா, இது என்ன பொண கனம் கனக்குது ?'
- 'யோவ், பொணத்தை விட இது பத்து மடங்கு கனம்ப்பா'
- 'நல்ல முரட்டுக் கல்லா இருக்கே. தாயழி இவ அசைஞ்சு கொடுப்பேனாங்குறா?'
- 'அய்யா, இன்னொரு ஆளு வந்து சேத்துப் புடிச்சா தூக்கிரலாம்'.

வயசாளி கொல்லைப்புறத்தில் உச்சி வெய்யிலில் நின்று கொண்டிருந்தான். முகம் வேர்வையால் வாடிப் போயிருந்தது.

- 'அதான, இந்தக் கல்லைத் தூக்கறதுக்கு மூணு பேரெல்லாம் தோதுப்படாதுப்பா. உள்ள அங்க வேலையா இருக்கற கொத்தனாரைக் கூப்பிடு'.

வயசாளி முகம் திருப்பி கொல்லைப்புறத்தில் இருந்து வீட்டின் உள்ளே பார்த்தான். சூரிய வெளிச்சம் எட்டிப் பார்க்காத வீட்டின் வாசல்புறத்தில் இருந்து உள்ளே நுழைந்த வெளிச்சத்தின் பின்புலத்தில் அந்தக் கொத்தனார் கரண்டியில் சாந்து எடுத்து சுவரில் அப்பிக் கொண்டிருப்பது இங்கிருந்து தெரிந்தது.

- 'அந்தக் கொத்தனார் பேரு என்ன? கூப்பிடப்பா அந்தாளை, வந்து ஒரு பத்து நிமிசம் ஒரு கை தூக்கி விட்டுட்டுப் போகட்டும் ' என்றான் வயசாளி.

- 'அந்தாளா பெருசு? அந்தாளு கம்மாப்பட்டிக்காரன். பேரு சீனிக் கொத்தனார். பூச்சு வேலைல ரொம்ப கெட்டிக்காரன். ஆனா சரியான தண்ணி வண்டி'.

- 'கொத்தனார்ல எவன் தண்ணியடிக்காதவன் சொல்லு'.

- 'பேச்சை விடப்பா. இரு. அந்தாளைக் கூப்பிடுகிறேன் ' என்றார் வயசாளி.

- 'யோவ், சீனி! கொஞ்சம் இங்க வாய்யா! வந்து ஒரு கை பிடிய்யா!'

சுவரில் சாந்து அப்பிக் கொண்டிருந்த சீனிக் கொத்தனார், தலை திருப்பி கொல்லைப்புறமாய்ப் பார்த்தான்.

- 'யோவ், கொத்தனாரே! உன்னைத் தான், கொஞ்சம் இங்க வந்துட்டுப் போய்யா'.

சீனிக் கொத்தனார் தன் வலது கையில் இருந்த பெரிய இலைக்கரண்டியை சாந்துச் சட்டியில் நட்டுக் குத்தலாய் குத்தி நிறுத்தி விட்டு கொல்லைப்புறம் பக்கம் வந்தான்.

ஒடிந்த சரீரம். தலை கலைந்து கிடந்தது. கைலியை அலங்கோலமாய் மடித்துக் கட்டியிருந்தான்.

- 'என்னய்யா… என்ன வேணும்? '
- 'யோவ், வந்து இங்க ஒரு கை பிடிய்யா. இந்தக் கல் அசைந்து கொடுப்பேனாங்குரா'.

சீனிக் கொத்தனார், அந்தக் கல்லை நன்கு ஒரு தடவை பார்வையிட்டான்.

ஆறடி நீளம். நான்கடி அகலம். ஒரு சாண் கனம், என வீட்டுக்கொல்லைப்புறத்தில், சமுக்கமாய் அந்தக் கல், கோவில் பிள்ளையார் போல ரொம்ப வசதியாய் உட்கார்ந்திருந்தது.

கல்லின் பக்கம் இருந்த கிணறு காய்ந்து கிடந்தது. அதனை ஒட்டி இந்தக் கல்லைச்சுவருடன் கொஞ்சம் சுரண்டி, பதித்துப் பூசி வைத்திருந்தார்கள்.

காரைச் சுவர் என்பதால், கடப்பாரைக் கம்பி போட்டு நெம்பியதில், சுவரை விட்டு வெளியேறி விட்டது. இப்போது திறந்திருந்த கிணற்றின் சுவருக்கு சம்பந்தமில்லாமல் அது விலகி விட்டது.

சீனிக் கொத்தனார் மீண்டும் கவனமாக அந்தக்கல்லைப் பார்வையிட்டார்.

- 'வாய்யா, இங்க ஒரு கை குறையுது. ஒரு பிடி பிடிய்யா' என்று அவனை வயசாளி கூப்பிட்டார்.

சீனிக் கொத்தனார், தன் தலையில் கட்டியிருந்த துண்டை அவிழ்த்தான். அதை உதறி, மீண்டும் ஒரு தடவை இறுக்கமாய்க் கட்டிக் கொண்டான். இடுப்பு கைலியை வழித்து மேலே ஏற்றிக் கட்டிக் கொண்டு கல்லை நோக்கிக் குனிந்தான்.

- 'பிடிய்யா, தூக்குய்யா… விடாத… அப்படித்தான்…. தம்பி, நீ அங்க பிடி… விடாத… பிடி' என்று சீனிக் கொத்தனார் கட்டளையிட்டான்.

கொத்தனாரையும் சேர்த்து இப்போது நான்கு பேர் மூச்சு முட்டத் தூக்கியதில், அந்தக் கல் கொஞ்சம் அசைந்தது. பக்கவாட்டில் அதைத் தூக்கி அங்குலம் அங்குலமாக நகர்த்தினர்.

- 'விடாத… பிடி… தூக்கு…. நகர்த்து… இந்தா… ந்த்தா' என்று ஏக தேசமாய்க் குரல்கள். கொல்லைப்புறம் களேபரமாய் இருந்தது.

இப்போது வெளியே வடை, காப்பி வாங்கப் போயிருந்த சித்தாள், வலது கையில் தூக்குவாளியுடனும், இன்னொரு கையில் காகிதத்தில பொட்டலம் கட்டிய வடை, பஜ்ஜி ஆகியவற்றுடன் அங்கு வருகிறாள்.

அது வந்ததுமே, அந்த வடை, காப்பியின் மணம் இடத்தை நிரப்புகிறது. அந்தச் சித்தாள் சீனியாபுரத்துக்காரி. அவ மேல சீனிக் கொத்தனாருக்கு ஏற்கெனவே ஒரு கண்ணு. அவளைப் பாத்ததுமே, உடனே அவள் பக்கமாய்த் திரும்பி, அவளைப் பார்த்துக் கொண்டே அசடு வழிய ஆரம்பித்தான்.

- 'கொத்தனாரே, புடியை விடாதய்யா… ம்ம்ம்… ' என்று அதட்டினார் வயசாளி.

ஆனாள் சித்தாள் கொண்டு வந்த வடை, காப்பியின் மணம் அங்கு நான்கு திசையிலும் நிறைந்தது. அந்தத் திவ்விய மணத்தில், கருங்கல்லைப் பிடித்துக் கொண்டிருந்த மூச்சை விட்டார்கள்.

- 'அப்படிக் கொஞ்சம் கீழ வெச்சிட்டு, காப்பியக் குடிப்போம் ' என்றான் வயசாளியுடன் வந்திருந்த அவனது பேரன்.

தூக்கிய கல்லை அப்படியே சுவரில் சாய்த்து வைத்து விட்டு, 'அப்பாடா' என்று ஓய்ந்து தரையில் உட்கார்ந்தனர்.

சீனிக் கொத்தனார், தன் தலையில் இருந்த துண்டை எடுத்து, உதறி, தன் அழுக்கு முகத்தை அழுந்தித் துடைத்துக் கொண்டான்.

சித்தாள் தெரசம்மா, தரையில் குத்த வைத்துக் கொண்டு, காப்பியை நன்கு ஆவிச்சூடு பறக்க ஆற்றி, தம்ளர்களில் ஊற்றி, எல்லாருக்கும் தருகிறாள்.

பஜ்ஜியை எடுத்து அதை மடக்கிய காகிதத்தின் நடுவில் வைத்து தன் இரு கைகளால் நசுக்கி, எண்ணையைப் பிழிந்து விட்டு, ஒரு கடி கடித்த சீனிக்கொத்தனார் வயசாளியைப் பார்த்துக் கொண்டே,

- 'என்னய்யா, இது இந்தக் கல்லு இப்படிக் கனக்குது?'
- 'கொத்தனாரே, இது அமுதாரக் கல்லுய்யா'.
- 'அமுதாரக்கல்லுன்னா?….'

சில பெரிய குடித்தனக்காரங்க வீட்டுல, ஏதாவது விசேஷம்னா, நெறைய பேருக்குச் சாப்பாடு சமைச்சு போடணும்ல. அப்படி சமையல் பண்ணும் போது, வடிச்ச சோத்தை இந்த அமுதாரக்கல்லுல ஆறப்போட்டு, நல்லாக்கிளறி, கதம்பமோ, புளியோதரையோ தயார் பண்ணுவாங்க. இப்ப இருக்கற மாதிரி அண்டாவுல போட்டுக் கிளறுற வழக்கமெல்லாம் அப்பக் கிடையாது. அதே மாதிரி பந்தியில பரிமாறதுக்கு பெரிய பாத்திரமெல்லாம் கிடையாது. பலாப்பெட்டி தான்'.

- 'இந்த பனை ஓலைல செஞ்ச பெட்டி தான?'
- 'ஆமாப்பா!'
- 'ஏன்யா, கருங்கல்லுல சாப்பாட்டைப் போட்டுக் கிளறி எவனாவது திம்பானா?'
- 'அந்தக் காலத்துல அப்படித்தான்யா. இந்தக் கல்லைச் சுத்தமா தண்ணி ஊத்திக் கழுவிட்டு, ஒரு துணிய வெச்சு தொடைச்சுட்டோம்னா, அதுக்கப்புறம் இதுல என்ன வேணும்னாலும் வெச்சுச் சாப்புடலாம், தெரியுமா உனக்கு ?…'

- இந்தக் கருங்கல்லுலயா சோத்தைப் போட்டு குழைச்சுச் சாப்பிட்டிருக்காங்க?!!…'

- 'அப்படி இல்லய்யா. இந்தக் கல்லுல சோத்தைக் கொட்டிட்டா, நல்லா கிளற முடியும். அப்பத்தான் ஒரே பக்குவத்துல சாப்பாடு தயாராகும். நல்லாக் கிளறி முடிச்சப்புறம், இதுல இருந்து எடுத்து, பலாப்பெட்டில கொண்டு போய் பந்தியில பரிமாறியிருப்பாங்க. அப்ப அந்தக் காலத்துல எவ்வளவு சாப்பாடு சாப்பிட்டிருப்பாங்க பாரு?! ’என்றான் வயசாளி.

இவ்வளவு நேரமாய், நடந்து கொண்டிருந்ததை வைத்த கண் வாங்காமல் உம்மெனப் பார்த்துக் கொண்டிருந்தான் வீட்டுக்காரன் ஜெகன்னாதன்.

அந்தக் கல்லில் தான் குளியலுக்குத் தேவையான சாமான்களையெல்லாம் வைப்பது வழக்கம். துணி துவைக்கும் சோப்பு ரெண்டு, சதுர பிளாஸ்டிக் கூட்டில் வைக்கப்பட்டிருக்கும் குளியல் சோப்புக்கள், சனிக்கிழமைகளில் குளிக்க நல்லெண்ணை வைக்கப்பட்டிருக்கும் தூக்கு வாளி. சிறு கிண்ணங்கள்,

சீயக்காய்ப்பொடி டப்பா, முகச்சவரம் பண்ணிக் கொள்ளும் சாதனங்கள் இத்தியாதிகள். வீடு இடித்துக் கட்டிய போது, பெயர்த்து எடுக்கப்பட்ட ரேழியில் இருந்த கம்பிக் கதவு அந்த அமுதாரக்கல்லின் மேல் ஒருக்களித்து வைக்கப்பட்டிருந்தது.

குளிக்கும்போது கழட்டிப் போடும் துணிமணிகள் யாவுமே அந்த அமுதாரக்கல்லின் மேல் தான். இன்ன பொருள் தான் என்று இல்லாமல் வீட்டில் உள்ள எல்லா ஆகாத போகாத சாமான்களையெல்லாம் வைப்பது அந்த அமுதாரக்கல்லில் தான்.

சீனிக் கொத்தனார், ஒரு பீடியைப் பற்ற வைத்துக் கொண்டு, புகையை ஆழமாக இழுத்து, அந்தக் கல்லின் மேல் ஊதினான்.

அந்தக்கல்லின் பக்கம் போன ஜெகன்னாதன், அதன் மேல் பரப்பைத் தடவிப் பார்த்தான். ரொம்ப காலமாய் தேய்மானம் அடைந்து, அதன் மேல்புறம் மழுமழுவென வழுவழுப்பாய் இருந்தது.

வீட்டை இடித்து ரிப்பேர் செய்யும் போது, கொல்லைப்புறத்தில் கிணற்றை ஒட்டி, ஒரு தரைத்தொட்டி கட்டி விட்டால், முனிசிபல் தண்ணீரை அதில் பிடித்து வைத்துக் கொள்ளலாம் என்று கொத்தனாருக்குக்குறிப்பு சொன்னான் ஜெகன்னாதன்.

- 'சாமி! இந்தக் கருங்கல்லை எடுத்துட்டா, இந்த இடத்துல ஒரு சிமிண்டுத் தொட்டி கட்டிப்புடலாம். நீங்க பாட்டுக்கு இங்கயே தண்ணியப் புடிச்சிக் குளிச்சிக்கலாம். துணி துவைக்கலாம். நல்லா புழங்கிக்கலாம் ' என்றான் சீனிக் கொத்தனார்.

அமுதாரக் கல்லை வெளியேற்றச் சொன்னது கொத்தனார் தான். வீட்டின் நீளமோ அதிகம். அகலமோ குறுக்கம் தான். நீளம் நூத்திப் பத்து அடி. அகலம் ஆறு அடி. அந்த நீளத்தைக் கோமண வீடு என்று தான் குறிப்பிட்டு அவன் கேலி செய்வது வழக்கம்.

இந்த வீட்டை இடித்து, ரிப்பேர் செய்யும் போது, இடைஞ்சலாக இருந்த எல்லாவற்றையும் வெளியேற்றாகி விட்டது. திண்ணையில் பெயர்த்து எடுத்த தேக்கு மர உத்திரம் மூவாயிரத்துக்குப் போனது. இன்னொண்ணு இலுப்பை மர உத்தரம். அதுக்கு விலை இல்லை.

விறகுக்குத் தான் ஆகும் என்று அதற்கு முந்நூறு கொடுத்தார் மரக்கடை ஆறுமுகம்.

இந்த அமுதாரக் கல்லை வெளியேற்றி அந்த இடத்தில் தண்ணீர்த்தொட்டி கட்டுவது என்று முடிவெடுத்ததும், வேலைக்காரன் ஆதிரையான், உடனடியாகப் போய் திருமுக்குளத்தின் தென்கரையில் கல் தட்டிக் கொண்டிருக்கும் ஆசாரியைக் கூட்டிக் கொண்டு வந்தான்.

வந்தவன் ஒரு வயசாளி. கொல்லைப்புறத்தில் சூரியன் சுட்டெரித்துக் கொண்டிருந்தது. வயசாளி அந்த அமுதாரக் கல்லைத் தொட்டு, தடவி, தட்டிப் பார்த்து, அது நல்ல ஜாதிக்கல் என்று கண்டு கொண்டான்.

- 'சரி, இதை எடுத்துக்கறேன். நீ வேலையைச் சொல்லு!'

ஆதிரையான் ஐநூறில் ஆரம்பித்தான். வயசாளி அதிர்ந்தான். மறுத்தான். பேரம் பேசும் படலம் ஆரம்பித்தது.

நீயாச்சு, நானாச்சு என்று பேரம் பேசி கடைசியில் நூறு ரூபாயில் வந்து நின்றது. அச்சாரமாய் பத்து ரூபாய் வாங்கிக் கொண்ட ஆதிரையான் அதைத் தானே வைத்துக் கொண்டான்.

அந்த அமுதாரக் கல்லைப் பத்து துண்டாக வெட்டினால், பத்து அம்மிகளாவது செய்யலாமே என்று வயசாளி கணக்குப் போட்டான். அந்த அமுதாரக்கல் இருக்கும் இடம் தான் தண்ணீர்த்தொட்டி கட்ட லாயக்கான இடம் என்று சீனிக் கொத்தனார் எண்ணினார். திருமுக்குளத்துக்குப் போன வயசாளி தன் வகையறா ஆட்களோடு வந்தான். எத்தனை ஆள் வந்தாலும், அங்கு இருந்த பிரச்னை இட நெருக்கடி தான்.

நான்கு பேர் சேர்ந்து தூக்கியதும், கல் அசைந்து கொடுத்தது. கைத்தாங்கலாக அதை வெளியேற்றி விடலாம் என்றால் ஆட்கள் நகர்ந்ததும், ஒருவருக்கொருவர் சுவரில் இடித்துக் கொண்டு தான் நகர்ந்தனர்.

- 'விடாத! … பிடி… நகட்டு… ம்ம்ம்… நீ பிடி.. யோவ் கொத்தனாரே! இன்னும் வலுவாப் புடிய்யா… ம்ம்ம்… இந்தா… அவுசாரிச் சிருக்கி வருவேனாங்குறா…?

அமுதாரக்கல்லைத் தூக்கிக் கொண்டு வெளி நிலையைத் தொட்டதும், வந்திருந்த ஆட்களில் ஒரு இளவட்டம் இழுத்த மூச்சை விட்டு விட, கல்லின் ஒரு பக்கம் சரிய, எல்லோரும் 'ஏய்… ஏய்… எலே… எலே… விடாத… பிடி' என்று மறுபடியும் ஏக நேரத்தில் அதட்டல்கள், கூக்குரல்கள்.

கலவையான பேச்சுக்கள். சரமாரியான வசவுகளைத் தாங்கிக் கொள்கிறது அந்தக்கல்.

கொல்லைப்புற வாசலுக்கு வெளியேயும் போகாமல், உள்ளேயும் நிற்காமல், ரெண்டுங் கெட்டான் நிலமையில், அது இன்னொரு பின்புறக் கருங்கல் நிலைப்படியில், வழியை அடைத்துக் கொண்டு அமர்ந்திருந்தது.

- 'யோவ், இதைத் தூக்கறதுக்குள்ள மூச்சு போயிட்டு, மூச்சு வந்துருச்சு. ஏலா, இப்படி ஒரு கல்லு நான் இதுவரைக்கும் பாத்ததில்லை, கேட்டுக்க!' அங்கலாய்க்கிறான் ஒரு தாட்டியான ஆள்.

'அந்தக்கல்லை சல்லிசான விலைக்குப் பேசி வாங்கி விட்டோம். எப்படியாச்சும் பிளந்து, ஒடைச்சு, செதுக்கி, அம்மிக்கல்லு செஞ்சு, மேட்டுத்தெரு பக்கமோ, சிங்க மாடத்தெரு அல்லது ராவுத்தமார் தெரு பக்கமோ வண்டியில வெச்சுக் கொண்டு போய் வித்துற வேண்டியதுதான். ஒண்ணும் இல்லாட்டியும், திருமுக்குளத்துக் கரையில நம்ம பட்டறையிலயே போட்டு வெச்சிட்டா, போறவன் வர்றவன் விலைய விசாரிச்சு தூக்கிட்டுப் போய்டுவான் ' வயசாளி மனக்கணக்குப் போட்டான்.

இளவட்டம் ஒரு பீடியைப் பற்ற வைத்துக் கொண்டான். தலையில் இருந்த துண்டை அவிழ்த்து மறுபடி இறுக்கிக் கட்டினான். பீடியை ஒரு தடவை இழுத்து உறிஞ்சி விட்டு, அருகிலிருந்த சாக்கடையில் காறித்துப்பினான்.

- 'யோவ் பெருசு! இது நூறு வருசத்துக்கல்லுய்யா! பாரு… நல்லாப் புழங்கி, புழங்கி , பளிங்கு மாதிரி சமமா இருக்கு. இதே மாதிரி கல்லு அங்க கந்தாடைத் தெருவுல பல வீட்டுலயும் கொல்லைப்புறத்துல பாத்திருக்கேன். ஒவ்வொண்ணும் சரியான கல்லு. இடியே வுழுந்தாலும் ஒண்ணும் ஆகாது. அது பாட்டுக்கு வருசக்கணக்கா அங்கயே கிடக்கும். வீட்டை இடிச்சுக் கட்டுற போது, இதை வெளியேத்தறதுக்குள்ள ரொம்பப் பாடு தான். இப்பல்லாம் யாரு இந்த மாதிரி கல்லுல சாப்பாடு பிணைஞ்சு சாப்பிடுறாங்க? அந்தக் காலமெல்லாம் மலையேறிப் போச்சு. ஒரு காலத்துல அப்படி கல்லுல சோத்தைக் கொட்டி கலந்து தின்னவனெல்லாம் உடம்பையே கல்லு மாதிரி வெச்சிருந்தான். இப்ப இருக்கறவனெல்லாம் பூராவும் சீக்காளிப் பயலுவ. ஒரு காய்ச்சலுக்குத் தாங்க மாட்டாம பொடுக்குனு விழுந்துருவானுவ…'

பீடியை ஒரு கடைசி இழுப்பு இழுத்து விட்டு, அதைக் கீழே ஓடிக் கொண்டிருக்கும் சாக்கடையில் சுண்டி எறிந்தான். சாக்கடைக்குள் காறித் துப்பினான். துண்டை எடுத்து உதறி தலையில் இறுக்கிக் கட்டினான்.

- 'வாய்யா, வந்து புடிங்க. இனிமே இது தான் கடைசிப் புடி. தூக்கி எடுத்து துண்டாக் கொண்டு போய், தள்ளு வண்டியில ஏத்திற வேண்டியது தான் '.

  மீண்டும் நால்வரும், 'இந்தா.. பிடி இந்தா… விடாத… ம்ம்ம் ' என்று கத்திக் கொண்டே அந்தக் கல்லைப் பிடித்துத் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு வெளியே நின்ற தள்ளு வண்டியை நோக்கிப் பைய ஊர்ந்தனர்.

அந்த அமுதாரக்கல்லையே வைத்த கண்ணை எடுக்காமல் பார்த்துக் கொண்டிருந்த ஜெகன்னாதனுக்கு, செத்துப் போன நூறு வயசு முப்பாட்டனின் உடம்பை நாலு பேர் சேர்ந்து தூக்கிக் கொண்டு வெளியேற்றி, சவ ஊர்வலத்துக்கு பாடை வண்டியில் ஏற்றுவது போலத் தோன்றியது.

------------ x -----------

# 4. கதலி

ஒரு மனிதனை அவனுடைய சொந்தப் பேரைத் தவிர வேறெந்தப் பெயர் கொண்டும் அழைக்கக்கூடாது என்ற கொள்கையை உறுதியாகக் கொண்டவன் நான். பட்டப்பெயர்கள் வைப்பதை ஒரு மரபாகவே கொண்டு விட்ட தமிழ் மண்ணில், எங்கள் ஊர் அதற்கு விதிவிலக்காக நிற்பதில்லை.

பாண்டிய மன்னன் ஒருவனின் பெயர் நெடுஞ்செழியன். தமிழ் மக்கள் அவனுக்குத் தந்த பட்டம், தலையாலங்கானத்துச் செரு வென்ற பாண்டியன் நெடுஞ்செழியன். சீத்தலை என்ற ஊரைச் சேர்ந்தவர் என்பதால், சீத்தலைச் சாத்தனார் என்று ஒரு புலவருக்குப் பெயர். கம்ப நாடு என்று ஒரு சிறிய நாடு இருந்திருக்க வேண்டும். அதில் வாழ்ந்த புலவர் என்பதால் கம்ப நாடன் என்று பெயர் கொண்ட புலவர், தமிழில் இராமாயணத்தை எழுதிப், புகழ் பெற்று, பிறகு கம்ப நாடன் என்பது சுருங்கி, கம்பர் என்று அப்புலவருக்குப் பெயர் உண்டானது.

என் பெற்றோர்கள் எங்கள் ஊர் சேதிகளைப் பேசி, அலசி ஆராயும் போது, அவற்றை உற்றுக் கவனிக்க நேரிட்டதில், மனுஷர்களுக்கு பட்டப்பெயர் வைப்பதில், எங்கள் ஸ்ரீவில்லிபுத்தூர் மக்களுக்கு நிகர் அவர்களே.

கரண்ட் கோபாலன் என்று ஒருவருக்குப் பட்டப்பெயர். கரண்டுக்கும் கோகுலத்துக் கோபாலனாகிய கடவுளுக்கும் என்ன சம்பந்தம் என்று எவரும் எப்போதும் கேட்டதேயில்லை.

பிற்பாடு, விசாரித்த போது தான் தெரிந்தது. அவர், ஈ.பி. மின்சார வாரிய ஆபீசில் குமாஸ்தாவாகக் குப்பை கொட்டியவர் என்று. கடைசிக் காலத்தில் மின்சார வயரில் கையை வைத்து ஷாக் அடித்து அவர் இறந்து போகவில்லை. இயற்கையான மரணம் தான்.

இதேபோல், மோர்க்குழம்பு என்று மற்றொருவருக்குப் பெயர். அவர் ஒரு கல்யாண பந்தியில் சாப்பிட உட்கார்ந்தபோது அதில் பரிமாறப்பட்ட மோர்க்குழம்பு மிகவும் ருசியாக இருப்பதைப் பார்த்துவிட்டு, ‘மோர்க்குழம்பு வேண்டும், மோர்க்குழம்பு வேணடும்'‘

என்று மூன்று, நான்கு முறை அதிகமாய்ச் சத்தம் போட்டுக் கத்தி விட்டார். அது முதல் அவரது பெயர் மோர்க்குழம்பு என்று ஆகி விட்டது.

பிராமணர்கள் யாரும் பலசரக்குக் கடை வைத்து ஜீவனம் நடத்தியதில்லை. ஆனால், சந்தானகிருஷ்ணன் என்பவர் பலசரக்குக் கடை வைத்து தொழில் செய்தார். புளி விற்ற போது, அதில் புளி நாரைச் சேர்த்து, கலப்படம் செய்து விற்று வந்ததால், அவருக்கு புளிச்ச நார் என்று பட்டம் வழங்கப்பட்டது.

மிகவும் கருமித்தனம் செய்ததற்காக ஒரு ஆளுக்கு கஞ்சன் என்ற பட்டம். பச்சைக் கஞ்சன் என்று பல்கலைக்கழகப் பட்டம் வழங்கப்பட்டு, பின்னர் அது மருவி, பச்சைக் கஞ்சா என்று ஆனது.

வெள்ளையான தோல் கொண்ட ஆட்கள் ரங்கசாமியின் குடும்பத்தில் உண்டு, அவர் கூட்டுறவுத்துறையில் ஆடிட்டராக ஆடிட்டவர். அவரது குடும்பத்துப் பெண்கள், ஆண்கள் எல்லோருமே ஏதோ வெள்ளையடித்தது போலவே இருக்க, அவர்களுக்கு 'வெள்ளெலிக் கூட்டம் ' என்று சிறப்பு பெயர்.

நாடகசாலைத் தெரு சுந்தரராஜன், எப்போது காட்சியளித்தாலும், நெற்றி முழுக்க திருமண் எனப்படும் நாமத்தோடு தான் காட்சியளிப்பார். அவரது நெற்றி நாமம் ரொம்ப விசேஷமானது. எல்லோரும், ஒரு மெல்லிய வெள்ளிக் குச்சியால் நெற்றியில் வெளுப்பும், சிவப்புமாகக் கோடுகளை இழுத்துக் கொண்டால், இவர் மட்டும், பெரிய சுவரில் வெள்ளை அடிக்கும் தென்னை மட்டையை வைத்துக் கொண்டு, நெற்றியில் கோடுகளை இழுத்துப் போட்டுக் கொள்வார். பார்க்க ஏதோ ஆண்டாள் கோவில் வெளிப்புறச் சுவரில் இருக்கும் பிரம்மாண்டமான நெடுக்கான பட்டைக் கோடுகள் தான் அவரது அவன்ற நெற்றிக்கு இடம் பெயர்ந்து வந்து விட்டதோ என எண்ணத் தோன்றும். கடினமான, தோல் தடித்த கருப்பு முகம். எப்போதும் வெற்றிலையைக் குதப்பும் அவருக்கு ஊரில் 'பட்டை நாமம் ' என்று பெயர்.

புலவர் வைத்தமாநிதி, சக்கரக்குளத்தெருவில் குடியிருந்து வந்தார். குடியிருந்து வந்தார் என்றால், ஒரு கோவில் தான் அவரது வீடு. ஒரு கோவிலும், அதைச் சேர்ந்த மண்டபம் உள்ளடங்கிய வீடும், அவரது விலாசம் என்றாகி விட்டது. ஒரு கோவிலிலேயே குடியிருந்த அவரது குடும்பத்தைக் 'குடியிருந்த கோவில் ' என்று ஊரார் சொல்லிக்

கொண்டார்கள். அவரது குடும்பப் பட்டப் பெயர் 'மூட்டைப் பூச்சி' ஆகும். ஊரில் உள்ள பலரையும் பேசிப்பேசி மூட்டைப்பூச்சி போலவே இம்சித்த காரணத்தால் அவருக்கு அந்தப் பெயர்.

இதைப்போலவே வைணவ சம்பிரதாயத்தில், ஜீயர்களில் ஒருவரான ஆட்கொண்டவல்லி ஜீயர் வம்சத்தைச் சேர்ந்தவர்கள் எங்கள் ஊரில் குடியிருந்தார்கள். அவர்களது குடும்ப அடையாளமே 'ஆட்கொண்ட வல்லி', ஜீயர் வம்சம் என்பது. அந்தப் பெயர் சுருங்கிச்சுருங்கி பின்னர் 'ஆட்கொல்லி வகையறா' என்று சிறப்பு பெயர் வழங்கப்பட்டது. இன்று வரை அவரது குடும்பத்தில் உள்ளவர்களின் பெயர்களை யாருக்கும் தெரியாது. எல்லாமே அந்தப் பட்டப் பெயர் 'ஆட்கொல்லி வகையறா' என்பதில் அடங்கி விடும்.

ஊரின் மேற்கே இருப்பது மேற்குத் தொடர்ச்சி மலை. அதனடியில் உள்ள அநேக கண்மாய்களில் ஒன்று பொன்னாங்கண்ணி கண்மாய். அந்த மொத்தக் கண்மாயும், அதில் உள்ள மொத்த நிலங்களும் எங்கள் ஊரில் உள்ள திருமலை ஆராவமுதன் குடும்பத்திற்குச் சொந்தம். அவர் வழி வந்த கச்சி நம்பி, என் பிதாவின் வழியில் எனக்கு மாமா உறவு முறை. அவர்களது குடும்பத்தின் அடையாளப் பெயர் 'செல்லுவட்டியான் வகையறா'. செல்லுகிற வட்டி, செல்லாத வட்டி என்ற ரீதியில் வட்டிக்குப் பணம் கொடுத்து வியாபாரம் பார்க்கவில்லை அவர். 'செல்லுவட்டியான் ' என்ற பெயருக்கு பெயர்க்காரணம் இன்று வரை எனக்குத் தெரியாது!.

ஊரின் மையம் ஆண்டாள் கோவில். அதில் தினசரி நடைபெறும் கோஷ்டியில் பிரபந்தப் பாடல்களை இசையோடு அபிநயத்துப்பாடும் அரையர்கள் இரண்டு பேர். இரண்டு பேருக்கும் தனித்தனி குடும்பங்கள். அவர்களை வித்தியாசப்படுத்திக் காட்ட ஒரு அரையர் பளபளப்பான தோல் கொண்டதால், அவர் வெள்ளை அரையர். இன்னொருவர் கருத்தவர். அவருக்கு கருப்பரையர் என்று பெயர். கருப்பரையர், தமிழக அரசின் கலைமாமணி பட்டம் பெற்றவர். வளைந்த ஊன்றுகோலுடன் கோவிலுக்கு சாற்றுமுறைக்கு வரும் அவர், பஞ்சகச்சம், நெற்றியில் திருமண், தலையில் கூம்பு போன்ற வடிவில் வெண்கலக்கூர் கொண்ட வெல்வெட் துணியால் ஆன கும்மாச்சி போன்ற கிரீடத்தை அணிந்திருப்பார். எண்பது வயதிலும் வெண்கலக்குரலில் பிரபந்தப் பாடல்களை வெண்கல மணி அடித்தது

போன்ற உச்சரிப்பு சப்தத்தோடு, அவர் பாசுரங்களைப் பாடும்போது, கேட்பவர் கண்களில் கண்ணீர் சொரியும்.

' **விண்ணீல மேலாப்பு விரித்தாற்போல் மேகங்காள்....** ' என்றும்,

**'அனுசாசனம் பண்ணின பெருமாாாாாாள்ள்ள்ள்** ' என்று நீண்ட ஸ்வர ஸ்தாயியில் அவர் பாடும்போது, அவரது பட்டப்பெயரான கருப்பரையர் என்பது மறைந்து, வெறும் அரையர் என்பது மாத்திரம் நிலைத்து நிற்கும். வடக்கு மாட வீதியில், வைகுண்ட ஏகாதசி மண்டபத்தை ஒட்டிய வீட்டில் குடியிருந்த வடகலைப் பிரிவைச் சேர்ந்த 'கான்பூர் அய்யங்கார் ' என்பவரின் உண்மைப் பெயர் யாருக்குமே தெரியாது. வடநாட்டில் ஏதோ ஒரு ஊரில் ராணுவத்தில் இஞ்சினியராகப் பணி செய்து சொந்த ஊருக்குத் திரும்பி வந்து, எங்கள் ஸ்ரீவில்லிபுத்தூரிலேயே நிரந்தரமாகத் தங்கி விட்டவர் அவர். வட நாட்டில் கான்பூர் என்ற ஊரில் வேலை செய்தவர் என்பதால், அவரது பெயரையே 'கான்பூர் அய்யங்கார் ' என்று மாற்றிய பெருமக்கள் எங்கள் ஊரில் உண்டு. இது பரவாயில்லை. அவரது மூத்த பிள்ளை கிருஷ்ணன் என்ற கிச்சா, மிகவும் ஒல்லியாக இருப்பதால், அவனைக் 'குச்சி' என்று கேலி செய்வதும் உண்டு.

ராகவாச்சாரியார், ஆண்டாள் கோவிலை ஒட்டிய தெற்கு மாட வீதியில் , சொந்த வீட்டில் குடியிருந்து வந்தார். அவருக்கு அதை ஒட்டிய மேல மாட வீதியில் இரண்டு பெரிய வீடுகள் இருந்தன. ஒரு வீட்டின் நிலா முற்றத்தில் சிறிய நீச்சல் குளம் உண்டு. யஜுர் வேதமும், பிரபந்தமும் தவிர வேறெதுவும் தெரியாத ராகவாச்சாரியார், எதற்கெடுத்தாலும் யார் மீதாவது சிவில் கேஸ் போட்டுக் கொண்டே இருப்பார். ஒரு தடவை கோவிலில், சாயரட்சை வேளையில் நடந்த சாற்றுமுறைப் பாராயணத்தில் வந்திருந்தவர்களுக்கு சிறிய ஒரு ரஸ்தாளி வாழைப்பழமே கோஷ்டி விநியோகமாகத் தரப்பட்டது. அதை விநியோகித்தது சோழியரான இராமகிருஷ்ணன். அவனது போதாத காலம், அந்தக் கனிந்து போன இத்துனூண்டு ரஸ்தாளிப் பழத்தை விநியோகம் செய்த போது, முதல் மரியாதை, இரண்டாம் மரியாதை என்று வரிசையாகத் தந்து விட்டு, அதே வரிசையில் நின்றிருந்த இவருக்கு ஆறாவது ஆள் என்ற கணக்கில் அந்த ரஸ்தாளிப் பழத்தை

எடுத்துக் கையில் போட்டான். வந்ததே கோபம் பாருங்கள், ராகவாச்சாரியாருக்கு!

- 'டேய், என்ன யாருன்னு நினைச்சுண்டே? நான் விஞ்சையூர் தாத்தாச்சாரியார் வம்சம்டா. எனக்கு ஐந்தாவது மரியாதையா அந்தப் பிரசாதத்தை கொடுத்திருக்கணும் நீ. உனக்கு என்னடா தெரியும்? எனக்கு எப்படி அதை ஆறாவது மரியாதையா தருவ ?' என்று சண்டைக்குப் பாய்ந்து விட்டார். இராமகிருஷ்ணனுக்கு முதுகில் ஓங்கி அறை விழுந்தது. அவன் அதிர்ந்து போய் ஆண்டாள் எண்ணைக்காப்பு மண்டபத்தின் கருப்புத்தூணுக்குக் கீழே, தலையில் கையை வைத்துக் கொண்டு, இடிந்து போய் உட்கார்ந்து விட்டான். மறுநாளே, ராகாவாச்சாரியார், கச்சேரித் தெருவில் உள்ள ஒரு நல்ல வக்கீலைப் பிடித்து கோவில் நிர்வாகத்தின் மேலே முனிசீப் கோர்ட்டில் சிவில் கேஸ் போட்டார். அந்தக் கேஸை நடத்துவதற்குப் பணம் தேவைப்பட்டது. மேல மாட வீதியில் உள்ள நீச்சல் குளம் உள்ள தனது வீட்டை விற்று அந்தக் கேஸை நடத்தினார். வியாஜ்யம் முடிந்தது. கோவிலில் பிரசாதம், மற்றும் கோஷ்டி மரியாதை பெறுவதில் ஐந்தாவது இடம் ராகவாச்சாரியாருக்குத் தான் என்று தீர்ப்பு வந்தது. மேல மாட வீதியில் இருந்த அவரது வீடு போயே போய் விட்டது. போனது வீடு. கிடைத்தது கோவில் பிரசாதம். அது முதல் ,ராகவாச்சாரியாருக்கு, சுட்டி ராகவாச்சாரியார் என்ற பட்டப்பெயர் வந்தது. அவ்வளவு சுட்டித்தனங்கள் செய்வாராம் அவர். மற்றொருவருக்கு 'மோளம்' என்று பெயர். இது 'மேளம்' என்ற தவில் வாத்தியத்தோடு தொடர்புடையது.

அருப்புக்கோட்டை என்ற ஊருக்கு அருகே நரிக்குடி என்ற ஊர் உண்டு. இங்கு வாழ்ந்த என் தாயாதிகள், சாம்பார் சாதப் பிரியர்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். சாப்பிடும்போது , இலையில் சாதத்தைக் குவித்து விட்டு, அதன் நடுவில் ஒரு குளமோ, கண்மாயோ வெட்டி, கத்தரிக்காய் சாம்பாரை ஊற்றி, கவளம் கவளமாக உருட்டி விழுங்குவார்கள் என்பதால் 'நரிக்குடியூரான் குழம்புக்கு குழித்துக் கொண்டது போல' என்று எங்கள் ஊரில் ஒரு சொலவடை உண்டு.

நொண்டி, நொண்டி நடந்ததால் ஒருவருக்கு நொண்டி நாராயணன் என்று பெயர். தலையில் தேமல் ஏற்பட்டு, கபாலத்தின் மேல் உள்ள தோல் வெளுத்ததால் ஒருவருக்கு 'வெள்ளை மண்டை' என்று பெயர். ஒருவரின் திருமலை என்ற சொந்தப் பெயரையே மறந்து, அவர் வகித்த சப்-கலெக்டர் பதவி மட்டுமே ஊரார் மனதில் நின்றது. அதுவே அவரது பெயரானது.

கோவிலில் கைங்கரியம் செய்யும் சோழியரான இராமகிருஷ்ணனுக்கு பெரிய உடம்பு. பெரிய தொடை, பெரிய கால்கள். பெரிய தலை. பெரிய அகன்ற முறம் போன்ற கைகள். காலையில் பெருமாளின் விஸ்வரூப தரிசனத்திற்கு பிரசாதம் விநியோகிக்க, ஒரு குண்டான் நிறைய புளியோதரையை எடுத்துக் கொண்டு வருவார். வெண்கலக் குண்டான் பாத்திரத்தின் கனமோ அல்லது அதிலுள்ள புளியோதரையின் கனமோ எதுவென்று சொல்லவியலாது. அதனால், தன் கையில் உள்ள கனத்தைக் குறைப்பதற்கு, பாராயண கோஷ்டியில் வரிசையில் முதலில் நிற்கும் அரையர், வேதபிரான் பட்டர், முதலியாண்டான் என்ற முதல் மரியாதை பெறுபவர்களுக்கு அந்தப் புளியோதரையை தன் பெரிய முறக்கையால் அள்ளி எடுத்து, விரைவாகக் கொடுத்து விடுவார். கோஷ்டியில் கடைசியாக நிற்பவருக்கு காலியாக உள்ள குண்டானைக் கவிழ்த்து, அதன் உட்புறத்தைக் காட்டிவிட்டு, கர்ப்பக்கிருகத்துக்குள்ளே போய் விடுவார், கருப்பு பட்டை பிரேம் போட்ட கண்ணாடி அணிந்த இராமகிருஷ்ணன். அதனால், இருப்பதை எல்லாம் விரைவாகக் கொடுப்பதற்கு, 'இராமகிருஷ்ணன் கோஷ்டியில் புளியோதரை விநியோகம் செய்த கதையாக' என்று எங்கள் ஊரில் பலரும் பேசிக் கொள்வார்கள்.

புளியோதரை என்றதும், எனக்கு முதலில் நினைவுக்கு வருவது ஆண்டாள் கோவில் அல்ல. கோபுரத்தெருவில் இருக்கும் புளியோதரைக் கண்ணனைத்தான். கோபுரத் தெருவிற்குப் போய், 'கண்ணன் வீடு எங்கே?' என்று கேட்டால் யாருக்கும் தெரியாது. 'புளியோதரைக் கண்ணன்' வீடு எங்கே என்று கேட்டால் உடனே கை காட்டி விடுவார்கள். அந்த அளவிற்குத் தன் பெயரோடு இணைந்த அந்த பட்டத்தைப் பெற்றவர் அவர்.

அவர் புளியோதரை செய்து, அதைச் சப்புக்கொட்டி, ருசித்துச் சாப்பிட்டவர்கள் அவருக்கு தாசர்களாகவே மாறி விட்டனர். சரியான

பக்குவத்தில் அரிசியை உலையில் கொதிக்க வைத்து, இறக்கி, பின்னர் அதைச் சூடான புளிக்காய்ச்சல் கலவையோடு பக்குவமாகக் கலக்கி, கிளறி, சுடச்சுட அதைப் பந்தி விநியோகம் செய்தாரென்றால், அதன் மணம் ஆண்டாள் கோவிலின் நான்கு மாட வீதிகளிலும் காற்றில் நிறைந்து நிற்கும். துவக்கக் காலத்தில், இரண்டு படி அரிசிக்கு கால் படி பசும் நெய் என்ற கணக்கில் நெய்யை வாங்கிக் கொண்டு, நெய்யிலேயே புளியோதரை செய்து, அதன் மணம், சமையல் செய்த பாத்திரத்தை விட்டு ஒரு வாரத்திற்கு அகலாமல் பார்த்துக் கொண்டவர் அவர். பிற்பாடு, நெய்க்கும், புளியோதரைக்கும் என்ன சம்பந்தம் என்று எண்ணி, நல்ல நெருங்கிய தாம்பத்யம் கண்ட தம்பதி சமேதராய் இருந்த நெய்யையும், புளியோதரையையும் பிரித்து அவைகளை விவாகரத்து செய்து, அவற்றுக்கிடையே ஒட்டோ, உறவோ இல்லாமல் பார்த்துக் கொண்டார். புளியோதரை செய்வதற்கு மளிகைக் கடை சிட்டைப் பட்டியலில் காணப்படும் நெய், அந்தப் பட்டியலில் மாத்திரமே நிற்கும். புளியோதரையில் அது மருந்தளவுக்குக் கூட நிற்காது.

கடலை எண்ணை என்னும் ஒரு உன்னதமான திரவ வஸ்துவைக் கண்டுபிடித்தவனை கண்ணன் மனதாரப் பாராட்டினார். நெய்யில் செய்த புளியோதரை, கடலை எண்ணைப் புளியோதரை என்று ஆனது. புளியோதரை இருந்த வெண்கலக் குண்டான் சூரிய வெளிச்சத்தில் பளீரென பளபளத்தது. ஆனால், அதே நெய்யின் வாசம் போன்றே கடலை எண்ணையால் சமைத்த புளியோதரை வாசத்தை மாட வீதிகளில் 'வீதி மணக்க சமைப்போம்' என்று நளபாகச் சமையல் பக்குவத்தில் கொடி கட்டிப் பறந்தவர் எங்கள் ஊர் புளியோதரைக் கண்ணன். மளிகைச் சாமான் லிஸ்டில் இருந்த நெய், மீண்டும் அது வாங்கப்பட்ட மளிகைக் கடையிலேயே அடைக்கலமாகும் ‘மறு சுழற்சி சித்தாந்தத்தை’ முழுமையாய் நம்பியவர் அவர். எங்கள் வட்டாரம் முழுக்க அவரது சமையல் பக்குவம் பிரசித்தம். அவரது பிள்ளை பிச்சுமணியும் சமையல் சக்கரவர்த்தியே.

சமையல் என்று சொன்னதும் கோபுரத்தெருவில் இருந்த இன்னொருவர் பெயரும் ஞாபகத்துக்கு வருகிறது. அவர் தீவெட்டி நாராயணன். அவர், சட்டை வேஷ்டி அணிந்து யாருமே பார்த்ததில்லை. குற்றாலத்தில் விற்கும் சிவப்பு நிற அருவித்துண்டை இடுப்பில் கட்டிக் கொண்டு எண்ணை வடியும் உடம்போடு கோவிலுக்கும், வீட்டுக்குமாக நடந்து கொண்டே இருப்பார். வீட்டில் தனியாக சமையல் செய்வதே

இல்லை. பணத்தை மிச்சம் பிடித்தவர், அதை வைத்துக் கொண்டு, தன் ஒரே பெண்ணை நாடக சாலைத் தெரு ஆடிட்டர் சடகோபனுக்கு கைப்பிடித்துக் கொடுத்து விட்டு, சில வருஷங்களிலேயே கண்ணை மூடிவிட்டார். அவருக்குப் பின்னர் அவரது சக தர்மிணியும்.

இப்படியாக, ஒருவரது தோற்றம், நடத்தை, பேச்சு, பழக்கவழக்கம் என்ற காரணிகளால் பட்டப் பெயர் தந்து, கேலி செய்து வந்த எங்கள் ஊர் மக்கள் பலரது சொந்தப் பெயரையும் மறக்கடிக்கச் செய்தனர்.

பஜனை மடத்தெருவில் குடியிருந்த இஸ்கோல் நாயக்கரின் உண்மைப் பெயர் என்னவென்று இன்று வரை யாருக்கும் தெரியாது. அவரது பிரியப்பட்ட மனைவிக்குத் தெரியும். ஆனாலும், அவர் சுத்த பதிவிரதா தர்மத்தின் அடிப்படையில் அதைச் சொல்வதில்லை. எப்போது பார்த்தாலும் ஒரு விசிலைக் கையில் வைத்துக் கொண்டு, அதை ஊதிக் கொண்டே இருப்பார். அதனால் அவருக்கு இஸ்கோல் நாயக்கர் என்று பெயர்… இன்னொருவருக்குப் பெயர் கண்ணாடி நாயக்கர். ஊர் நாட்டாண்மை கோஷ்டியில் அவர் ஒருவர் மாத்திரமே கண்ணாடி அணிந்திருந்ததால், அவருக்கு அந்தப் பெயர்… நாட்டாண்மை கோவிந்தசாமி நாயக்கருக்கு முன் தலை வழுக்கை. எப்போதும் வாயில் வெற்றிலையை அரைத்துக் கொண்டே இருப்பார். யார் என்ன சொன்னாலும் 'சரி.. சரி… சரி.. ' என்று ஆமோதித்து சொன்னபடியே கேட்டுக் கொள்வார். இந்தப் பழக்கம் அவருக்கு எப்படி வந்தது என்று பார்த்தால் அவரது பஜனை மடத்தெரு மக்களுக்கு அவரே பெரிய நாட்டாண்மை. அவரிடம் பல வழக்குகளும் பைசல் செய்யக் கொண்டு வரப்படும். அந்த வழக்குகளில், பிராது கொடுத்தவன், எதிராளி என இரு தரப்பிலும் உள்ளவர்கள் சொல்வதையெல்லாம் மிகப் பொறுமையாகச் 'சரி…சரி..சரி.. ' என்று சொல்லியபடியே கேட்டுக் கொள்வார். எந்தப் பஞ்சாயத்து விஷயம் என்றாலும் அவர் கேட்டு அதைத் தீர்த்து வைக்கும் போது, தன் கண்களை மூடியபடியே, வலது கையை விரித்து மேலே உயர்த்தியபடி பேசி, தீர்ப்பும் சொல்லி விடுவார். ஒரு கோர்ட் ஜட்ஜ் சொல்வதை விடவும் சரியான தீர்ப்பு சொன்னபடியால் 'நாட்டாண்மை கோவிந்தசாமி நாயக்கர் ' என்றே பட்டம் பெற்று விட்டார்.

சமையல் செய்யும் போது கதலி வாழைப்பழத்தை எடுத்து நறுக்கி, அதை எண்ணையில் லேசாக பொரித்து எடுத்து, துளி உப்பும், காரமும் சேர்த்து அதைப் பொரியலாக மாற்றி, அதற்கு கதலி வாழைக்காய் பொரியல் என்று பெயரிட்டுப் பரிமாறி பேர் பெற்றவர் கதலி நரசிம்மய்யங்கார். இப்படி ஒவ்வொருவருக்கும் குடும்பப் பெயர், பட்டப் பெயர், சிறப்புப் பெயர், தொழிற்பெயர், காரணப் பெயர், இடுகுறிப்பெயர் என்று நானா விதங்களிலும் பட்டப்பெயர்கள்.

வடக்கே உள்ள பீகாரிலிருந்து, ஸ்ரீவில்லிபுத்தூருக்கு ஒரு குடும்பம் வந்து, சன்னிதித் தெருவில் உள்ள மண்டபத்தில் தங்கியிருந்து, அதைப் பராமரிக்க வந்தது. வந்தவர்கள் அந்த மண்டபத்திலேயே நிரந்தரமாகத் தங்கி விட்டார்கள். அவர்கள் குடும்பத்தின் ஆட்களின் பெயர்கள் யாருக்கும் தெரியாது. ஆனால், அந்த வடக்கத்திக்காரர்கள் தங்கியிருந்த மண்டபம் சோமானி சேட் என்பவருக்குச் சொந்தமானது. (அவர் இறந்து போய் எத்தனையோ மாமாங்கங்கள் கழிந்து விட்டன). அந்த சோமானி சேட்டுக்குச் சொந்தமான மண்டபத்தில் தங்கியிருந்த பீகாரிகள் நல்ல சிவப்பான நிறத்தில் செழுமையாக இருந்தார்கள். அதனால், ஊரில் யாராவது சிவப்பாய் இருந்தால் 'சோமானி சேட் வகையறா' என்ற பட்டப்பெயர் தருவது வழக்கமாயிற்று.

ஆண்டாள் கோவில் வாசலில், தைல ஸ்நானப் பவுடர் விற்கும் திருவடி அய்யாவைப் பார்த்தால் வேறொரு ஞானியைத் தேடிப் போய் தரிசனம் செய்ய வேண்டியதில்லை. எண்ணை தடவி இறுக்க முடிந்து கட்டிய குடுமியும், நெற்றியில் சூரியப் பிரகாசத்துடன் ஜொலிக்கும் திருமண்ணும், காதில் கடுக்கனும், மங்கலமான பழுப்பில் காவி ஜிப்பாவும், அதே நிறத்தில் வேஷ்டியும், தீர்க்கமான முகமும், ஏற்றிய அகல் விளக்கு போல் ஒளிரும் கண்களும், தீட்சண்யமான முகமும், நிறைந்த சந்துஷ்டியும், சாந்தமான பௌருஷமும், பார்த்த மாத்திரத்தில் கையெடுத்து சேவிக்கத் தோன்றும் சாத்தாத வைணவரான அவரது பெயர் திருவடி அய்யா. ஆண்டாள் கோவில் வாசலில் விற்கப்படும் ஸ்நானப்பவுடர் பாக்கெட்டில் அவரது உருவமும் இடம் பெற்றிருக்கும். அந்த ஸ்நானப் பவுடரின் உறையின் அடியிலேயே 'ஏ.பி. திருவடி அய்யா, ஆண்டாள் சந்நிதி' என்று அச்சிடப்பட்டிருக்கும். வெண் தாடியோடு இருக்கும் அவரது பெயர் யாருக்கும் தெரியாது. நான்காவது தலைமுறையாக இன்னமும் ஆண்டாள் சன்னதி வாசலில்

நறுமண தைலச்சக்கை ஸ்நானப் பவுடர் விற்கும் அவரது கடையின் பெயரே 'தாடி கடை' என்றாகி விட்டது.

திருவேங்கட அண்ணைகள் தெருவில் உள்ள பென்னிங்டன் லைப்ரரி அருகே இருக்கும் பத்திர எழுத்தர் மாதவன். தன் வாழ் நாள் கடைசி வரை தன் தாடியை மழித்துக் கொண்டதே இல்லை. அதனாலேயே அவரது பெயர் 'தாடி மாதவன் ' என்றாகி விட்டது. ஐம்பது வருஷங்களுக்கும் மேலாக, அவர் எழுதித் தந்த பத்திரங்கள் தான், அவரது வீட்டுக்கு எதிரே இருந்த சப்-ரிஜிஸ்தரார் ஆபீசில் பதியப்பட்டு வந்தன.

இடுப்பில் ஒரு காவி வேஷ்டியும், விபூதி, குங்குமம் ஒரு தட்டிலும் வைத்துக் கொண்டு, சாமியார் என்று தன்னைத் தானே அறிவித்துக்கொண்டிருந்தால், அந்த தாடி மாதவன், ஜில்லாவிலேயே மிகப்பெரிய பணக்காரராகி இருக்கலாம். என்ன செய்ய ?? நீண்ட தாடி வைத்துக் கொண்டால் சாமியாராகி, சாமியை வைத்து மத வியாபாரம் செய்யலாம் அல்லது சாமியே இல்லை என்று சொல்லி 'பகுத்தறிவு' வியாபாரமும் செய்யலாம் என்று அந்த அப்பிராணி தாடி மாதவனுக்குத் தெரியாதது, அவரது குற்றமல்ல.

அதே திருவேங்கட அண்ணைகள் தெருவில், தகரக்கடை கொட்டகை கடைத்தெருவின் நுழைவு வாசலில் முதல் கடையாக இருக்கும் பூதம் பிள்ளை கடைக்கு ஏன் அப்படிப் பெயர் வந்தது என ஒருவருக்கும் தெரியாது. அந்தக் கடை உரிமையாளர் நவநீதம் பிள்ளை, குழந்தைகளுக்கு மந்திரித்து பெரணித் தைலம் தருதல், பயந்த கோளாறு போக்குதல், பேய் விரட்டுதல், திருஷ்டி போக்குதல், கண்ணேறு கழித்தல் என்று பலவித மாந்திரீக வேலைகளைச் செய்து, மந்திரித்த விபூதியும், எலுமிச்சம் பழமும் தருவார். அதனால் அவரது மந்திரிக்கும் தொழிலை வைத்தே அவருக்குப் பூதம் பிள்ளை என்று பெயர் வந்திருக்கலாம்.

ஊரில் கிட்டத்தட்ட எல்லோருக்கும் இப்படிப் பட்டப்பெயர்கள் உண்டு என்று தோன்றுகிறது. முடிந்தால் இந்த ஊர் முனிசிபல் ஆபீசில் இவ்வூர் பிரஜைகளின் பெயர்களை எழுதி வைக்கும் பதிவேட்டில், பெயருக்குப் பக்கத்தில் 'பட்டப் பெயர் ' என்று எழுதி வைத்தாலும் தப்பில்லை. அப்படி எழுதும் போது, மறக்காமல் நகராட்சி பெயர்

பதிவேட்டின் முதல் பக்கத்தில், முதல் பேராக, 'சுப்பையா' என்ற பெயருக்குப் பக்கத்தில் 'விபூதி சுப்பையா பிள்ளை' என்று எழுத வேண்டியிருக்கும். அவர் தான் எங்க ஊர் முனிசிபல் கமிட்டிக்குப்பழைய சேர்மன். ரொம்பப் புகழ் பெற்றவர். நல்ல பக்திமான். நெற்றி முழுக்க விபூதிப்பட்டையும், தூய வெண்ணிற கதர் வேஷ்டி, கதர் சட்டையில் புத்தம் புதிதாய் பளீரென எப்போதும் காட்சி தருவார் அவர்.

இன்னமும் ஊருக்கு மேற்குப் பக்கம் இருக்கும் கம்மாப்பட்டி, ரங்கநாதபுரம் கிராமங்களில் யாதவர்கள் குடியிருக்கும் பகுதிகளில், கட்டைக் கோனார், நெட்டைக்கோனார், ஏப்பக்கோனார், சிவப்புக் கோனார், அதிரசக்கோனார், பழைய சோற்றுக் கோனா ' என்று வீட்டுக்கு வீடு பட்டப்பெயர்கள் தான்.

ஆண்டாள் கோவில் நுழைவு வாசலில், ஏகாந்த மண்டபத்தின் தூண்களின் கீழ் அமர்ந்து வம்பளக்கும் சிலர், தங்களது அரட்டைக் கச்சேரியில், அடிக்கடி 'மாப்பிள்ளை அய்யங்கார், மாப்பிள்ளை அய்யங்கார் ' என்று குறிப்பிட்டுப் பேசுவதைக் கேட்டிருக்கிறேன். இது யாரென்று எனக்குப் பல காலம் தெரியாமலே இருந்து வந்தது. இறுதியில், பொன்னாங்கண்ணி கண்மாய் முழுக்க நிலங்களை வைத்திருந்த திருமலை ஆராவமுதன் என்ற ஊரின் மிக முக்கியப் புள்ளியின் மகளைக் கல்யாணம் செய்திருந்த என் அப்பா தான் அந்த மாப்பிள்ளை அய்யங்கார் என்பது எனக்கு வெகு காலம் கழித்துத் தான் தெரிய வந்தது.

--------------------------------------------

1. **திருமண்** - நெற்றியில் இடும் நாமம்
2. **ஜீயர்** - வைணவ மடத்தை நிர்வகிப்பவர், பெரும்பாலும் இல்லறத்தை விட்டு விட்டு, சன்னியாசம் பெற்றுக் கொண்டவர்.
3. **கோஷ்டி** - கோவிலில், கர்ப்பகிருகத்துக்கு வெளியே வேதம் மற்றும் நாலாயிரத்திவ்வியப் பிரபந்தப் பாசுரங்களை இசையோடு பாடும் குழு.
4. **பாராயண கோஷ்டி** - கோவிலில், கர்ப்பகிருகத்துக்கு வெளியே வேதம் மற்றும் நாலாயிரத்திவ்வியப் பிரபந்தப் பாசுரங்களை இசையோடு பாடும் குழு.
5. **அரையர்** - பிரபந்தப் பாடல்களை உற்சவருக்கு முன்னால் நின்று கொண்டு இசையோடு பாடுபவர்.
6. **தாயாதிகள்** - உறவினர்கள்.
7. **சாற்றுமுறை** - கோவில் சந்நிதியில் பிரபந்தப் பாடல்களை பாடும் நிகழ்வு
8. **சாயரட்சை** - ஆறு கால , எட்டுக்கால பூஜைகளில் ஒன்று. மாலையில் சந்தியா கால வேளையில் நடைபெறும் தேவ ஆராதனை.
9. **கோஷ்டி விநியோகம்** - கோவில் பிரசாதத்தை யாவருக்கும் பகிர்ந்து தருதல்.
10. **வியாஜ்யம்** - சிவில் வழக்கு.

## 5. ந.க. எண். 42 / 1996 தேதி – 20.12.1996

தான் மிக அதிகமாக அரசாங்கத்துறை அலுவலர்களை வேலை வாங்குகிறோமோ என்ற ஐயம் அரங்க. சடகோபனுக்கு திடீரென்று ஏற்பட்டது. ஒரு வேளை தான் மிகையாக அரசு அலுவலகத்தைப் பயன்படுத்துவதைப் போல வேறு யாராவது பயன்படுத்துகிறார்களா? அதற்கு வாய்ப்பிருக்கிறதா? அப்படி யாராவது அரசு அலுவலகமே கதி எனக் கிடந்து அரசு உத்திரவுகளையும், இன்ன பிற ஆவணங்களையும் வாங்குவதற்கு, நம்மைப் போலவே பழியாய் அலைகிறார்களோ என்ற சந்தேகம் மனதில் தோன்றியதும், அவனுக்கே அவன் மேல் ஒரு விதமான வெட்கம் வந்தது.

ஏதோ மற்றவர்களைப் பார்த்தால், எப்போதாவது ஒரு அரசு அலுவலகத்துக்கு வருவார்கள். வந்த வேலையைச் சடுதியாய் முடித்துக் கொண்டு, உடனே போய் விடுவார்கள். தன்னைப் போல யாராவது இப்படி வருடக்கணக்கில் அலைவார் உண்டா என்ற உள் மன விசாரத்துடன் அவன் ஆழ்ந்தான்.

இந்த விசாரம் இன்று நேற்று அவனுக்கு ஏற்பட்டதல்ல. நெடுங்காலத்துக்கு முன்பே ஏற்பட்டு விட்டது. அது தவிர்க்க இயலாதபடி, வயற்காட்டில் சட்டை, வேஷ்டியில் ஒட்டிக் கொள்ளும் நாயுருவி விதைகளைப் போல ஒட்டிக் கொண்டு விட்டது.

விஷயம் ஆரம்பித்தது உத்தேசமாக 1989-ம் வருஷமாக இருக்கலாம். அவன் தன்னுடைய சொந்த வீட்டில் திண்ணையில் உள்ள மின்சார மெயின் ஸ்விட்ச்கள் உள்ள சிறிய மரப்பெட்டிக் கதவை யதேச்சையாகத் திறக்க, அதில் மின்சார வாரியத்திற்கான மின் கட்டணம் கட்டும் நீள வெள்ளை அட்டை இருந்தது. அதன் முகப்பில் 'எஸ்.சி. எண். 12- பெயர். சோ. சீனம்மாள், எண், 8, தெற்கு மாட வீதி', என்று கிறுக்கலாய் எழுதியிருந்தது.

சோ. சீனம்மாள் என்பது அவனது பெரிய பாட்டி. அப்பாவின் அம்மா, கிருஷ்ணம்மாள். கிருஷ்ணம்மாளின் அம்மா சோ. சீனம்மாள்.

- 'அப்பா, இது என்ன கரண்ட் அட்டையில் பெரிய பாட்டி பேர் போட்டிருக்கே !'

- 'ஆமாம்'
- 'ஆனால், பெரிய பாட்டி தவறிப் போனது ரொம்ப வருஷத்துக்கு முன்னாடி.'
- 'ஆமா, 1980 ல '
- 'பிறகு எதுக்கு இன்னமும் கரண்ட் பில் பெரிய பாட்டி பேர்ல வரணும்? இப்ப இருக்கறது யாரு? கிருஷ்ணம்மாள். அப்ப கிருஷ்ணம்மாள் பேர்ல தான வரணும் !?! '
- 'தெரியும். கரண்ட் கனெக்ஷன் பெரிய பாட்டி பேர்லயே இருக்கட்டும். '
- 'ஏன்?'
- 'பெரிய பாட்டி இன்னமும் நம்மள விட்டுப் போகலை'
- 'பெரிய பாட்டி நம்மளை விட்டுப் போயி ஒன்பது வருஷமாச்சு.'
- 'தெரியும்'
- 'அப்ப என்னத்துக்கு அது பெரிய பாட்டி பேர்லயே இருக்கணும்? அதைப் பேர் மாத்தி, இருக்கற நம்ம சின்னப் பாட்டி பேருக்குக் கொண்டு வந்துற வேண்டியது தான?!'
- 'பெரிய பாட்டி சீனம்மாள் இன்னமும் இருக்கா. அவ நித்திய சூரி. வானத்துல நட்சத்திரம் மாதிரி ஜொலிச்சுண்டிருக்கா!!'
- 'அது எப்படி உனக்குத் தெரியும்?'
- 'பெரிய பாட்டியே தன்னோட வயசான கடைசி காலத்துல, ஒரு நாள் என்னைக் கூப்பிட்டு, பக்கத்துல உக்கார வெச்சுண்டு, என் கையை எடுத்து, தன் கை மேலே வெச்சுண்டு, என் முகத்தைப் பார்த்து, 'சாமீ! எனக்கு ரொம்ப வயசாயிடுத்து. உடம்பு ஆட்டம் கொடுத்திடுத்து. இனிமே நான் எத்தனை நாள் உன்னோட இருப்பேன்னு எனக்குத் தெரியாது. உனக்கு என்னோட சொத்துக்கள் எல்லாம் வந்து சேர்ற மாதிரி உயில் எழுதி வெச்சிட்டேன். நீ கவலைப்படாதே. ஆண்டாள் என்னைச்சீக்கிரத்துலயே கூட்டிண்டு போயிடுவாள். அது எப்பன்னு தெரியாது. ஆனா ஒண்ணு மட்டும் சொல்றேன். நீ கவனமாக் கேட்டுக்கோ. எனக்கு அழிவில்லை. என் ஜீவாத்மா இந்த வீட்டை விட்டுப் போகாது. அது இங்கயே சுத்திண்டிருக்கும். நீ நம்ம பெரிய தாத்தா பாதக்குறடு வெச்சிருக்கற அந்த அலமாரிக்கு தினசரி பூஜை பண்ணிண்டு வா. அவர் நமக்கு ஒரு குறையும் வெக்க மாட்டார். நான்

என்னோட காலத்துக்குப் பின்னாடி வானத்துல நட்சத்திரம் மாதிரி நித்திய சூரியாய் ஜொலிச்சுண்டிருப்பேன். எனக்கு அழிவே இல்லை' அப்படின்னு என் கை மேலே சத்தியம் பண்ணாத குறையாச் சொல்லிட்டுப் போனா. அதனால நம்ம பெரிய பாட்டி இன்னமும் நம்மள விட்டுப் போகல. வானத்துல நித்திய சூரியா இருக்கா.'

- 'அதுக்கு என்ன இப்போ? ஆனா பெரிய பாட்டி நம்ம குடும்பத்துக்கு காவல் தெய்வம். ரட்சகி. அவ இன்னமும் இருக்கா!'.

  அப்பாவோ மிகவும் பிடிவாதமாகத்தான் பேசினார்.

- 'சரி, அது ஒருபுறம் இருக்கட்டும். ஆனா, அதுக்கும் இந்த எலக்டிரிசிடி கனெக்ஷனை பேர் மாத்தறதுக்கும் என்ன சம்பந்தம்?'
- 'இல்லையே. பெரிய பாட்டி நம்மள விட்டுட்டுப் போகலியே !'
- 'சரி இந்த எலக்டிரிசிடி கனெக்ஷனை மட்டும் நான் போய் மாத்திண்டு வந்திர்றேன்.'
- 'அந்த அட்டையைப் பார்க்கும் போதெல்லாம், பாட்டி இன்னமும் நம்மளோடு இருக்கான்னு எனக்குத் தோன்றது.'

அதை அப்படியே விட்டு விட, அரங்க. சடகோபனுக்கு மனதில்லை. இது என்னடா வம்பாப் போச்சு?! இந்த விஷயமெல்லாம் சொத்து சம்பந்தப்பட்ட விஷயங்கள். இதுல எதாவது கவர்மெண்ட் ரிக்கார்டு தவறா இருக்கறதுக்கு விட்டுறதா?

மறுநாள், காலை கந்தாடைத் தெருவுக்குப் போனான். கந்தாடைத் தெருவில் உரக்கடை கந்தசாமி நாயக்கர் கடைக்கு அடுத்த வீடு தான் டைப்பிஸ்ட் சங்கரன் மாமாவோட வீடு. அங்கு போனான்.

- டைப்பிஸ்ட் சங்கரனின் உண்மையான பெயர் சிவசங்கரன். கிடைத்த அரசாங்க வேலைக்குப் போகாமல், வீட்டுத் திண்ணையிலேயே ரெண்டு மர டேபிள், ரெண்டு மர சேர், ரெண்டு டைப் மிஷின் (ஒன்று தமிழ், மற்றொன்று ஆங்கிலம்) சகிதம் ஜாப் டைப்பிங் அடித்துக் கொடுத்து அந்த வருமானத்தில் குடும்பத்தை ஓட்டியவர். அவரது வீட்டு வாசலில், மூங்கில் தடுக்கின் மீது 'Expert in court matters'

என்ற போர்டு தொங்கிக் கொண்டிருக்கும். 'Expert in court matters' என்றால் 'கோர்ட் வழக்குகளைத் திறம்பட நடத்துவதில் Expert என்று அர்த்தமில்லை. கோர்ட் வழக்குகள் சம்பந்தப்பட்ட பிராது, எதிர் வழக்குரை, எதிர் வாதுரை, இடைக்கால மனு, அப்பீல் மனு, அவிடவிட் மற்றும் இதர கோர்ட் வ்யாஜ்யம் சம்பந்தப்பட்ட விஷயங்களை தப்பில்லாமல் டைப் அடித்துத் தருவதில் expert என்று அர்த்தம்.

டைப்பிஸ்ட் சங்கரன் தமிழ், இங்கிலீஷ் இரண்டிலும் டைப் அடிப்பதில் புலி. திண்ணையில் உள்ள உயரமான மேடையின் மேல் உள்ள நாற்காலியில் அமர்ந்து அவர் டைப் அடித்தால், நெற்றியில் உள்ள விபூதிப் பட்டை பளீரென்று துலங்குவது போல, அவர் கோர்ட் மனுவும் பளீரென்று இருக்கும். அவர் டைப் மிஷினில் அமர்ந்து கொண்டு, கருப்புப் பட்டை கொண்ட கண்ணாடியைப் போட்டுக் கொண்டு, எழுதி வைத்த மேட்டரைப் பார்த்துக் கொண்டே டைப் அடிப்பது, கிட்டத்தட்ட, மேடைக் கூத்தில் பக்க வாத்தியத்தில், மேடைக்கு ஓரத்தில் அமர்ந்து பெடல் ஆர்மோனியத்தில் விசைகளை அழுத்தியபடியே தலை நிமிர்ந்து பின்பாட்டுப் பாடும் தாள வாத்திய வித்வானைப் போன்றே இருக்கும்.

- 'மாமா, நமஸ்காரம்! சௌக்யமா ?'
- 'கோபி, வாப்பா! என்ன இந்தப் பக்கம்?'
- 'மாமா, எனக்கு ஒரு சந்தேகம். நீங்க தான் நிவர்த்தி பண்ணணும். '
- 'சொல்லுப்பா. உங்கப்பா அரங்கநாதன் என்னோட பெஸ்ட் பிரண்ட். இப்பல்லாம் அவர் என்கிட்ட பேசறதே கிடையாது.'
- 'மாமா, அதை விடுங்க. எங்க தெற்கு மாட வீதி வீட்டுல இருக்கற கரண்ட் கனெக்ஷன் என்னோட பெரிய பாட்டி சீனம்மாள் பேர்ல இருக்கு. ஆனா, சீனம்மாள் பாட்டி தவறிப் போனது 1980ல. இப்ப பேரை மாத்தி எங்க சின்ன பாட்டி கிருஷ்ணம்மாள் பேருக்கு அதைக் கொண்டு வரணும். அதுக்கு என்ன செய்யணும்?'
- 'இவ்வளவு தான ! கவலையை விடு! இதுக்குப் பேரு நேம் டிரான்ஸ்பர் அப்ளிகேஷன்… நீ ஒண்ணு பண்ணு. உங்க சீனம்மா பாட்டி இறந்து போனதுக்கு டெத் சர்டிபிகேட்

வாங்கிண்டு வந்துடு. அப்புறம் தாசில்தாரோட லீகல் ஹேர் சர்ட்டிபிகேட்டும் வேணும். மற்ற மேட்டரை எல்லாம் நான் டைப் அடிச்சுக் கொடுத்திடுறேன்.'

- 'ரொம்ப தேங்க்ஸ் மாமா. இதோ டெத் சர்டிபிகேட்டை வீட்டுல இருந்து எடுத்திண்டு வர்றேன்.'

உடனே திரும்பிப் போய், வீட்டில் உள்ள பீரோவில் பழைய சர்டிபிகேட்டுகள், ரிக்கார்டுகள் ஏதாவது இருக்கிறதா என்று மும்முரமாக தேடியதில் பலன் பூஜ்யம்.

- 'அப்பா, சீனம்மாள் பாட்டியோட டெத் சர்ட்டிபிகேட் எங்க இருக்கு ?'
- 'எங்கன்னு எங்கிட்ட கேட்காத. பழைய ஃபைல்ல இருக்கான்னு நீயே தேடிப் பாரு'
- 'நல்லாப் பார்த்துட்டேன். எங்கயும் இல்ல.'
- 'ஒரு வேளை தொலைஞ்சு போயிருக்கும்.'
- 'என்னப்பா, இப்படி அக்கறையில்லாமல் பேசறீங்க? எங்க எடுத்து வெச்சீங்கன்னு நீங்களே யோசிச்சுச் சொல்லுங்க.'
- 'எனக்குத் தெரியல. மறந்து போச்சு. அந்தப் பச்சை பீரோவுல உள்ள ஃபைல்ல அது இருந்தா உண்டு. இல்லைன்னா இல்ல !'

மீண்டும் அந்த பச்சை பீரோவில் உள்ள ரிக்கார்டுகள் யாவற்றையும் தோண்டித் துருவி அலசி ஆராய்ந்து, ஒரு சிறு பேப்பரைக் கூட மீதி வைக்காமல் சல்லடை போட்டு சலித்தும் அந்த டெத் சர்டிபிகேட்டைக் காணவில்லை.

- 'அது இங்க இல்லப்பா'
- 'ஒண்ணு செய். நேரா முனிசிபாலிட்டி ஆபீஸ் போய் அங்க மனு கொடு. பழைய ரிக்கார்டு இருந்தா நகல் போட்டுத் தருவா'.

மறுநாள், ரயில்வே ஸ்டேஷன் செல்லும் சாலையில் உள்ள முனிசிபல் ஆபீசுக்கு சைக்கிள் மிதித்துச் சென்றான். பிறப்பு, இறப்பு பதிவு செய்யும் பிரிவில் உள்ள கிளார்க்கைப் பார்த்துக் கேட்டான்.

- 'சோ. சீனம்மாள். வருஷம் 1980 ன்னு சொல்றீங்க. இப்படி மொட்டையா வருஷம் மட்டும் சொன்னா காரியம் ஆகாது. கரெக்டான இறந்து போன தேதி குறிச்சுக்கிட்டு வாங்க. ஒரு நிமிஷத்துல தேடிரலாம்.'

மீண்டும் வீட்டிற்கு வந்து அப்பாவிடம், பெரிய பாட்டி இறந்து போன தேதி என்னவென்று கேட்ட போது,

- 'நான் அதையெல்லாம் ஞாபகத்துல வெச்சுக்கல ஆனா, சீனம்மா பாட்டி தவறிப்போனது பங்குனி மாசம். வருஷம் 1980 தான். அதுல சந்தேகம் இல்ல.'
- 'பங்குனி மாசம்னா இங்கிலீஷ் மாசத்துக்கு எந்த மாசம்?'
- 'மாாச் அல்லது ஏப்ரல் வரும்'

காலண்டரில் பார்த்து உறுதி செய்து கொண்டு, மீண்டும் அதே முனிசிபல் ஆபீசுக்குப் போய்,

- 'சார், 1980-ம் வருஷம் மார்ச் அல்லது ஏப்ரல் மாம். இது போதுமா? ரெக்கார்டை தேடி எடுக்க முடியுமா?'
- 'மார்ச், ஏப்ரல் மாதமா? பாத்துரலாமே!'

நன்கு தேடியும் அந்தப் பழைய தூசி படிந்த ரிஜிஸ்தரில் மேற்படி மாதங்களில் சோ. சீனம்மாள் பெயர் பதிவு செய்யப்படவில்லை என்பது தெரிய வந்தது.
- 'தம்பி, இதுல உங்க சீனம்மாள் பேர் இல்ல. யாரும் அந்த நேரத்துல எழுதிக் கொடுத்து பேர் பதியல போல.'
- 'அப்ப என்ன சார் செய்யலாம்?'
- 'ஒரு ரிக்குசிஷன் எழுதிக் கொடுங்க. இந்த மாதிரி என் பாட்டி காலமாகி விட்டதை பதிவு செய்து கொண்டு இறப்பு சான்றிதழ் வழங்கவும்னு. நாங்க செக்ஷன்ல அதை நோட் போட்டு ரிஜெக்ட் பண்ணுவோம். நீங்க உடனே கோர்ட்டுக்குப் போய் எங்க மேல கேஸ் போட்டு வாங்கிக்குங்க'
- 'சார், கோர்ட் மூலமா இல்லாம இந்த டெத் சர்டிபிகேட்டை வாங்க முடியுமா?'

- 'ம்ம்ம்… முடியாதுய்யா. இந்த ரிக்கார்டுல வருஷா வருஷம் எழுதற பேர்களையெல்லாம் நாங்க டிஸ்டிரிக்ட் ஹெட் குவார்ட்டர்ஸுக்கு அனுப்புவோம். அவங்க அதை மெட்ராஸுக்கு அனுப்பி, அதை அவங்க டில்லிக்கு அனுப்பறாங்க. ஒருத்தர் நம்ம நாட்டு பிரஜையா பிறந்தார் இறந்தார்ங்கறதுக்கு இது தான் ரிக்கார்டு. நம்ம ஜனாதிபதியே செத்துப் போனாலும், அவர் பேரையும் இது மாதிரி பதிஞ்சு எழுதித்தான் ஆகணும்.'
- 'சரி, சார்! நான் ரிக்வசிஷன் எழுதித் தர்றேன். நீங்க ரிஜெக்ட் பண்ணுங்க!.'

ஒரு முழு நீளத் தாளை எடுத்து, ஓரத்தில் மார்ஜின் மடித்து, 'தேதி – அனுப்புநர்' என்று எழுதத் துவங்கி மனுவை முடித்து, அதில் அப்பாவிடம் ஒரு கையெழுத்து வாங்கி, அலுவலகத்தில் உள்ள மனுப்பெட்டியில் போட்டதும், இரண்டு தினங்கள் கழித்து, மீண்டும் அதே செக்ஷனில் பச்சை மையால் எழுதிய குறிப்புகள் வட்ட வடிவ முத்திரைகளைத் தாங்கியபடி அந்த வேண்டுகோள் மனு அவனிடமே திருப்பித் தரப்பட்டது.

அடுத்தது, கோர்ட் படையெடுப்புப் படலம். இறந்து போனவருக்கு டெத் சர்டிபிகேட் வழங்கும் சட்டம் நடைமுறைக்கு வந்த ஆண்டு 1969 என்று வழக்கறிஞர் மகேந்திரன் சொன்னார். அந்தச் சட்டத்தின் பெயர் 'பிறப்பு மற்றும் இறப்பு பதிவு சட்டம், 1969'.

ஒரு நீண்ட சி.ஆர்.எம்.பி. கோர்ட் மனுவைத் தயார் செய்து, பச்சைக் காங்கர் பேப்பரில் டைப் செய்து, அப்பாவிடம் கையெழுத்து வாங்கி வரச் சொன்னார் வக்கீல். அப்பா கையெழுத்துப் போட மறுத்தார்.

- 'கோபி, என்னைப் பொறுத்தமட்டில பெரிய பாட்டி சாகல !'
- 'இதுக்கு வேறு வழி இல்லப்பா. ஒண்ணொண்ணா பேரை மாத்தி, நேம்
- டிரான்ஸ்பர் பண்ணித்தான் ஆகணும். கையெழுத்து போடுங்கப்பா'

- 'இது ஒண்ணுலயாவது என் பாட்டி பேர் அப்படியே இருக்கட்டும்னு நெனச்சேன். அவ நம்மோடயே இருக்கற

மாதிரி' என்று சொல்லிக் கொண்டே டைப் செய்யப்பட்ட காகிதத்தில் கையெழுத்துப் போட்டார்.

வழக்கறிஞர் மகேந்திரன், அதை 'நீதித்துறை நடுவர் நீதிமன்றம் எண் - III' என்ற பெயர்ப்பலகை தாங்கிய கோர்ட்டில் தாக்கல் செய்து, வாய்தா தேதி வாங்கிய பின், சடகோபனிடம்,

- 'உங்க அப்பாவுக்கு ஃபர்ஸ்ட் அப்பியரன்ஸ் பதினாலாம் தேதி. மறக்காம அன்னிக்கு காலைல பத்து மணிக்கு உங்க அப்பாவைக் கூட்டிட்டு வந்துருங்க'.

பதினாலாம் தேதியன்று அப்பா கோர்ட்டுக்கு வர மறுத்தார். வலுக்கட்டாயமாக இழுத்துப் பிடித்துக் கொண்டு சென்று, டவாலி கூப்பிட்டதும், கொண்டு போய் மேஜிஸ்திரேட்டு முன்னால் நிறுத்த வேண்டியதாயிற்று. நெற்றியில் திருமண்ணும், கட்டுக் குடுமியும், பழைய சட்டையுமாக இருந்த அப்பாவை பார்த்து விட்டு, மாஜிஸ்திரேட்டு மேலும் மூன்று வாய்தாக்கள் போட்டார். ஒரு வழியாக, நான்காவது விசாரணை தேதியில், அப்பாவை பெட்டி ஏற்றி முதல் விசாரணை செய்து, பேப்பர் விளம்பரம் கொடுக்க மாஜிஸ்திரேட்டு உத்தரவிட்டார்.

ஒரு தினசரி பத்திரிக்கையில் ஒரு ஓரத்தில் நீளமான பத்தியில் அந்த விளம்பரம் வெளி வர ரூ. 120 வாங்கிக் கொண்டார் பத்திரிக்கை ஏஜெண்ட். அந்தப் பத்திரிக்கையில் நீதிமன்ற விசாரணை குறித்த விளம்பரம் வெளி வந்த தேதியில், நான்கு பத்திரிக்கைப் பிரதிகளை வாங்கி வைத்துக் கொண்டு, மீண்டும் கோர்ட்டில் அதை தாக்கல் செய்தார் வக்கீல் மகேந்திரன்.

அடுத்த விசாரணை தேதியில், அரங்கநாதனை பெட்டியேற்றி, ஒரு தலைப்பட்சமாய் விசாரணை செய்து முடித்தார் வக்கீல்.

மறுநாள், கோர்ட் செக்ஷன் கிளார்க், கோபுர சீல் போட்ட கோர்ட் உத்தரவை சடகோபனிடம் தந்தார். அந்த உத்தரவை முனிசிபல் ஆபீசில் தந்தபோது, ஒரு டெத் சர்டிபிகேட் அசலுக்கு ரூ. 30/-ம், இரண்டு நகல்களுக்கு தலா ரூ. 20/- வீதம் பணம் செலவானது…

கல்லூரிப் படிப்பில், சடகோபன் பி.எஸ்.சி., ரசாயனத்தில் மூன்றாமாண்டில் ஒரே ஒரு அரியர்ஸ் வைத்து விட, அவன் வீட்டிலேயே தங்கி, அந்த அரியர்ஸுக்காக படிக்க வேண்டியதாயிற்று. சந்தானம் மாமா வீட்டில் தான் அவன் டேரா போட்டான். சாப்பிட்டு விட்டு புத்தகத்துடன் அங்கு போய் விடுவான். சந்தானம் மாமா பிரம்மச்சாரி. ஒண்டிக்கட்டை. படிக்க ரொம்ப சௌகரியமானது சந்தானம் மாமா வீடு. அந்த வீட்டில் அவன் பல மாதங்கள் உழன்றிருக்கிறான். இரவில் படுத்துக் கொள்வதும் அங்கு தான். அப்படி ஒரு இரவு, அங்கு திண்ணையில் படுத்து தூங்கியபோது, அதிகாலை அவனது இரண்டாவது தம்பி சீனிவாசன் வந்து தட்டி எழுப்பினான்.

- 'கோபி, எழுந்திரு. கிருஷ்ணம்மா பாட்டி போயிட்டா.'

பதறியடித்து எழுந்தவன், அதிகாலையில் பெண்கள் வாசல் பெருக்கி, தண்ணீர் தெளித்து, கோலமிட்டுக் கொண்டிருப்பதையும், அந்த தெற்கு மாட வீதியில் உள்ள வீடுகளில் தன் வீட்டின் மட்டுமே வாசல் பெருக்கப்படாமல் இருப்பதையும் கண்டான்.

கிருஷ்ணம்மாள் பாட்டி தவறிப் (இறந்தது) போன போது, வீட்டில் ஒருவரும் அழவில்லை. நல்ல முதிர்ந்த வயதில் தான் பாட்டி இறந்து போனாள். துக்க வீட்டில் கூட மாட ஒத்தாசை செய்தது எல்லாமே நாடக சாலைத் தெரு பேங்க் கண்ணன் மாமா தான். உள்ளூரில் இருந்த நில வள வங்கி என்னும் கூட்டுறவு பாங்கில் கணக்கு எழுதிக் காலட்சேபம் செய்து கொண்டிருந்தார்.

வீட்டு வாசலில், நீண்ட மர பெஞ்சு ஒன்று போடப்பட, அதில் அமர்ந்து கண்ணன் மாமா, ஒரு ஃபுல்ஸ்கேப் பேப்பரில், முனிசிபல் ஆபீசுக்கு, பாட்டியின் இறப்பு குறித்த கடிதம் ஒன்றை எழுதி, சடகோபன் கையில் கொடுத்தார்.

- 'கோபி! இந்த லெட்டரைக் கொண்டு போய், நம்ம முனிசிபல் ஆபீஸ் முன்புறம், வராந்தாவில் இருக்கும் பெரிய மரப்பெட்டியில் போட்டு விடு. ரெண்டு நாள் கழித்து நீயே போய், அங்கு செக்ஷன் கிளார்க்கை பார்த்தால், பாட்டி பற்றிய விபரம் ரிஜிஸ்தரில் ஏறியிருக்கிறதா என்று தெரியும்.'

ஏறியிருக்கிறதா என்று போய்ப் பார்த்தான் சடகோபன். ஏறியிருந்தது. நீண்ட தோல் பைண்டிங் போட்ட இரண்டு துலாம் எடை கொண்ட ராட்சஷ சிவப்பு ரிஜிஸ்தரில், ஊதா மையில், கிருஷ்ணம்மாள் பாட்டி பற்றிய சகல விபரங்களும் நெடுக்காக எழுதப்பட்டிருந்தன.

கிருஷ்ணம்மாள் பாட்டியின் டெத் சர்டிபிகேட் கைக்கு வந்ததும், நேரே போய் டைப்பிஸ்ட் சங்கரனிடம் அதைக் காட்டினான்.

- 'கோபி! உங்க சீனம்மாள் பாட்டியோட டெத் சர்டிபிகேட் வாங்கிட்டியா?'
- 'வாங்கிட்டேன் மாமா. அதை வாங்கி முடிச்சதும், அடுத்த பாட்டி தவறிப் போயிட்டா. இப்ப என்ன பண்றதுன்னு தெரியல.'

- 'கவலையை விடு. ரெண்டு பாட்டியோட டெத் சர்டிபிகேட்டையும் எடுத்துக்கோ. நான் உனக்கு அப்ளிகேஷனை டைப் அடிச்சுத் தர்றேன். நேரா கொண்டு போய், வி.ஏ.ஓ. கிட்ட கொடு. அவர் ஆபீசுக்கு அழ வேண்டியதை அழுதா, இந்த லீகல் ஹேர் சர்டிபிகேட் தானா உன் கைக்கு வந்துடும்.'

- 'சார், எலக்ஷன் மீட்டிங்னு அவசரமா, விருதுநகர் போயிருக்காரு. அவருக்கு எலக்ஷன் டூட்டி போட்டாச்சு.' என்றார் வி.ஏ.ஓ. வின் கீழ் பணிபுரியும் தலையாரி சாத்தையா. இதே பதில் மூன்று நாட்களும்.

முன் தலையில் வழுக்கையோடு, கட்டையான உருண்ட உருவம் கொண்ட சாத்தையாவுக்கு இரண்டு கண்களும் எந்நேரமும் ரத்தச் சிவப்பாய் இருந்தது.

உடலில் போதை குறையக் குறைய மீண்டும் போதை ஏற்றிக் கொள்வார் என்று சக தலையாரிகள் சொன்னார்கள்.

சாத்தையா அப்போது சைக்கிள் மட்டுமே வைத்திருந்தார். சடகோபனின் தேவை என்ன என்பதை உணர்ந்து, அவனிடம் பசு மாட்டிடம் பால் கறப்பது போல அவ்வப்போது கறக்க ஆரம்பித்தார்.
- 'இங்க பாருங்க சாமி ! உங்க மேட்டரு ரொம்ப சிக்கலான மேட்டரு. உங்க பெரிய பாட்டி செத்துப் போன போதே, நீங்க

உடனே இங்க டெத் சர்டிபிகேட்டோடு வந்து வாரிசுச் சான்றிதழுக்கு மனு கொடுத்து அதை வாங்கி, அதனடிப்படையில நிலம், வீடு ரெண்டுக்கும் பேர் மாத்தியிருக்கணும். இதுவே ரொம்ப லேட். எல்லா ரிக்கார்டுலயும் பாருங்க. சோ. சீனம்மாள்னு பேர் போட்டிருக்கு. அந்தம்மா 1980ல இறந்து போனதா இப்ப கொண்டு வந்து ரெக்காடு தர்றீங்க. அதை தாசில்தாரு ஏத்துப்பாரான்னு தெரியல'

சடகோபன் கையை சட்டைப் பைக்குள் விட்டு புதிய இரண்டு நூறு ரூபாய் நோட்டுக்களை வெளியே எடுத்துக் கொடுத்து, ‘இது அட்வான்ஸ்' என்றான்.

- 'சாமி! நான் சொன்னா, ஆர். ஐ. மட்டுமில்ல, தாசில்தார் மட்டுமில்ல, பல தடவை ஆர்.டி.ஓ. வே அப்படியே கேட்டுட்டு கண்ணை மூடிக்கிட்டு, பச்சை மையில கையை ஓட்டுவாங்க. நீங்க கவலைப்படாதீங்க. நம்ம கோர்ட் சாமி பையன் தான்னு சொல்லி வெக்கிறேன். தாசில்தார்கிட்ட' – என உத்திரவாதம் தந்தார் சாத்தையா.

பணம் பாதாளம் மட்டும் பாயும். ரெவின்யூ டிபார்ட்மெண்டில் அது சீ∴ப் செக்ரட்டரி வரை கூடப் பாயும் என்பது தெளிவானது. மனுக் கொடுத்த ஐந்தாவது நாள், வி.ஏ.ஓ. ஆபீஸுக்கு சைக்கிள் மிதித்துச் சென்ற சடகோபனை சப்-ஜெயில் வாசலிலேயே நிறுத்தி, தன் துணிப் பையின் உள்ளே வைத்திருந்த வாரிசுரிமைச் சான்றிதழை எடுத்து சடகோபனிடம் நீட்டினார் சாத்தையா.

- 'இது ஒரிஜினல். இதைப் பத்திரமா வெச்சுக்கோங்க சாமி! தவற விட்டுறாதீங்க. உங்களுக்காக ரொம்ப கஷ்டப்பட்டு அலைஞ்சு வாங்கினேன்.'

வாரிசுச் சான்றிதழ் தன் கைக்கு வந்ததும், முதல் வேலையாக அதற்கு ஐந்து ஜெராக்ஸ் நகல்கள் எடுத்து ∴பைலில் அதைப் பத்திரப்படுத்தினான்.

தெற்கு மாடவீதியில் இருந்த கதவு எண் 8 – கொண்ட வீடு, சோ. சீனம்மாள் என்ற பெயரில் இருந்தது. அதன் கரண்ட் கனெக்ஷனும் சீனம்மாள் பெயரிலேயே இருந்தது. தெற்கு ரத வீதியில் பசு மாடு கட்டியிருந்த வீடு ஏற்கெனவே பாகப்பிரிவினையில் மூத்த அண்ணன் கேசவ பாலனிடம் போய் விட்டது.

இனாம் நாச்சியார்கோவில் கிராமத்தில் நஞ்சை வயக்காடு இருந்தது. பழைய ரிக்கார்டுகளைத் தேடியதில் ஏராளமான அடமானப் பத்திரங்களும், மூத்த அண்ணன்களின் பாக பாத்திய விடுதலைப் பத்திரங்களும், ஏராளமான நில வரி, கிஸ்தி வரி ரசீதுகளும், மின்சாரக் கட்டண ரசீதுகளும் கிடைத்தன. எல்லா ரிக்கார்டுகளும் மிகப் பழையன. சில கிரையப் பத்திரங்களின் மேலே வெள்ளைக்கார ஐந்தாம் ஜார்ஜ் மன்னரின் தலைச்சின்னம் பொறிக்கப்பட்டிருந்தது. இதை எல்லாம் கிருஷ்ணம்மாள் பாட்டியின் சொந்த பீரோவில் தேடி எடுக்க வேண்டியதாயிற்று.

ரிக்கார்டுகளை ஒழுங்குபடுத்தி, நிலத்தின் விஸ்தீரணத்தை வைத்துக் கொண்டு பார்த்ததில், அவை எல்லாம் பழைய சர்வே எண்களில் எழுதப்பட்டவை என்றும், ரயத்துவாரி பட்டா செட்டில்மெண்ட் சட்டம் அமலுக்கு வந்த 1963-ம் வருஷத்துக்கு அப்புறம் பழைய சர்வே எண்களுக்குப் பதிலாக புதிய சர்வே எண்கள் வழங்கப்பட்டதையும் சடகோபன் ஆராய்ந்து கண்டுபிடித்தான்.

நஞ்சை நிலம் ஆறரை ஏக்கர், கிணறு, கமலைக்குழி, உத்தி வாய்க்கால், மாவடை, மரவடை, என்று சகலமும் பழைய சர்வே எண்களில் இருந்தது, இவற்றுக்கெல்லாம் புதிய சர்வே எண்கள் என்னவென்று கண்டுபிடிக்க ரெவின்யூ வி.ஏ.ஓ.வால் தான் ஆகும். மீண்டும் வி.ஏ.ஓ. ஆபீசுக்கு சைக்கிள் ஏறிப் படையெடுத்தான் சடகோபன். உள்ளூர் வி.ஏ.ஓ. ஒரு பொம்மை. தலையாரி சத்தையா தான் சாவி என்பது அவனுக்குப் புரிந்து போனது.

தலையாரி சாத்தையாவை நேரில் பார்ப்பதென்றால், இரண்டு அல்லது மூன்று இடங்களில் கண்டுபிடிக்க முடியும். இரவு பத்து மணி முதல் காலை ஐந்து மணி வரை கிருஷ்ணன்கோவிலில் சாத்தையா அவரது முதல் மனைவியோடு இருப்பார். காலை ஐந்து மணிக்குப் பின் வள்ளிநாயகம் பிள்ளை கிளப்பில் காபி சாப்பிட்டுக் கொண்டிருப்பார்.

பகல் பொழுது முழுவதும் மல்லாபுரம் தெருவில் உள்ள வி.ஏ.ஓ. வீரம்மாள் வீட்டில் இருப்பார். வீரம்மாள் , சாத்தையாவின் மேல் அதிகாரியல்ல. அந்தப் பெண்ணும், சாத்தையாவும் ஒரே இனம். வீரம்மாள், பேருக்கு ஏற்றாற் போல வீரமாகவும், முறுக்கான தோற்றமும் கொண்டிருந்தாள். உதடுகளுக்கு மேலே மெல்லிய மீசை அவளுக்கு உண்டு. திருமணம் ஆகவில்லை.

பழைய சர்வே எண்களுக்குப் புதிய சர்வே எண்கள் என்ன என்று கண்டுபிடிப்பதற்கு, அடிக்கடி தலையாரி சாத்தையாவைத் தேடித் தேடி அவரது வீட்டிற்குப் போக வேண்டியதாயிற்று. காலை ஐந்து மணிக்குள் போனால், கிருஷ்ணன்கோவிலில் முதல் மனைவியின் வீட்டில் பார்த்தால் உண்டு. தவற விட்டால் கஷ்டம்தான். ஒரு தடவை சாத்தையாவைத் தேடி மல்லாபுரம் தெருவில் வி.ஏ.ஓ. வீரம்மாள் வீட்டிற்குப் போன போது, வீட்டின் கூடத்தில் இருவரும் ஒன்றாக அமர்ந்து சீட்டாடிக் கொண்டிருந்தனர்.

- 'அந்த ஜாக்கியைக் கீழே போடுங்க'.
- 'நீ முதல்ல ஏழு கிளாவரை இறக்கு'.
- 'ஏன், நீங்க இறக்கக் கூடாதா?'
- 'நான் இறக்கி, இறக்கித்தான் இப்படி நொந்து போய்க் கிடக்கேன் !'
- 'நானாப்புல என்னவாம்? எல்லாம் தூக்கிக் கொடுத்துட்டு, துவண்டு போய்க் கிடக்கேன்'.
- 'நான் சொல்றதைக் கேட்டு, பணிஞ்சு நடந்துக்க. அது தான் உனக்கு நல்லது'.
- 'நீங்களும் கொஞ்சம் பணியக் கூடாதா?'

இந்த சீட்டாட்ட உரையாடலின் நடுவில் சடகோபன் உள்ளே நுழைந்தான். அவனுக்கு ஏனோ மகாபாரதத்தில் துரியோதனனின் மனைவி பானுமதியுடன் கர்ணன் சொக்கட்டான் ஆடிக் கொண்டிருந்த போது, துரியோதனன் அரங்கத்தில் திடீரென எதிர்பாராமல் நுழைந்தது ஞாபகத்துக்கு வந்தது.

- 'சாமி ! வாங்க, வீரம்மா, இந்த சாமி ஒரு சர்ட்டிபிகேட்டுக்காக ரொம்ப நாள் என்னையத் தேடி அலையா அலையறாரு. கொடுத்துடுவோமா?'
- 'நீங்க பாத்து எது வேணா கொடுங்க'.
- 'என்ன இருந்தாலும் நீ சொன்னாத்தான் சாமிக்கு நான் எழுதித் தருவேன்'.
- 'சாமி! அந்த சர்டிபிகேட்டுக்கு நூறு ரூவா ஆகும். போயி பணத்தை எடுத்துக்கிட்டு வாங்க. உடனே வி.ஏ.ஓ. கிட்ட கையெழுத்து வாங்கித் தந்துரலாம்.' என்றாள் மீசை முளைத்த வீரம்மாள்.

அந்த இடத்தை விட்டு அகன்றபோது,

- 'கதவை சாத்திட்டு உள்ள வாங்க. டயமாகுது' என்ற வீரம்மாளின் குரலும், சாத்தையாவின் சிரிப்பொலியும் கேட்டது.

பின் மாலையில், சடகோபன் சைக்கிள் மிதித்து, வீட்டிலிருந்து பணம் எடுத்து வந்து சாத்தையாவிடம் தந்தான்.

- 'சாமீ! நீங்களே உங்களுக்கு வேணுங்கற விதத்துல அடிச்சு எடுத்துக்கிட்டு வந்துருங்க. நான் கையெழுத்து வாங்கித் தந்துர்றேன்.'

டைப்பிஸ்ட் சங்கரன் மாமா தான், வரி பிசகாமல் கன கச்சிதமாக அடித்துத் தந்தார்.

இந்தப் பழைய சர்வே நம்பர்களுக்கு, புதிய சர்வே நம்பர்கள் என்ன என்று கண்டுபிடிக்க, மொகஞ்சதாரோ, ஹரப்பா நகர தொல்லியல் ஆராய்ச்சியாளர்களைப் போல பழைய ரெக்கார்டுகளையெல்லாம் தேடி எடுத்து வந்து கையெழுத்து வாங்கித் தந்தார் சாத்தையா.

இந்த ரெவின்யூ டிபார்ட்மென்ட்டோடு உள்நாட்டு யுத்தம் நடந்து கொண்டிருந்த அதே சமயத்தில், வேறொரு உபரி வேலையும் வந்து சேர்ந்தது.

சடகோபனும், அவனது சகோதரர்கள் இரண்டு பேரும். படித்தது எல்லாம் விருதுநகரில் தான். அங்கு அவனது அப்பா, மைனர்களான தன் பிள்ளைகளின் பேரில், ரெயில்வே ஸ்டேஷன் வாசலில் இருந்த போஸ்ட் ஆபீசில் சேவிங்ஸ் பேங்க் கணக்கு துவங்கி வைத்திருந்தார். ஒவ்வொரு பிள்ளையின் பெயரிலும் ஒரு தனி சேவிங்க்ஸ் பேங்க் கணக்கு. அத்துடன் அப்பா, அம்மா பெயரில் இரண்டு தனி அக்கவுண்ட்கள். பள்ளிப் படிப்பு முடிந்து ஸ்ரீவில்லிபுத்தூருக்கு சொந்த வீட்டிற்கு வந்ததும், எல்லாமே மறந்து போனது.

சடகோபன், தன் வயக்காட்டிற்கான பழைய ரிக்கார்டுகளைத் தேடிக் கொண்டிருந்தபோது, மேற்படி போஸ்ட் ஆபீஸ் சேமிப்பு பாஸ் புக்குகள் அவன் கையில் யதேச்சையாகக் கிடைத்தன. எல்லாமே இள மஞ்சள் நிறத்தில், அழுக்கேறிக் கந்தல் கந்தலாய்க் கிடந்தன. எல்லாவற்றையும் ஒழுங்குபடுத்தி எடுத்துக் கொண்டு முனிசிபல் ஆபீசுக்கு நேர் எதிரில் உள்ள போஸ்ட் ஆபீசுக்குப் போனான் சடகோபன்.

- 'சார், இந்த பாஸ் புக் எல்லாம் பழசு. விருதுநகர் போஸ்ட் ஆபீசுல அக்கவுண்ட் இருக்கு. இதையெல்லாம் மாத்தி இங்க கொண்டு வர முடியுமா?'

போஸ்ட் ஆபீஸ் கிளார்க், அந்த ஐந்து பாஸ் புக்குகளையும் நன்கு பார்த்து விட்டு,

- 'சார், இந்த பாஸ் புக் எல்லாமே 1985 க்குப் பிறகு எதுவுமே செய்யாம அப்படியே கிடந்து போச்சு. இது டெட் அக்கவுண்ட். இதுக்கு ஒரு ரிக்வசிஷன் எழுதித் தாங்க. இதையெல்லாம் முதல்ல புதுப்பிச்சுக் கொண்டு வரணும். அதுக்கு புது அக்கவுண்ட் நம்பர் தருவாங்க. எங்களுக்கு ஹெட் குவார்ட்டர்ஸ் சிவகாசி ஆபீஸ். அதனால அவங்க மூலமாத்தான் அனுப்பணும். '

ஐந்து பேரின், ஐந்து சேமிப்புக் கணக்குகளையும் புதுப்பித்துத் தர வேண்டி, வேண்டுகோள் கடிதம் எழுதி, அவற்றை சிவகாசி தலைமை தபால் அலுவலகத்துக்கு சடகோபன் அனுப்பி வைத்து விட்டு, தினசரி போஸ்ட் ஆபீசுக்கு சைக்கிள் மிதித்துச் சென்றான் சடகோபன்.

இருபது நாட்கள் கழித்து, அவை யாவும் புதுப்பிக்கப்பட்டு புதிய பாஸ் புக்குகளாகத் திரும்பி வந்தன. அந்த ஐந்து பாஸ் புக்குகளையும் கணக்கு முடிக்கச் சொல்லி, அவைகளை மீண்டும் விருதுநகர் தபால் அலுவலகத்திற்கு அனுப்ப, அவை ஒவ்வொன்றாகக் கணக்கு முடிக்கப்பட்டு, ரொக்கப்பணம் கையில் வந்தது.

அரசாங்க மனுக்கள் தயாரிப்பது எப்படி, அவற்றில் பயன்படுத்த வேண்டிய மொழி நடை எது, அப்படி மனுக்களைத் தயாரித்து யாருக்கு எங்கு அனுப்ப வேண்டும், அப்படி அனுப்புகிற மனுக்கள் எந்த வாயில் வழியாக உயர் அதிகாரியின் நடவடிக்கைக்குப் போகிறது. என்றெல்லாம் ஓரளவுக்கு அவனுக்குப் பிடிபட ஆரம்பித்து விட்டது. போதாக்குறைக்கு அவன் தன் நண்பன் ஒருவனுடன் இராஜபாளையம் போய், அம்பலப்புளி பஜார் கடை வீதியில் தரமான வழுவழுப்பான நியூஸ்பிரிண்ட் காகிதம் எங்கே கிடைக்கிறது என விசாரித்துக் கொண்டு, கிலோக்கணக்கில் அந்தக் காகிதத்தை விலை கொடுத்து வாங்கி, வீட்டில் இருப்பில் வைத்தான்.

அந்த நியூஸ்பிரிண்ட் காகிதத்தின் வணிகப் பெயர் '∴பாரின் நியூஸ்பிரிண்ட்'. அந்தப் பேப்பரை வாங்கி அதைத் தடவிப் பார்த்தான். மொசைக் தரை போல மென்மையாய், சமமாய் இருந்தது. கருப்பு பால் பாயிண்ட் பேனாவால் அதன் மேல் எழுத, எழுத ரொம்ப சுகமாய் இருந்தது. அச்சு மிஷினில் காகிதம் வெட்டும்போது, கழிவுப் பேப்பர் என்று சிவகாசி அச்சகங்களில் கழிக்கப்பட்ட அந்த நியூஸ் பிரிண்ட், அம்பலப்புளி பஜாரில் கிலோ முப்பது ரூபாய்க்கு கிடைத்தது. அதில் பேனாவை ஓட்டி எழுத, எழுத அருமையாக இருந்தது. எழுத்துக்கள் யாவும் அவன் நினைத்தபடியே கிடைத்தன…

வயக்காடு சம்பந்தப்பட்ட பழைய ரிக்கார்டுகளைத் தேடி எடுத்து, எந்த சர்வே எண்ணில் எவ்வளவு நிலம், எவ்வளவு விஸ்தீரணம் என்று கண்டுபிடித்ததில், ஏக்கர், ஹெக்டேர் கணக்கு உதைத்தது. ஏக்கரில் இருந்து ஹெக்டேருக்கு மாற்றும் போது குழப்பம் வந்தது. மீண்டும் சாத்தையாவின் வீட்டிற்குப் போக வேண்டி வந்தது.

- 'சாமி! நல்லாக் கேட்டுக்கங்க! ஒரு மரக்கால்ங்கறது சுமார் எட்டு சென்ட். பன்னிரண்டு மரக்கால் ஒரு ஏக்கர். நூறு சென்ட் சேர்ந்தது ஒரு ஏக்கர். நாற்பது ஏர் சேர்ந்தது ஒரு ஏக்கர்.

இரண்டரை ஏக்கர் சேர்ந்தது ஒரு ஹெக்டேர். இந்தக் கணக்குல உங்களோட நஞ்சை நிலத்துக்கு மொத்த விஸ்தீரணம் சுமார் ஆறரை ஏக்கர் வரும். இந்த ஆறரை ஏக்கர்ல ஒரு எட்டு மரக்கால் மட்டும் தனியா ஒதுங்கி, உங்க காட்டுக்கு வடக்கே வழிவிட்டான் வகையறா நஞ்சை பக்கத்துல இருக்கு. அந்த நஞ்சையில ஒரு கிணறும் இருக்கு' என்று கைரேகை ஜோசியம் பார்ப்பவனைப் போல, சர்வே வரைபடத்தை வைத்துக் கொண்டு சாத்தையா பேசினார்.

வயக்காட்டிற்கு சைக்கிள் மிதித்து, அந்த ஸ்தலத்தில் தனியாக நிற்கும் எட்டு மரக்கால் நிலத்தைப் பார்க்க, அதில் இருந்த கிணறு, சுற்றுச்சுவர் இல்லாமல் பாழடைந்து கிடந்தது. அருகில் இருந்த வழிவிட்டான் என்ற உள்ளூர்க்காரன், ஏற்கெனவே அந்தக் கிணற்று மேட்டில் இருந்த மூன்று வேப்ப மரங்கள், பெரிய கொடுக்காப்புளி மரம் ஒன்று, மஞ்சணத்தி மரம் ஒன்று, இவைகளையெல்லாம் வெட்டி, மரக்கடை லிங்கராஜாவிடம் விற்று விட்டது தெரிய வந்தது.

அருகில் இருந்த வன்னியம்பட்டி போலீஸ் ஸ்டேஷனில் வழிவிட்டான் மற்றும் அவனது பொஞ்சாதி தாய் என்பவள் மீது எழுத்து மூலமாய் புகார் எழுதித் தந்து, போலீஸ் ஸ்டேஷனுக்கு நான்கு நாட்கள் அலையாய் அலைந்து அங்கு பகல் பொழுது முழுதும் வாசல் பெஞ்ச்சில் காத்துக் கிடந்த போது, போலீஸ் ஸ்டேஷனின் அன்றாட அலுவலக நடபடிகள் யாவும் ரொம்ப பரிச்சயமானது…

ஒவ்வொரு ஆங்கில ஜூன் மாதத்திலும் பசலி ஆண்டு பிறக்கிறது. இந்தப் பசலி ஆண்டு தான் ரெவின்யூ டிபார்ட்மெண்ட் எனப்படும் வருவாய்த்துறைக்கு அலுவலக வழிகாட்டி. விவசாய நிலத்துக்கு வரி வசூல், கண்மாய் மீன் குத்தகைக்கு கிஸ்தி வசூல் முதலியன எல்லாம் இந்த பசலி ஆண்டைக் கணக்கில் கொண்டு தான் செய்யப்பட வேண்டும். ஒவ்வொரு பசலி ஆரம்பத்திலும், ரெவின்யூ அதிகாரிகள் வரி வசூல் செய்ய ஆரம்பித்து விடுவார்கள்.

ஸ்ரீவில்லிபுத்தூர் வட்டாரத்தில், முன்பெல்லாம் ரெவின்யூ வி.ஏ.ஓ., தலையாரிகள் யாவரும் ஒரு படையாகப் புறப்பட்டுச் சென்று, சம்சாரிகள் வீட்டிற்கே நேரடியாகப் போய் நில வரி, கிஸ்தி வசூல் செய்து வந்தனர். ஒவ்வொரு பசலி ஆண்டின் துவக்கத்திலும், கலெக்டர்

ஜமாபந்தி என்ற அலுவலக இன்ஸ்பெக்ஷன் நடைபெறும் முன்பே வரி வசூல் செய்து, கலெக்டரிடம் நல்ல பேர் வாங்கிக் கொள்வார் தாசில்தார். ஒரு பசலி ஆண்டில், சடகோபனின் வீட்டிற்கு வரி வசூல் செய்ய வந்தார்கள்.

- 'சாமீ! முதன்முதலா உங்க வீட்டுல இருந்துதான் வரி வசூல் ஆரம்பிக்கிறோம். பாத்து வரியைக் கட்டி விட்டுருங்க!' என்று ஆரம்பித்து வைப்பது வழக்கமாயிற்று.

ஐம்பது ஏக்கர், நூறு ஏக்கர் உள்ள பெரிய சம்சாரிகளை எல்லாம் விட்டு விட்டு, தன் வீட்டிற்கு வரி வசூலுக்கு முதலிலேயே ஏன் வருகிறார்கள் என விசாரித்தபோது, ஒரு உண்மையைத் தெரிந்து கொண்டான்.

- 'சாமீ! முதல்ல உங்க கிட்ட வரி வசூல் பண்ணிட்டா, மத்தவங்க கிட்டயெல்லாம் போயி, 'சாமி கிட்டயே வரி வசூல் பண்ணிட்டோம். அதனால நீயும் வரியைப் போட்டுருன்னு' சொல்லிச் சொல்லியே எல்லார்கிட்டயும் வசூல் பண்ணிடுவேன்' என்றார் சாத்தையா.

வாரிசுரிமைச் சான்றிதழை வைத்துக் கொண்டு சர்வே எண். 574/6ல் உள்ள நிலங்களை பட்டா பெயர் மாற்றம் செய்ய மொத்தம் ஐநூறு ரூபாய் வாங்கிக் கொண்டார் சாத்தையா. பதினைந்து நாட்களுக்குப் பின்பு புதிய பட்டா பெயர் மாற்றம் செய்யப்பட்டு, புல வரைபடம் மற்றும் தகவல்களுடன் புதிய ப்ரவுன் அட்டை போட்டு, ஸ்டேப்ளர் பின் அடித்து ஒரு சிறு புத்தகம் போல அழகாக சடகோபனிடம் தந்தார்.

- 'சாமீ! இதை வெச்சுக்கிட்டு மற்ற எல்லாத்தையும் பேரை மாத்திடுங்க!'
- 'மற்ற எல்லாம்னா…'
- 'உதாரணத்துக்கு வயலுக்கு உள்ள கிணறு, பம்புசெட் கனெக்ஷன், இதெல்லாம் இப்ப யார் பேர்ல இருக்குன்னு பாருங்க. அநேகமா அதுக்கு இந்த மாதிரி பேர் மாற்றம் பண்ணியிருக்க மாட்டாங்க. அதையும் பேர் மாற்றம் பண்ணி, உங்க அப்பா பேருக்குக் கொண்டு வந்துருங்க.'

விவசாய நிலங்கள் இனாம் நாச்சியார்கோவில் கிராமத்தில் இருந்தன. அதற்கு மின்சாரம் தரும் அலுவலகம், படிக்காசுவைத்தான்பட்டி ஜே.ஈ. அலுவலகம். அந்த அலுவலகத்திற்கு சைக்கிள் மிதித்துப் போன ஒரு மாத கால அனுபவம், ராமபிரானின் வனவாச அனுபவத்திற்குச் சமமானது.

படிக்காசுவைத்தான்பட்டி ஜே.ஈ.யைப் பார்க்க வேண்டுமென்றால், காலை ஏழு மணிக்கு அவரது அலுவலகத்திற்கு சைக்கிள் மிதித்துப் போய் காத்திருக்க வேண்டும். காத்திருந்தான் சடகோபன். அலுவலக வளாகத்திற்குள்ளேயே பணியாளர் குடியிருப்பு. அங்கு ஜே.ஈ. க்கு வீடு. அங்கிருந்து ஒரு தோல் பையை கக்கத்தில் இடுக்கிக் கொண்டு காலையில் வருவார் ஜே.ஈ. வயர்மேன்கள் தயாராய் இருப்பார்கள். ஜே.ஈ. அலுவலக இருக்கையில் அமர்ந்ததும், வருகைப் பதிவேடு முடிக்கப்பட்டு, அவர் அன்றைய தினத்துக்கு உண்டான வேலைகளைச் செய்ய கட்டளையிடுவார்.

பூராவும் பருத்தி நூல் நெசவாலைகள் உள்ள பகுதி என்பதால் இடைவிடாது த்ரீ ஃபேஸ் மின் சப்ளை தந்து கொண்டேயிருக்க வேண்டும். மின் தடை ஏற்பட்டால், முதல் போன் கோட்டைப்பட்டியில் உள்ள ஏ.ஈ. ஆபீசுக்குப் போகும். உடனே, மின் சப்ளையை சரி செய்து கொடுக்கவில்லையென்றால், அடுத்த போன் மாநில மின்துறை அமைச்சருக்கே போகும். அப்படியும் சரியாகவில்லையென்றால், மத்திய மந்திரிக்கு அடுத்த போன் கால் பறக்கும். இவ்வளவு வேலை நெருக்கடிகளுக்கு மத்தியில் ஜே.ஈ. ராம குடும்பன், ஆவணங்கள் அடங்கிய ஃபைலோடு, அவருக்கு எதிரே உள்ள மர ஸ்டூலில் காத்திருக்கும் சடகோபனை சட்டை செய்யக்கூட மாட்டார். ஏதாவது ஒரு குறை சொல்லி, பெயர் மாற்ற விண்ணப்பத்தினை திருப்பி அனுப்பி விடுவார்.

முதல் தடவை, அவன் பெயர் மாற்ற விண்ணப்பம் தந்த போது, விண்ணப்ப மனுவினை புரட்டிப் பார்த்து விட்டு, 'சார், இதுல வெல் ஓனர்ஷிப் சர்டிபிகேட் இல்ல. அதாவது வயக்காட்டுல இருக்கற உங்க கிணத்துக்கு ஓனர் யாரு? அந்தக் கிணறு இருக்கற சர்வே நம்பர். பம்பு செட் எத்தனை ஹெச்.பி. மோட்டார். இதையெல்லாம் குறிப்பிட்டு கிணறு பாத்தியதைக்கு, ஒரு சர்டிபிகேட்டை வி.ஏ.ஓ. கிட்ட கேளுங்க. அவர்

தருவாரு' என்று சொல்லி அவனைத் திருப்பி அனுப்பினார் ராம குடும்பன்.

அந்தச் சான்றிதழை வாங்க தலையாரி சாத்தையாவின் பகல் நேர வீட்டுக்கு வந்தான். வீடு உள்ளே பூட்டப்பட்டிருந்தது. வாசலில் ரெண்டு ஜோடி செருப்புகள் இருந்தன. சிணுங்கலான குரல்கள் உள்ளிருந்து கேட்டன.

- 'உமக்கு சாத்தையான்னு பொருத்தமான பேர் தான் வெச்சிருக்காங்க. போட்டு இந்த சாத்து சாத்துறீரு'

- 'வெறும் சாத்து சாத்தி என்ன பண்ண !? உனக்காக இப்படி உடம்பை உருக்கறேன். நீ தான் எனக்கு எந்த உதவியும் செய்யாம அப்படியே என்னைய வெச்சிருக்க.'

- 'உமக்கு என்ன வேணும்னு வாயைத் தொறந்து கேளும்!'

- 'கேட்டாப்புல நீ வாங்கித் தந்துரவா போற'

- 'உமக்காக என்னையவே கொடுத்துருக்கேன். வேற எது கேட்டாலும் வாங்கித் தராமலா போயிருவேன்!'

- 'ஒரு டி.வி.எஸ் - ஃபிஃப்டி வாங்கித் தா வீரம்மா. சைக்கிள் ஓட்ட உடம்புல வலு இல்ல.'

- 'இதுக்கெல்லாம் மட்டும் வலு இருக்குமாக்கும். அடுத்த மாசமே உமக்கு டி.வி.எஸ் - ஃபிஃப்டி ரெடி…'

அதற்கு மேல் அந்த இடத்தில் நிற்க அவனுக்குப் பிடிக்கவில்லை.

மறுநாள், நூற்றி இருபத்தி ஐந்து ரூபாய் பெற்றுக் கொண்டு, அந்தக் கிணறு பாத்தியதை சான்றிதழை ஒரே மணி நேரத்தில் பெற்றுத் தந்தார் சாத்தையா.

தினசரி மதியப் பொழுதில், ஜே.ஈ. ராமக் குடும்பனை அவரது அலுவலகத்தில் பார்க்க, ஆறு கிலோமீட்டர் சைக்கிள் மிதிக்க வேண்டியிருந்தது. தினசரி அவரது இருக்கைக்கு எதிராக உள்ள ஸ்டூலில் அமர்ந்து கொண்டு, ஜே.ஈ. இருக்கைக்கு தலை மேலே சுவரில் இருந்த, சட்டம் போட்டு மாட்டிய ரவிவர்மாவின் சரஸ்வதி படத்தை வேடிக்கை பார்த்துக் கொண்டே இருக்க வேண்டியதாயிற்று.

பத்து நாட்கள் தொடர்ந்து அலைந்த பின், ஒரு நாள் அவர் ஒரு மாலைப் பொழுதில் அவனிடம்,

'சடகோபன் சார்!, எனக்கு ஒரு டவுட். உங்க வயக்காட்டு ஈ.பி. சர்விஸ் கனெக்ஷன், யார் பேர்ல இருக்கு தெரியுமா சார்?' என்றார்.

- 'தெரியல சார். அது யார் பேர்ல இருக்குன்னு நீங்க தான் சொல்லணும்!'

- 'என் ஆபீஸ்ல அது சம்பந்தமா ரெக்கார்டு எதுவும் இல்ல. இது வெறும் சப்-ஸ்டேஷன். இங்க டிஸ்டிரிப்யூசன் மட்டும். நீங்க ஒண்ணு பண்ணுங்க. நேரா மடவார் வளாகம் போங்க. அங்க தான் எங்க அக்கவுண்ட்ஸ் ஆபீஸ் இருக்கு. அங்க அக்கவுண்ட்ஸ் ஆபீசர் மரகதம்னு ஒருத்தர் இருப்பாங்க. அவங்க கிட்ட கேட்டா அவர் சொல்லிடுவாங்க.'

மடவார்வளாகத்துக்கு சைக்கிள் மிதித்தான் சடகோபன். மதிய வெய்யில் மண்டையைப் பிளந்தது. 'இது என்ன வேதனை !? இது என்ன ஓயாத அலைச்சல்?! வீட்டில் யாருமே இதை முன்னெடுத்துச் செய்ய மறுக்கிறார்கள். அப்பாவோ 1980ல் செத்துப் போன பாட்டி சாகவே இல்லை. இன்னமும் அவள் உயிரோடு வீட்டுக்குள்ளேயே இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறார். அம்மாவுக்கு சொத்து பத்து பற்றி எதுவும் தெரியாது. தம்பிகள் ரெண்டு பேரும் இந்த அரசு அலுவலகம் சம்பந்தப்பட்ட லயசன் வேலைகள் யாவும் அவனுடையது என்று சொல்லி அனைத்தையும் அவனிடம் தள்ளி விட்டார்கள். இப்போது வேகாத வெயிலில் சைக்கிள் மிதிக்க வைத்து விட்டார் அந்தப் பாழாய்ப் போன ஜே.ஈ.. பேசாமல், இந்த பெயர் மாற்றம், மண்ணாங்கட்டியெல்லாம் எதுக்கு? அது பாட்டுக்கு பழையபடியே பாட்டி பெயரிலேயே இருக்கட்டுமே! என்ன கெட்டுப் போய் விட்டது?! பெயர்

மாற்றம் செய்து தந்தால் வீட்டில் உள்ள பெரிய பாராட்டா தந்து விடப் போகிறார்கள்?!'

மடவார்வளாகம் அக்கவுண்ட்ஸ் ஆபீஸ் சிவன் கோவில் தெப்பக்குளத்திற்கு எதிரே உள்ள சேத்தூர், சிவகிரி ஜமீன்தார் பங்களா கட்டிடத்தில், மாடியில் இயங்கி வந்தது. அது அரண்மனை வீடு. மாத வாடகைக்கு அரசாங்கத்திடம் கொடுத்திருக்கிறார்கள். கட்டிடத்தின் அத்தனை தூண்களும் அசல் தேக்கு. இவன் படியேறி, அங்கு மாடியில் போய் நின்ற போது, அந்த அலுவலகத்தின் எல்லா ரிஜிஸ்தர்களையும் மூட்டை கட்டிக் கொண்டிருந்தார்கள். எல்லா மர பீரோக்களும் திறந்து வைக்கப்பட்டு, எல்லாக் கோப்புகளும் கட்டப்பட்டுக் கிடந்தன. அதன் ஊழியர்கள் அங்குமிங்கும் ஓடி, எல்லா அலுவலக பொருட்களையும் மூட்டை கட்டிக் கொண்டிருந்தனர். ஏதோ மொத்த அலுவலகமே நீதிமன்ற உத்தரவின் பேரில் ஜப்தி செய்யப்பட்டது போல் காட்சியளித்தது. விசாரித்த போது, அந்த அலுவலகத்தின் உரிமையாளர் கட்டிடத்தை காலி செய்யச் சொல்லி விட்டதாகவும், விரைவில் அதே இடத்தில் தொழிற்படிப்புக்கான ஐ.டி.ஐ. ஆரம்பிக்கப்படுவதாகவும் ஒரு கிளார்க் சொன்னார்.

- 'இந்த ஆபீஸ் மொத்தமும் கோட்டைப்பட்டியில இருக்கற எங்க ஹெட் ஆபீஸோடு போய் ஜாயின் ஆகுது. நாங்க இந்த ஆபீஸை ஷி∴ப்ட் பண்ணிக் கொண்டு போக ஒரு வாரம் ஆகும். ஒரு வாரம் கழிச்சு, அங்க நேரா கோட்டைப்பட்டி ஹெட் ஆபீசுக்கு வந்திருங்க.'

ஒரு வாரம் கழித்து அங்கு போனான். அவனது வயல்வெளி பம்புசெட்டுக்கு மின் இணைப்பு எஸ்.சி. எண். 7. அந்த மின் இணைப்பு சோ. சீனம்மாள் மற்றும் கிருஷ்ணம்மாள் ஆகிய இரண்டு பேரின் பெயரில் ஜாயிண்டாக இருப்பதாக செக்ஷன் கிளார்க் சொன்னார்.

படிக்காசுவைத்தான்பட்டி கிளை அலுவலகத்துக்கு வந்தபோது, ஆபீசர் ராமக்குடும்பன்,

'உங்க குடும்பத்துல யார் யாருக்கு என்ன உறவுன்னே தெரியல. கிருஷ்ணமாச்சாரியார் யாரு? அவருக்கும் இந்த சோ. சீனம்மாளுக்கும் என்ன உறவு? இந்த கிருஷ்ணம்மாளுக்கும் சீனம்மாளுக்கும் என் உறவு? இதையெல்லாம் முழுசா விளக்கிச்

சொல்ற மாதிரி ஒரு வரைபடம் தயார் பண்ணுங்க. அதுக்குப் பேரு கொடி வழி ஜாபிதா. அதைத் தயார் பண்ணிக்கிட்டு வந்தீங்கண்ணா, இப்ப இருக்கற சோ. சீனம்மாள், கிருஷ்ணம்மாள் ரெண்டு பேரையும் நீக்கிட்டு, உங்க அப்பா பேருக்கே சர்வீஸ் கனெக்ஷனைக் கொண்டு வந்துரலாம்.' என்றார்.

கொடிவழி ஜாபிதா என்பது பழைய தலைமுறைகளின் வம்சாவளித் தொடர்ச்சியை விளக்கும் ஆலமரம் போன்ற வரைபடம். Genealogy chart. அப்பாவிடம் கேட்டபோது, லட்சுமி அம்மாள் என்ற நான்கு தலைமுறைக்கு முற்பட்ட ஒரு பெயரிலிருந்து பிதுரார்ஜித வம்சாவளியை ஆரம்பித்தார். அது கிளை படர்ந்து, படர்ந்து சோ. சீனம்மாளிடம் வந்து நின்றது. சீனம்மாளின் ஒரே மகள் கிருஷ்ணம்மாள். கிருஷ்ணம்மாளின் கணவர், திருமணமான சில காலத்திலேயே ( அவர் மனைவி கர்ப்பமாயிருந்த காலத்திலேயே ) திடீரென்று அகாலமாக இறந்து விட, சடகோபனின் அப்பா அரங்கநாதன் பிறந்தார். ஒரே பிள்ளை என்பதாலும், புருஷன் இல்லாத காரணத்தாலும், தன் பிள்ளையை கிருஷ்ணம்மாள் பொத்திப் பொத்தி வளர்க்க, பாட்டி சீனம்மாள் அவர் மீது அன்பைப் பொழிந்திருக்கிறாள். இரு விதவைகள் வளர்த்த பிள்ளை அரங்கநாதன், தாய் சொல்லைத் தட்டியதே இல்லை. வீடு விட்டால் பள்ளி. பள்ளி விட்டால் கோயில். கோயில் விட்டால் வீடு, என்று குறுகிய வட்டத்தில் சுழன்றிருக்கிறார்.

தட்டச்சு, சுருக்கெழுத்துத் தேர்வுகளில் பாஸானதும், அவருக்கு பம்பாயில் வேலை கிடைத்தது. ஆனாலும், தாய், பாட்டி அரவணைப்பை விட்டுச் செல்ல மனம் வரவில்லை.

அப்பாவின் மூதாதையர் வழியில், நேரடியாக ஒரே வாரிசு அப்பா மட்டுமே. உடன் பிறந்தோர் யாரும் இல்லை. அண்ணன், தம்பி என்று ஒருவரும் இல்லாததால், இருக்கும் ஒரே வாரிசையும் விட்டுக் கொடுத்து விட மனமில்லாததால், அப்பாவை ஊரை விட்டு எங்குமே அனுப்பாமல் வீட்டுக்குள்ளேயே தக்க வைத்துக் கொண்டனர் அவரது அம்மாவும், பாட்டியும். ஒரு வார்த்தை கூட தங்கள் வீட்டுப் பிள்ளையைக் கடிந்து பேசியதில்லை. யாருடனும் விளையாட அனுமதித்ததில்லை.

இதனால், அம்மாவும், பாட்டியும் வெறும் உறவு என்றில்லாமல், உயிருடன் வீட்டைக் காவல் காக்கும் தெய்வங்கள் என்றாகிப் போனது. தன் அம்மாவுக்கு, அப்பா அரங்கநாதன் கடிதம் எழுதும் போது,

'அம்மா, திருவடித் தாமரைகளில் அடியேன் தெண்டன் சமர்ப்பித்த விஞ்ஞாபனம் ' என்று தான் எழுதத் தொடங்குவார். அவர்களை உயிருடன், கண் முன்னே, நடமாடிய தெய்வங்களாகக் கருதிய அப்பா, அவர்கள் இறந்த பிறகும், அவர்கள் இறந்ததாக நினைக்காமல், அவர்கள் நினைவாக வருடம் தவறாமல், தெவசம், திதி போன்ற சடங்குகளை செய்து வந்திருக்கிறார். வீட்டில் ஸ்வாமி படங்களுக்கு அருகில் அவர்களது உருவப்படங்களும் உண்டு.

இதனாலேயே அவரது அம்மா, பாட்டி இருவரும் இறந்த பிறகும், அவர்கள் உயிரோடும் இருப்பதாக மனப்பிரமை கொண்டு, அவர்களுக்கு டெத் சர்ட்டி∴பிகேட் வாங்க மறுத்திருக்கிறார்…

அப்பாவின் கொடிவழி ஜாபிதா, ஒரே நேர் கோடு. அதைப் படமாக வரைந்து எடுத்துக் கொண்டு ஜுனியர் இன்ஜினியர் ராமக் குடும்பன் முன்பு போய் நின்றான். அதில் அப்பா, அம்மா, அவர்களது பிள்ளைகள் தவிர ஒருவரும் உயிரோடு இல்லை.

- 'சார், இந்த நேம் டிரான்ஸ்பருக்கு கொஞ்சம் ∴பீஸ் நீங்க தரணும்'
- 'சார், எவ்வளவு? ' – சுவரில் தொங்கிக் கொண்டிருந்த சரஸ்வதி படத்தைப் பார்த்தபடியே கேட்டான் சடகோபன்.

- 'நானூறு'

முந்நூறு கொடுத்தான் சடகோபன்.

- 'மூணு நாள் பொறுத்துக்கோங்க. நானே ஏ.ஈ. ஆபீஸ்ல போய் முடிச்சிட்டு வந்துர்றேன்.'

மூன்று நாட்கள் பொறுமை இல்லாமல், தானே நேரடியாய் ஏ.ஈ. ஆபீஸ் போய், கையோடு அந்த நேம் டிரான்ஸ்பர் ஆர்டரைக் கையெழுத்துப் போட்டுவிட்டு வாங்கிக் கொண்டான். நேம் டிரான்ஸ்பர் ஆர்டர் அச்சடிக்கப்பட்டிருந்த காகிதம் ஒரு முழு ∴புல்ஸ்கேப் காகிதத்தில் மூன்றில் ஒரு பாகம் அளவு கொண்ட சிறிய காகிதம் தான்.

இதை வாங்கத் தானா இத்தனை நாள் நாயாய் அலைந்தோம் என்று தலையில் அடித்துக் கொண்டான்.

இந்த மின்சார வாரியத்திற்கு சைக்கிள் காவடி எடுக்க ஆன காலம் நான்கு வாரம். அதற்குள் அரசு அலுவலக நடபடிகள் அனைத்தும் அத்துப்படியாகி விட்டது. அவன் குடியிருந்த தெற்கு மாட வீதியில் உள்ளவர்கள் யாவரும் பரம சாதுக்கள். எந்த வம்பு தும்புக்கும் போகாதவர்கள். காலை, மாலை, இரவு என எந்த நேரமும் அமைதியே வடிவானது அவனது தெற்கு மாட வீதி. வீட்டுக்குள்ளேயே டி.வி. பார்த்துக் கொண்டு முடங்கிக் கிடக்கும் மக்கள். தெரு விளக்கு எரியவில்லை. முனிசிபல் குழாயில் தண்ணீர் வரவில்லை. குப்பை வாரப்படவில்லை. ரேஷனில் சீனி போடவில்லை. வாக்காளர் அடையாள அட்டை தரவில்லை. ஆண்டாள் கோவில் வாசலில் அசுத்தம். கோவிலுக்கு வரும் பக்தர்கள், கோவில் வாசலில் சிறுநீர், மலஜலம் கழிக்கிறார்கள். இப்படி அந்த வீதியில் எது நடந்தாலும் எதைப் பற்றியும் கவலைப்படாதவர்கள் அந்த வீதி மக்கள்.

இவர்கள் யாவருக்குமாகச் சேர்த்து, சடகோபன் ஒருவனே, ஏகமான, தேர்ந்தெடுக்கப்படாத மக்கள் பிரதிநிதியாகி, தான் கற்ற அரசு அலுவலக நடைமுறை எனும் மிக உபயோகமுள்ள பாடங்களை வைத்துக் கொண்டு, நகராட்சி அலுவலகம், வட்டாட்சியர், கிராம அலுவலர், வங்கி மேலாளர், தபால் நிலைய அதிகாரி, சட்டசபை உறுப்பினர், மாவட்ட ஆட்சியர் ,மாநில ஆளுநர், மத்திய அமைச்சர் என யாவருக்கும் தன் சொந்த முயற்சியில் மனுக்கள் எழுதி, தன் குறைகளைத் தானே தீர்த்துக் கொள்ளும் உபயோகமுள்ள வாழ்க்கைப் பாடத்தைப் படித்துக் கொண்டான்.

அவன் ஆங்கில இலக்கியத்தில் பெற்ற எம்.ஏ,. பட்டத்தைவிட பயனுள்ள பட்டப்படிப்பு இந்த 'அரசு அலுவலகத்தை நேர் கொள்வது எப்படி? ' என்ற பிரத்யட்சமான அனுபவப் படிப்பு. ஒவ்வொரு முறை அவன் அரசாங்கத்துக்கு அனுப்பும் மனுவுக்கு, சில நாட்கள் கழித்து, அவனுக்குப் பதில் கடிதம் வரும். அதில் நிறம் சோகையான காகிதத்தில், கருநீல வர்ணத்தில் டைப் செய்யப்பட்ட தமிழ் எழுத்துக்கள் யாவுமே, அவனது மனுவுக்கு சரியான பதில் சொல்லி, அரசாங்க நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளதை அவனுக்குச் சுட்டிக் காட்டும். அதன் கீழே "ஒப்பம் /-" என்று எழுதப்பட்டு, பச்சை மையில்

கையொப்பம். அதன் கீழே "/உத்தரவின்படி /-" என்று எழுதப்பட்டிருக்கும். இதைப் பார்க்கப் பார்க்க அவனுக்கு மகிழ்ச்சி உண்டானது. காகிதத்தில் தான் எழுதிய வரிகளுக்கு இவ்வளவு மதிப்பா என்று ஒரே ஆச்சரியம் ஏற்பட்டது. அரசாங்கக் கடிதத்தைப் படித்துப் பார்க்க, பார்க்க ஒரு வித போதை உண்டானது. ஒவ்வொருவருக்கும் ஒரு வித போதை. சடகோபனுக்கு இவ்விதமான போதை. அரசு அலுவலகத்திலிருந்து வரும் முரட்டு ப்ரௌன் நிற உறையின் உள்ளே இருக்கும் காகிதத்தில், தனது அறிவு செயல் வடிவத்தில் நிற்பதாய் அவனுக்கு ஒரு பிரமை.

"தேதி… அனுப்புநர் / பெறுநர்… என்று தொடங்கி ந.க. எண். 42 /1996. தேதி 20-12-1996" என்று அதிகாரப்பூர்வமாக கோப்பு எண்ணும், தேதியும் சொல்லும் அந்த அரசாங்கக் கடிதத்தில் உள்ள தகவல், அவனது பொருள், சொத்து, மற்றும் இதர உடைமைகளுக்கும், அவன் சுற்றத்திற்கும் தரும் பாதுகாப்பு என உணர்ந்தான். அந்த அரசாங்கக் கடிதங்கள் அவனுக்கு நல்ல அரண்.

- "ந.க. எண்." என்றால் 'நாள் கடித எண்'. என்று ஒரு ரெவின்யூ கிளார்க் சொன்னார்.

யாராவது தாசில்தார் ஆபீஸ், டி.ஆர்.ஓ. ஆபீஸ், ஆர்.டி.ஓ. ஆபீஸ், கல்வித்துறை, சமூக நலத்துறை, தபால் ஆபீஸ், பேங்க், வேளாண்மைத்துறை, மற்றும் தோட்டக்கலைத்துறையில் இன்னின்ன காரியம் ஆக வேண்டும் என்றால், சடகோபனின் வீட்டுக்கே அவனைத் தேடி நேரில் வர ஆரம்பித்தார்கள். ஆலோசனை கேட்டார்கள். எழுதித் தரச் சொன்னார்கள். காரியம் முடிந்ததும் அவன் கேட்காமலேயே 'எழுத்துக்கூலி' '∴பீஸ்' என்று பணம் கொடுத்தார்கள்.

ஆறு ஆண்டுகளாக ஒவ்வொரு அரசு அலுவலகமாக சைக்கிள் மிதித்து, வெயிலில் அலைந்து, மனம் நொந்து, அனுபவப் பாடத்தில் அவன் பெற்ற முறைசாராக் கல்வியின் வாயிலாக, அவன் பெற்ற கல்வியின் தேர்ச்சி, ஒரு வேளை அந்த "ந.க. எண்" என்றால் என்ன என்று தானும் புரிந்து கொண்டு, மற்றவருக்கும் விளக்கிச் சொல்லுமளவுக்கு தெரிந்து கொண்டது தான்.

--------------------------------

# 6. நரசிம்மம்

**அர்ச்சனா ஜோக்லேக்கர்** என்றெல்லாமா ஒரு பெண்ணுக்குப் பெயர் வைப்பார்கள்?!? ஆனால், உண்மையில் அது தான் அந்தப் பெண்ணின் பெயர். பிற்பாடு, விசாரித்துத் தெரிந்து கொண்டதில், அது ஒரு மராட்டியப் பெயர் என்றும், மராத்திய மொழியே அவரது தாய் மொழி என்றும், அவரது இனத்தை ராவ்ஜி என்றும் அழைப்பார்கள் என்றும் தெரிந்து கொண்டேன்.

மராத்திய சரபோஜி மன்னரின் வம்சாவளிக் கொடியில், ஏதோ ஒரு கிளையில், அந்த அம்மாள் பற்றிக் கொண்டு பின் தொடர்ந்து வந்திருக்கலாம் என்றும் விசாரித்துத் தெரிந்து கொண்டேன்…

… நம் தேசத்தில் உள்ள எல்லாப் பள்ளிகளிலும், ஒரு வருடாந்திரச் சடங்கு நடைபெற்று வருகிறது. ஊரில் உள்ள பெரிய மனுஷர்களையெல்லாம் கூட்டி உட்கார வைத்து, பள்ளிக்கூடத்தில் படிக்கின்ற சிறிய பிள்ளைகளை மினுமினுக்கும் ஆடைகளை உடுத்த வைத்து, சினிமாப் பாடல்களைப் பின்னணியில் இசைக்க வைத்து, அவர்களை வண்ண வண்ண ஒளி விளக்குகளின் பிரகாசத்தில் ஆட வைக்கும் நாலாந்தரமான பொழுதுபோக்கு நிகழ்ச்சி.

இரு ஒரு இம்சை. சினிமாவில் சம்பாதிப்பதற்காக அர்த்தமில்லாத பாடல்களுக்கு, ஆடைகளைக் குறைத்து நடக்கும் வக்கிரமான கலை வெளிப்பாடு. அதையே மீண்டும் நடித்து அதைக் கைதட்டி ஆரவாரித்து, புகைப்படம் எடுக்கும் பெற்றோர் கூட்டம்.

என் பள்ளியில் இதெல்லாம் கிடையாது. ஆன்மீகவாதியின் பள்ளிக்கூடம் ஆயிற்றே! அதனால், இராமாயணத்தைத் தான் நாடகமாக நடித்துக் காட்ட வேண்டும் என்று உத்தரவிட்டார் பள்ளிக்காரியதரிசி. ஒவ்வொரு ஆசிரியரும், வசனகர்த்தாவாக மாற, மாணவிகள், மாணவர்கள் நடிகர்களாக மாற, பள்ளி நூலகம் வசனம் எழுதும் அறையாக மாற, தரைத்தள வராந்தாக்கள் ஒத்திகைக் களங்களானது.

இருபது நாட்கள் ஒத்திகை நடந்தது. இராமாயணத்தின் முக்கிய காட்சிகள் மட்டும் துண்டு, துண்டு காட்சிகளாக, நாட்டியமாக நடித்துக் காட்ட முடிவு செய்யப்பட்டது. கதை வசனங்கள் எழுதப்பட்டு, நடிகர்கள் தேர்வு நடந்தது. ஒத்திகைகள் மும்முரமாக நடந்து கொண்டிருந்தன. பல ஓரங்க நாடகங்கள் தமிழில் தான் எழுதப்பட்டன. ஆங்கிலத்துறையின் சார்பாக பரதனின் பாதுகா பட்டாபிஷேகத்தை

ஆங்கில நாடகமாக எழுதித்தருவது என்னுடைய பொறுப்பில் விடப்பட்டது.

அர்ச்சனா ஜோக்லேக்கருக்கு ராமர் பட்டாபிஷேகம் என்ற காட்சி. இந்தி ஆசிரியை என்றாலும், மிகவும் பொறுப்பாக அதற்காக ஒரு சிறு நாடகத்தை எழுதித் தயார் செய்து, ஒத்திகையை ஆரம்பித்து விட்டார்.

கீழ் தள வராந்தாவில், பாலர் வகுப்புகளை ஒட்டி இருந்த ஒரு கூடத்தில் ஒரு மூலையில் எனது மாணவர்கள் ஆங்கில வசனங்களை உணர்ச்சிகரமாகப் பேசி நடிக்க, அதே கூடத்தின் எதிர் மூலையில் அர்ச்சனாவின் இயக்கத்தில் பட்டாபிஷேகக் காட்சியை தமிழில் நடித்துக் கொண்டிருந்தனர் இன்னொரு குழுவினர்.

ஒத்திகையின் போது, என் கவனம் வேறெங்கும் சிதறாது. என் நடிகர்களை மீண்டும் மீண்டும் நடிக்க வைத்து, காட்சி நேர்த்தி வரும் வரை அவர்களை நன்கு வேலை வாங்கினேன். எனது ஒத்திகை தடங்கலின்றி இடையறாது நடைபெற்றது. நடிகர்கள் உடல் சோர்வு அடைந்து போனார்கள்.

எதிர்முனையில், அர்ச்சனாவின் குழுவில் அடிக்கடி ஒத்திகை தடைப்படும். அந்த மூலையில், அடிக்கடி நீண்ட அமைதி நிலவும். இது எனக்கு சம்பந்தமில்லாதது தான் எனினும், என் கவனத்தை என் குழுவின் மேலேயே செலுத்தி வந்தேன். சில நாட்கள் இதே நிலை தொடரவும், எனக்கு ஏதோ ஒரு மன உறுத்தல் ஏற்படவே, ஒரு ஆவலில், என் மாணவர்களிடம்,

- 'என்ன விஷயம்? அங்கே தமிழ் நாடகத்தில் ஏன் அடிக்கடி தடங்கல் ? ' என்றேன். அதற்கு சத்துருக்கனன் என்னை நோக்கி,
- 'சார், அங்க நாடகம் நடக்காததுக்குக் காரணம் அந்த அர்ச்சனா மேடம் தான் ' என்றான்.
- 'ஏன், அர்ச்சனா மேடத்துக்கு என்னாச்சு? அவங்க கரெக்டா வேலை செய்வாங்களே! என்று கேட்டு விட்டேன்.
- 'சார், உங்களுக்கு எந்த விஷயமும் தெரியாதா சார்?! அர்ச்சனா மேடம் அடிக்கடி அப்படித்தான் எதுவுமே பேசாம, அமைதியா உக்காந்துருவாங்க. இங்க மட்டுமில்ல. கிளாஸ் நடத்தற போதும் அப்படித்தான், பாடம் நடத்திக்கிட்டே இருக்கறபோது திடீர்னு மனசு மாறி, 'இன்னிக்கு இது போதும், அப்படின்னு முடிச்சிட்டு, சேர்ல உட்கார்ந்து அழ ஆரம்பிச்சுவாங்க' என்றான் ராமன்.

- 'அப்படியா? என்ன அப்படி அவங்களுக்கு சோகம்? என்று கேட்கத் தோன்றிற்று எனக்கு. வார்த்தைகள் வெளியே வரவில்லை. அதற்கு மேல் நான் ஒன்றும் கேட்கவில்லை. என் ஒத்திகையைத் தொடர்ந்தேன். நான் சும்மா இருந்தாலும், என் ஓட்டை வாய் சும்மா இருக்காது. ஒரு நாள் பிற்பகலில், வேறு யாரும் ஆசிரியர் இல்லாத நேரத்தில் சரித்திர ஆசிரியர் தமிழ்ச்செல்வனிடம் ஆவலாதி தாங்காமல் அர்ச்சனாவின் விஷயம் பற்றிக் கேட்டுக் விட்டேன்.

- 'என்ன சார் ! உங்களுக்குத் தெரியும்ல நான் நெனச்சுக்கிட்டு இருந்தேன். உங்களுக்கு ஷேக்ஸ்பியரைத் தவிர என்ன தெரியும், சொல்லுங்க ? '

- ' ஷேக்ஸ்பியர் என் ஸ்வாமி !'

- 'இதான் இந்த இலக்கியவாதிகள் கிட்ட சகவாசம் வெச்சுக்கிடக்கூடாதுங்கறது. இலக்கியவாதிகள்ல கொஞ்சம் கிராக் பிடிச்ச ஆளுங்களும் உண்டு போல. அண்ணே, அர்ச்சனா மேடத்தோட புருசன் ஒரு கவிஞர். ஒரு எழுத்தாளர். அவர் பேரு நிலா நேசன் !.

- 'எனக்கு இது தெரியாதே தமிழ்ச்செல்வன் - !'

- 'நிலா நேசன், ஒரு தடவை இலக்கியக் கூட்டத்தில சிறப்புப் பேச்சாளராப் பேசறதுக்கு நாகர்கோவில் போயிருந்திருக்காரு. அங்க, அந்த இலக்கியக் கூட்டத்துல 'பின்-நவீனத்துவக்கவிதை இலக்கியங்கற' பேர்ல எதையோ பேசி, பிரிச்சு மேய்ஞ்சிருக்காரு. அவரோட பேச்சைக் கேட்டுக்கிட்டு இருந்த லீஸா கேத்தரின்ங்கற பொண்ணு, ரொம்ப உணர்ச்சிவசப்பட்டு, அவர் கிட்ட வந்து அவரைப் பாராட்டி ரொம்ப பேசியிருக்கு. இவரும் பேசியிருக்காரு. அந்தம்மா சிரிச்சிருக்கு. இவரும் சிரிச்சிருக்காரு. அந்தம்மா இவர் கிட்ட விலாசம் கேட்டிருக்கு. இவர் தன்னோட போன் நம்பரை எழுதிக் கொடுத்திருக்காரு. '

- 'அதுக்கப்புறம்? '

- 'அதுக்கப்புறம் என்ன? நாகர்கோவில்ல அடிக்கடி இலக்கியக்கூட்டம் நடக்க ஆரம்பிச்சுச்சு. நிறைய பேர் கலந்துக்கிடல. ரெண்டே பேரு தான். நிலா நேசனும், லீஸா கேத்தரினும். நிலா நேசன் திருநெல்வேலிக்காரரு. சைவப்பிள்ளைவாள். அந்தம்மா லீஸா கேத்தரின் நாகர்கோவில் ப்ராட்டஸ்டன்ட் நாடார். '

- 'நல்ல பொருத்தம் தான். '

- 'லீஸா, நிலா நேசனைக் கூட்டிக்கிட்டுப் போயி, தன் வீட்டுல இருக்கற அம்மா, அப்பாகிட்ட அவரைக் காட்டி, 'கல்யாணம் பண்ணி வைக்கறதுன்னா எனக்கு இவரைக் கல்யாணம் பண்ணி வைங்க. இல்ல, எனக்கு கல்யாணமே வேண்டாங்கறா. வீட்டுக்காரங்க சம்மதிச்சு, நிலா நேசன் - லீஸா கேத்தரின் கல்யாணம் ஆசாரிப்பள்ளம் தூய லூத்தரன் திருச்சபைல நடந்தது. கல்யாணம் முடிஞ்ச நாலாம் மாசம் லீஸா முழுகாம நிக்கறா. நிலா நேசனுக்கு மொதப் பொண்டாட்டி இருக்கற விஷயம் அவளுக்கு அப்பத்தான் தெரிஞ்சது. என்ன செய்ய? 'பாவிகளை ரட்சிக்க ஏசு கிறிஸ்து இவ்வுலகத்திற்கு வந்தார் ' அப்படின்னு புதிய ஏற்பாட்டுல ஒரு வசனம் வருது. அந்தப்படி ரெண்டாவது தொழுவத்துல நுழைஞ்ச அந்த மாட்டை மன்னிச்சு, இருந்துட்டுப் போகட்டும்னு விட்டுட்டா. ஆனா, அவ அப்பன் ரொம்ப கோவக்காரன்.

'எலேய், இலக்கியம், இஞ்சி பூண்டுன்னு எதையெதையோ பேசி என் பொண்ணை ஏமாத்திக் கல்யாணம் முடிச்சிட்டியான்னு' சொல்லி அவனுக்கு ஏகக் காட்டம்.

அவன் வீட்டுக் கொல்லைப்புறத்துல தொழுவத்துல ஏகப்பட்ட எருமை மாடுகளைக் கட்டி பால் யாவாரம் பாத்துக்கிட்டு இருந்தான். அவன் இந்த நிலா நேசனைக் கூப்பிட்டு, 'இனிமே மாட்டுத் தொழுவத்துல உனக்கு சாணி அள்ளுற வேலைதான்னு ' சொல்லி,

அரை டவுசர், பனியன் இது ரெண்டையும் தன் மருமகனுக்கு கொடுத்து, சாணி அள்ள வெச்சான்.

- 'நிலா நேசன், சாணி நேசன் ஆயிட்டாரா? '

- 'ஏசு சாமியே மாட்டுத் தொழுவத்துல தான் பிறந்தாரு. அதனால, அதே மாட்டுத் தொழுவத்துல நான் வேலை செஞ்சா தப்பில்ல' அப்படின்னு நிலா நேசன் மனசைத் தேத்திக்கிட்டு, சாணி அள்ளிக்கிட்டு இருக்கான். மாமனார் வீட்டுச் சோறு. சாணி அள்ளுற வேலை. ரொம்பப் பொருத்தம் என்றார் தமிழ்ச்செல்வன்.

- 'அப்ப இந்த அர்ச்சனா மேடம்… ' பைய இழுத்தேன் நான்.

- 'அவ்வளவு தான். போனவன் போனவன் தான். நாகர்கோவில்ல தன் மாப்பிள்ளை, ரெண்டாம் கல்யாணம் முடிச்சதும், சாணி அள்ளுற உத்தியோகம் செய்யறதும் தெரிய வந்தது. அன்னில இருந்து இந்த அர்ச்சனா நொறுங்கிப் போயிட்டாங்க…' என்று தொடர்ந்து சொல்லிக் கொண்டே போனார் தமிழ்ச்செல்வன்…

…பள்ளிக்கூடத்தின், காலை நேரப் பிரார்த்தனையில், ஆசிரியர்களின் *நன்னெறி போதனை* எனும் சொற்பொழிவு, தினமும் நடைபெறுவதுண்டு. பல ஆசிரியர்களும் அந்தப் பொறுப்பில் இருந்து எப்படியாவது தப்பித்துக் கொள்ள முயற்சி செய்வார்கள். என்னிடம் வந்து ஏதாவது சாக்குப் போக்கு சொல்லி அந்த உரையை இரண்டு நாட்களுக்கு ஒத்திப் போட முடியாதா என்று கெஞ்சுவார்கள்.

பிரார்த்தனையில் உரையாற்ற வேண்டிய ஆசிரியர்களின் பட்டியல் அச்சடிக்கப்பட்டு என்னிடம் வந்து விடும். அதில் பணி மூப்பு என்ற அடிப்படையில் வரிசை கீழ் நோக்கி நீளும். இந்தப் பட்டியலை ஒரு சுவரில் ஒட்ட வைத்துக் கொண்டு, அதைப் பார்த்து, அடுத்த நாளுக்கு அறவுரைப் பேச்சு நடத்துவது யார் என்பதைக் குறித்துக் கொண்டு, சம்பந்தப்பட்ட ஆசிரியரை ஒரு நாளுக்கு முன்பாகவே போய்ப்பார்த்து, அவருக்கு நினைவூட்டி, அவரது சுழற்சி முறை அடுத்த நாள் வருகிறது என்றும், அதற்கேற்றாற் போல அவர் அடுத்த நாள் பிரார்த்தனை நிகழ்ச்சிக்குத் தயாராக வர வேண்டும் என்றும் நினைவூட்ட வேண்டியது மட்டும் என் பொறுப்பு.

பிரச்னை என்னவென்றால், இப்படி ஒரு ஆசிரியரிடம் போய், மறு நாள் அவர் மாணவர்கள் முன்னிலையில் பேச வேண்டும் என்று நான் சொன்னதும், மறு நிமிடமே அவர்,

- 'ஓ அது வேற இருக்கா? மறந்தே போச்சே! எதுவுமே நான் தயார் பண்ணலையே. சார், நீங்க ஒண்ணு பண்ணுங்க. நான் நாளைக்கு என்ன பேசணுங்கறதை நீங்களே கொஞ்சம் எழுதிக் கொடுத்திருங்க. நான் அதை மனப்பாடமா படிச்சுட்டு வந்து பேசிர்றேன். ப்ளீஸ், இந்த ஒரு உதவி மட்டும் எனக்கு பண்ணுங்க சார் ' என்பார்கள்.

ஏண்டா, இவரிடம் போய், இந்த விஷயத்தை நினைவுபடுத்தினோம் என்று ஆகி விடும். எரிச்சல் வரும். நானே உட்கார்ந்து அவரது பேச்சைத் தயார் செய்ய வேண்டி இருக்கும். ஒரு நாலு வாக்கியங்கள் கூட தொடர்ச்சியாகப் பேச வராதவர் எதற்காக இந்த ஆசிரியர் வேலைக்கு வருகிறார் என்று கேள்வி கேட்கத் தோன்றும்.

ஆனால், என்னுடன் வேலை பார்த்த எல்லா ஆசிரியர்களுமே, வேறு ஏதாவது அரசுப் பள்ளியில் வேலைக்குச் சேருவதற்கு ஆயத்தமாகிக் கொண்டிருந்தவர்கள் தான். எப்படியாவது அரசாங்கம் ஒரு உத்தரவு போடும். ஆசிரியர் தகுதித்தேர்வுக்காக நிர்ணயித்த மதிப்பெண்களில் ஏதாவது சலுகை காட்டும். போனஸ் மார்க்குகள் ஏதாவது கொடுக்கும். அந்த சந்தடி சாக்கில், ஒரு அரசுப்பள்ளியில் நுழைந்து விட வேண்டியது தான். அரசுப்பள்ளியில் நுழைந்து விட்டால், பிறகு கவலையே இல்லை என்று ஒவ்வொருவருமே ஆகாசத்தில் கோட்டை கட்டிக் கொண்டிருப்பவர்கள் தான்.

பள்ளியை நடத்துபவர் ஒரு தொழிலதிபர். ஆன்மீகவாதி. எனவே, பள்ளியின் பிரார்த்தனை நிகழ்வுகளில் பெரும்பாலும் உரைகள் ஆன்மீக அறநெறிகளைச் சார்ந்ததாகவே இருக்கும். மிக நீண்ட உரைகள் பேசுபவர்கள், கேட்கும் மாணவர்கள் மற்றும் சக ஆசிரியர்களை எரிச்சலூட்டுபவர்கள். அந்த எரிச்சலுக்குக் காரணம், உரையின் உள் விஷயம் அல்ல. சூரிய வெப்பம் தான். காலை எட்டு நாப்பதுக்கு பிரார்த்தனை துவங்கும்போது, மாணவர்கள் மேற்கு நோக்கி பார்த்தபடி, கை கூப்பியபடி நிற்க, ஆசிரியர்கள் மற்றும் பிரார்த்தனைக்குழுவினர், கிழக்கு நோக்கிப் பார்த்தபடி நிகழ்ச்சியை நடத்த வேண்டும்.

சில நாட்களில், பிரார்த்தனை மிகவும் நீண்டு விடும். மாணவர்களை வெயிலில் நிறுத்தி தண்டிப்பது என்பது மனதுக்கு சங்கடமாகத்தான் இருக்கும். வேறு வழியில்லை. பள்ளியின் கட்டிட அமைப்பே அப்படித்தான். பள்ளியின் முகப்பிற்கு முன்பு, பிரார்த்தனைக்குழு நின்று கொண்டு, மந்திரங்களை உச்சரித்தபடி, அன்றைய நாளைத் துவங்கும் போது தான், சூரிய பகவான் எனப்பட்டவர், மிகுந்த கோபாவேசத்துடன் கிழக்கில் இருந்து சுட்டெரிக்க ஆரம்பிப்பார். வரிசையாக நிற்கும் மாணவர்களின் முகங்களில், வேர்வை ஆறாகப் பெருக்கெடுத்து ஓடும். ஒரு சிலர் இதில் மயங்கி விழுவதும் உண்டு. ஆனால், பிரார்த்தனையின் நீள, அளவுகளை யாரும் மாற்றியமைக்க இயலாது. அப்படி மாற்றினால், உடனே ரசாயனப் பாடம் எடுக்கும் ஆசிரியர் ஈஸ்வரன், அந்த விஷயத்தை பள்ளியின் காரியதரிசிக்குத் தெரியப்படுத்துவார். புகார் செய்து, போட்டுக் கொடுப்பதே அவர் தொழில். காரியதரிசி, உடனே முதல்வருக்கு தொலைபேசியில் கடுமையான கட்டளைகளை இடுவார். இந்த ஒரே காரணத்திற்காக, காலைப் பிரார்த்தனையை மாற்றி அமைக்க ஒருவரும் விரும்புவதில்லை.

அன்றைய தினம், காலையில் தமிழ்த்தாய் வாழ்த்து, குறள் வாசிப்பு, செய்திகள் வாசித்தல், விஞ்ஞானத் தகவல்கள் போன்ற வாடிக்கையான பகுதிகள் முடிந்தவுடன், 'ஆசிரியர் உரை' என்று மைக்கில் அறிவித்தான் மாணவர் தலைவன்.

நான் உடனே திரும்பி, பெண்களின் வரிசையினைப் பார்த்தேன். வரிசையாக நின்று கொண்டிருந்தவர்களில் அர்ச்சனா ஜோக்லேக்கரின் மீது என் பார்வை நிலைத்தது. அவர் உடனே என்னை ஊடுருவது போல ஒரு பார்வை பார்த்தார். பார்வை ஒன்றே போதுமே. அந்தப் பார்வையே அவர் தன் பேச்சிற்காக எதையும் தயார் செய்து கொண்டு வரவில்லை என்பதைச் சொன்னது. பிரார்த்தனையை ஒழுங்கு செய்வது என் கடமை. தலைமை வகித்து அறிவிப்பது மாணவர் தலைவனின் கடமை. இப்போது பொறுப்பு ஆசிரியரின் மீது தான்.

அர்ச்சனாவின் முகத்தினை காலை நேரச் சூரியன் சூடேற்றிக் கொண்டிருந்தான். ஏற்கெனவே, பளீரென்று இருக்கும் அவர் முகம், காலை வெம்மையில் சிவந்து போய், ரத்தச் சிவப்பிற்கு வந்து விட்டது.

மறுகணம், தன்னுடைய இருப்பிடம் விட்டு அகன்று, நான் நின்றிருந்த இடத்திற்கு வந்தார் அர்ச்சனா ஜோக்லேக்கர்.

ஐந்தே முக்கால் அடி உயரமும், நல்ல கம்பீரத் தோற்றமும், சிவந்த முகமும், புஷ்டியான கன்னங்களும், கூரிய கருவிழிகளும், இன்னமும் நரை விழாத கூந்தலும், நல்ல லச்சணமான வடிவம்

கொண்ட அர்ச்சனாவின் உருவைக் கண்களால் உள் வாங்கி இதயத்துக்குள் இருத்தி வைத்துக் கொண்டேன்.

மைக் முன்பாக நின்று, அதை உயர்த்தி, தன்னுடைய உயரத்திற்கு ஏற்ப சரி செய்து கொண்டார் அர்ச்சனா, பிறகு கணீரென்ற குரலில்,

'ஹரி ஓம் ! என் அருமை மாணவர்களே ! சக ஆசிரியர்களே ! இதற்கு முன்னர், ஒரு சந்தர்ப்பத்தில் பெருமாள் எடுத்த வராக அவதாரத்தைப் பற்றி உங்களுக்குச் சொன்னேன், மச்ய, கூர்ம அவதாரங்களுக்குப் பிற்பாடு பெருமாள் எடுத்தது வராஹ அவதாரம்.

வராஹ அவதாரத்தில் பெருமாள், பன்றியாக அவதாரம் எடுத்தார். ஆனால், அதற்கு அடுத்த அவதாரத்தில் நரசிம்மனாக அவதாரம் எடுத்தார். நர என்றால் மனிதன். சிம்மம் என்றால் சிங்கம். மனிதனும், சிங்கமும் கலந்து ஒரு உருவத்திலே பெருமாள் அவதாரம் பண்ணினார். அது எதற்காக?

இரண்யகசிபு என்ற அசுரன் மிகக் கடுமையாக தவம் செய்தான். பெருமாள் அவன் முன்னால் தோன்றி, 'என்ன வரம் வேண்டும்? ' என்று கேட்டார். அதற்கு இரண்யகசிபு, 'எனக்கு மரணம் அவ்வளவு லேசாக வரக்கூடாது. என்னுடைய மரணம், மனிதன் அல்லது மிருகத்தினால் உண்டாகக்கூடாது. பகலிலோ அல்லது இரவிலோ உண்டாகக்கூடாது. வானத்திலோ அல்லது பூமியிலோ உண்டாகக்கூடாது. ஒரு வீட்டுக்கு உள்ளேயோ அல்லது வீட்டுக்கு வெளியேயோ உண்டாகக்கூடாது. எந்த விதமான ஆயுதங்களாலேயும் உண்டாகக் கூடாது', அப்படின்னு வரம் கேட்டான். இந்தப் பெருமாள் என்ன பண்ணினார்? சிரிச்சுண்டே 'நீ கேட்டபடியே வரம் தந்தேன் ' அப்படீன்னு சொல்லிட்டு மறைஞ்சு போயிட்டார்.

வரத்தை வாங்கிண்ட இரண்யகசிபு, உடனே தலைக்கனத்தாலே துள்ள ஆரம்பித்தான். எல்லா ரிஷிகளையும், முனிவர்களையும் இம்சை பண்ணினான். தன்னுடைய பெயரைத்தான் நாட்டில் உள்ள ஜனங்கள் எல்லாரும் மந்திரமாகச் சொல்ல வேண்டும். தன்னைத்தான் பரம்பொருள் என்று சேவிக்க வேண்டும் என்று அரசாங்க உத்தரவு போட்டான்.

மக்களையெல்லாம் பெரும் இம்சை பண்ணினான். பெருமாள் என்ன பண்ணினார் ? நேரா அந்த இரண்யகசிபுவின் மகன் பிரகலாதனின் மனசுக்குள்ளே போய் உட்கார்ந்துண்டார்.

பிரகலாதன் என்ன பண்ணினான்? குருகுலத்துல ஆசாரியார் 'இரண்யாய நமஹா' அப்படின்னு சொன்னா இவன் 'நாராயணாய நமஹா' அப்படின்னு பாடம் சொன்னான். அவனை ஒண்ணுமே பண்ண

முடியல. பெருமாள் மேல அவனுக்கு அவ்வளவு பக்தி. அந்தப் பிரகலாதனுக்கு இரண்யன் செஞ்ச கொடுமைகள் கொஞ்ச நஞ்சமா…? ஒரு தகப்பன் தன் பிள்ளைகளுக்குச் செய்யக்கூடாத காரியம் எல்லாத்தையும் அந்த இரணியன் செஞ்சான். எல்லாக் கஷ்டங்களையும் தாண்டி, உயிர் பிழைச்சு, பிரகலாதன் பெருமாளையே பக்தி கொண்டிருந்தான்.

ஒருநாள், இரண்யன், தன் மகன் பிரகலாதனைக் கூப்பிட்டு, 'நீ சொல்ற நாராயணன் எங்க இருக்கான்னு காட்டு' ன்னு சொன்னான். அதற்கு பிரகலாதன், 'நான் சேவிக்கும் நாராயணன் சாணிலும் உளன், சத கூறிட்ட அணுவிலும் உளன், இந்தத் தூணிலும் உளன், அப்படின்னான்.

எங்கே பார்க்கலாம்னு தன்னுடைய கதாயுதத்தாலே ஓங்கி அந்தத் தூணை ஒரு இடி இடிச்சான். உடனே, தூண் ரெண்டாகப் பிளந்தது. வானம் அதிர்ந்தது. இடி இடித்தது. பூமி நடுங்கியது. பூமியின் எல்லா ஜீவராசிகளும் பயத்தில் நடுநடுங்கின. அங்கே தூண் மறைவில இருந்த பெருமாள் நரசிம்மனாக வெளிப்பட்டார். என்ன கோபம் ?! என்ன உக்கிரம்! என்ன ஆவேசம் ! என்ன அக்கினி ! கடைசிக்காலத்திலே உலகம் நெருப்பாய் பற்றி எரியற மாதிரி என்ன வெப்பம் அந்த இடத்துல!?!

பகலும், இரவும் இல்லாத சாயங்கால நேரத்துல, வீட்டுக்கு உள்ளேயும் வெளியேயும் இல்லாத வீட்டுத்தலைவாசலில் கதவு நிலையில், பூமியிலும் ஆகாசத்திலும் இல்லாது, தன் மடியில் அவனைத்தூக்கிப் போட்டுண்டு, மனுஷனும், மிருகமும் இல்லாமல் ரெண்டும் கலந்த நரசிம்மன், எந்த ஆயுதமும் இல்லாமல், தனது சிங்க நகத்தாலே அவனது வயிறைக் கிழிச்சு, குடலை வெளியே உருவி, அதை மாலையாய் போட்டுண்டார். அப்போ அந்தப் பெருமாளோட கோபம், அந்த உக்கிரம், ரௌத்திரம், மிருக வெறி, துஷ்ட சம்ஹாரம் பண்ற அந்த தீவிரம்… அந்த தர்மத்தின் நெருப்பு, பெருமாளோட கண்கள்ல தெரிஞ்சது…'

அர்ச்சனா, இந்த இடத்தில் பேச்சை மேற்கொண்டு தொடர முடியாமல் தடுமாறினார். அவரது வார்த்தைகள் நின்றன. அவரது பேச்சு திடுக்கென நின்றது. அர்ச்சனாவின் உதடுகளும் தொண்டையும் உலர்ந்து, அவரால் மேற்கொண்டு பேசவே இயலவில்லை.

கிழக்குச் சூரியனின் காலைக்கதிர்கள் அவரது முகத்தில் மேலும் உஷ்ணம் சேர்த்துக் கொண்டிருந்தது. அவரது ரோஜா போன்ற அழகிய முகம், சிவந்து சிவந்து ரத்தச் சிவப்பாய் மாறி விட்டது. அவரால் வாயைத் திறக்க முடிந்தது. ஆனால், வார்த்தைகள் ஏதும் வரவில்லை.

நான் திரும்பி, என் அருகில் மைக் முன்னே நின்று கொண்டிருந்த அர்ச்சனாவின் முகத்தைப் பார்த்தேன். சிங்கத்தின் கண்களில் நெருப்புப் பொறி பறந்தது. ஒரு நர மாமிச வேட்டையாடும் கோபாவேசம், சிங்கத்தின் முகத்தில் பிரத்தியட்சமாய்த் தெரிந்தது.

அர்ச்சனாவின் புருவங்கள் உயர நோக்கித் தெறித்தன. வாயும் சிவப்பாய் இருந்தது. அவரது பிடரி மயிர் சிலிர்த்தது. மார்பு சுருங்கியும், பெருகியும் ஆவேசப் பெருமூச்சை வெளியே அனுப்பிக் கொண்டிருந்தது.

அவரது கண்கள் உக்கிரமடைந்தன. அவருக்குள் இனம் புரியாத ரௌத்திரம், பௌர்ணமி கால சமுத்திரப் பரப்பு போலே கொப்பளித்தது. தலை மயிர் சிலிர்த்தது. ரத்த ஓட்டம் மும்மடங்கு அதிகரித்து, கழுத்து நரம்புகள் புடைத்து நின்றன. உதடுகள் துடித்தன. புருவங்கள் தெறித்தன. கண்கள் நெருப்பை உமிழ்ந்தன.

இயற்கையாகவே சிவந்த அர்ச்சனாவின் சிவந்த முகம், ரத்த ஓட்டத்தால் மேலும் நெருப்பாய்ச் சிவந்தது. மார்பு பெருமூச்சு விம்மலால் ஏறி, ஏறி இறங்கிய. உடல் துடிக்க துடிக்க, கோபாவேசத்தில் உயர்த்திய கைகளோடு, உடல் ஆவேச அக்கினியில் கொதிக்க, மிருக வெறி அவரை ஆட்கொண்டது. நீண்ட சிவந்த விரல்கள் கூரிய ஆயுதங்களாக மாற, பொங்கி வந்த கோபாவேச அக்கினிப் பொழிவில், அவரது திவ்விய முகம், மிருக ரூபத்திற்கு மாற, வாய் பிளந்து, தொண்டை பிளந்து, அவரது கூரிய விரல் முனைகளில் நரன் ஒருவனின் உடல் சிக்குண்டு, கூரிய நகங்களால் பிளக்கப்பட்ட அவனது வயிறு கிழிந்து, குருதி கொப்பளித்தது. குடல் உருவி வெளியே எடுக்கப்பட்டது.

எங்கும் குருதி தெளித்து, ரத்த மயம், மாமிச வாடை என்றாக, பல்லிடுக்குகளில் மாமிசத்துண்டுகளோடு ரத்தத்துளிகள் சிந்திக் கொண்டிருக்க, உடலெங்கும் வியர்வை கொப்பளித்துக் கொண்டிருக்க, ஒரு பூரண அசுர சம்ஹாரம் நடந்து , அதை முழுமை செய்து விட்ட ஆவேசத்தில், நின்று கொண்டிருந்தார் அர்ச்சனா .

என் அருகே நின்றிருந்த முதல்வர் நம்பிராஜன் செய்வதறியாது பார்த்துக்கொண்டே நின்றார். அவருக்கு ஒன்றுமே விளங்கவில்லை…

-----------------------------

# 7. தொன்னையும் நெய்யும்

இருபத்தி ஒன்று வருட கால பேராசிரியர் பணியிலிருந்து, மாலை மரியாதை, துண்டு, சால்வை, சுவர்க்கடிகாரம், பாராட்டுக்கவிதை, பிரிவு உபச்சார விழா கண்ணீர், தழுவல்கள், உணர்ச்சிப் பொங்கல்கள், இனிப்பு, காரம், காபி இத்தியாதிகளோடு ஓய்வு பெற்ற முனைவர் அரங்க. இராமகிருட்டிணன், தான் வேலை செய்த கலைக்கல்லூரியை விட்டு வெளியே வந்ததும், அடுத்ததாக என்ன செய்யலாம் என்று தீவிர சிந்தனையில் ஆழ்ந்தார்.

கல்லூரி முதல்வர், சக பேராசிரியர்கள் அலுவலக ஊழியர்கள், மற்றும் அன்பிற்கினிய மாணவர்கள் யாவருமே அவரை அன்பாக சொந்த ஊருக்குச் செல்லுமாறு கையசைத்து வழியனுப்பி வைத்தனர்.

- 'சொந்த ஊருக்குப் போக ஒரு வாடகைக்கார் ஏற்பாடு செய்யவா, அய்யா?' என்று மெய்யான அன்போடு கேட்டார் மாணவர் சங்க தலைவர் பு.சி. செந்தூர்ப்பாண்டியன்.
- 'இல்லங்க அய்யா. எனக்கு எதுவுமே வேணாம். எல்லாவற்றையும் ஏற்கெனவே என் சொந்த ஊருக்குக் கொண்டு போய் விட்டேன். இனி என் ரூமில் அதிகமான சாமான்கள் இல்லை அய்யா. தங்கள் அன்புக்கு நன்றி'.

மாணவர் சங்கத்தலைவர் பு. சி. செந்தூர்ப்பாண்டியன் வலுக்கட்டாயமாக தனது உற்ற மாணவர் சங்கத் தோழர்களோடு அரங்க. இராமகிருட்டிணன் தங்கியிருந்த அறைக்கே நேரடியாக வந்து, அவரை ஒரு நாற்காலியில் அமர்த்தி விட்டு, அவர்களே வேஷ்டியை மடித்துக் கட்டிக்கொண்டு, அறைச்சாமான்களை மூட்டை கட்டினார். பிறகு, டி.வி.எஸ். லாரி ஆபீசுக்குப் போய், எல்லாச் சாமான்களையும், தமிழ் அய்யாவின் சொந்த ஊருக்கு அனுப்பி வைத்து விட்டு, லாரி வாடகைச் செலவுகளை தாங்களே செலுத்தினர்.

மறுநாள் காலை மாணவர் சங்கத் தலைவர் பு.சி. செந்தூர்ப்பாண்டியன் மற்றும் உப தலைவர் சேர்மக்கனி, செயலாளர் சைவவேள் யாவரும், தமிழ் அய்யாவுடன், கூடவே வந்து, இராஜபாளையம் செல்லும் ரயிலுக்கு டிக்கெட் வாங்கி, மதுரை ஜங்ஷனில் அவரை வண்டி ஏற்றி அமர வைத்து விட்டு, தாங்களும் ஊர் வரை வரலாமா எனக் கேட்டனர்.

இராமகிருட்டிணன் அன்போடு அதை மறுத்துவிட்டார். அவர்கள் செய்த உதவிக்கு கை குவித்து நன்றி கூறினார். மாணவச் செல்வங்களை ஆரத்தழுவிக் கொண்டார். மீண்டும் வணக்கம் சொல்லி விட்டு, ரயில் புறப்படும்போது, தன் கையொப்பமிட்ட கம்பராமாயணப் புத்தகங்களை அந்தப் பிள்ளைகளுக்கு அன்பளிப்பாகத் தந்தார். கண்கள் தாரை தாரையாக கண்ணீர் சிந்த, தனது சொந்த ஊர் இராஜபாளையத்துக்குப் பயணமானார்.

இராஜபாளையம் நகர் அருகே உள்ள கீழராஜகுலராமன் என்ற சிறு குக்கிராமம் தான் அவரது சொந்த ஊர். அதே ஊரில் தான் அவர் பிறந்து, வளர்ந்து, தெரு விளக்கில் படித்து, கிராமப் பள்ளிக்கூடத்தின் தமிழாசிரியர்களின் செல்லப்பிள்ளையாகி, அவர்கள் செய்த நிதி உதவியில் எம்.ஏ., எம்.ஃ.பில். பட்டங்களைப் பெற்று, தமிழ் அய்யா திருமலை நம்பியின் சிபாரிசுக் கடிதத்தினை மதுரையில் உள்ள ஒரு கல்லூரி முதல்வரிடம் கொண்டு போய்க் காட்ட, அவருக்கு உடனே தமிழ் விரிவுரையாளர் வேலை கிடைத்தது.

இப்போது அதே ஊர். அதே தெருக்கள். அதே பழைய ஓட்டு வீடு. ஓட்டு வீடு.

சொந்த வீட்டுக்கு வந்த அன்று மாலையே ஊர்க்காரர்கள் பல பேர் அவரைப் பார்க்க வந்து விட்டார்கள். குசலம் விசாரித்தார்கள். தங்கள் பிள்ளைகளை மேற்படிப்பு படிக்க வைக்க அவரது ஆலோசனையைக் கேட்டார்கள். கிராம நிர்வாகக்குழுவில் பதவி ஏதாவது ஏற்றுக் கொள்ள விருப்பமா என்று பாசத்துடன் கேட்டார்கள்.

அரங்க. இராமகிருட்டிணன் அதையெல்லாம் அன்போடு மறுத்துவிட்டார். தனக்கு பதவிகள் எதுவும் வேணாம் எனவும், தன் ஓய்வு காலத்தில் புத்தகங்கள் வாசிக்க விரும்புவதாகவும், தானே பல நல்ல புத்தகங்களை எழுதி வெளியிடத் திட்டமிட்டிருப்பதாகவும், தன் எதிர்காலத்திட்டங்களை முன் வைத்தார்…

ஓய்வு பெற்று, அதனைத் தொடர்ந்த காலத்தில், ஓரிரு மாதங்கள் உள்ளூரில் இருந்த அரசு கிளை நூலகத்திலேயே கழிந்தது. அந்த நூல் நிலையத்திற்குத் தன்னிடம் இருந்த பல நல்ல புத்தகங்களை அன்பளிப்பாக அளித்ததும், அவருக்கும் அந்தக் கிளை நூலகருக்கும் இடையே நல்ல பற்றுதல் ஏற்பட்டது.

நூல் நிலையத்திற்குத் தேவையான மரச்சாமான்களை வாங்கித் தருவதற்கு இவரே பல கடிதங்களை எழுதி, உரிய அதிகாரிகளுக்கு அவைகளை அனுப்பி, நூலகத்தை வளர்ச்சியடைய வைத்தார்.

'ஓய்வா, உழைப்பா ?' என்ற தலைப்பில் பதவியிலிருந்து ஓய்வு பெற்ற அலுவலர்கள், தாங்கள் சார்ந்துள்ள சமுதாயத்திற்கு எந்த விதத்திலெல்லாம் உதவலாம், பணி நிறைவு அல்லது ஓய்வு என்பது மற்ற பணிகளைச் செய்ய ஒரு வழியாக, இன்னொரு துவக்கமாக அமைய வேண்டும் என்றெல்லாம் நாளிதழ்களில் கட்டுரை எழுதினார்.

ஒருநாள், அவர் வீட்டிற்கு ஒரு பதிவுத்தபால் வந்தது. அது, சாந்தி ராமன் கலைக்கல்லூரியின் நிர்வாக உறுப்பினர்களிடமிருந்து வந்திருந்தது. அந்த நிர்வாகத்தின் உறுப்பினர்களை ஒரு ஞாயிறு மாலை 5.00 மணியளவில் இராஜபாளையத்திற்கு வந்து சந்திக்கும்படி அந்தக் கடிதத்தில் குறிப்பிடப்பட்டிருந்தது.

அதன் படியே, இராஜபாளையத்தில் உள்ள கலைக்கல்லூரியின் நிர்வாகக்குழு அலுவலகத்திற்கு அவர்கள் அழைத்திருந்தபடியே போனார், அரங்க. இராமகிருட்டிணன். அவரை, வாசல் வரை வந்து வரவேற்றார் நிர்வாகக்குழு உறுப்பினர் ஒருவர். பருகுவதற்கு குளிர்ந்த பழச்சாறு அவருக்குத் தரப்பட்டது.

- 'அய்யா, உங்களைச் சந்திச்சதுல எங்களுக்கு ரொம்ப மகிழ்ச்சி அய்யா'.
- 'எனக்கும், அதில் மகிழ்ச்சி தான்'
- 'இங்க வர வெச்சு உங்களுக்குச் சிரமம் கொடுத்துட்டோம். அய்யா, எங்களை மன்னிக்கணும். '
- 'ஒரு சிரமமும் இல்லங்கய்யா! வீட்டுல சும்மா தான் உக்காந்து, ஏதோ படிச்சிக்கிட்டிருந்தேன் '.
- 'அது இருக்கட்டுங்கய்யா! என்னைய வரவழைச்சது எதுக்காகன்னு நீங்க இன்னும் சொல்லலியே!'
- அய்யா, அதை இப்ப சொல்லிர்றோம். அது வந்து, நாங்க எல்லோருமே வியாபாரிங்க தான். நான் துவரம்பருப்பு மொத்த யாவாரம் பாக்குறேன். இவரு உண்ணாமலை அண்ணன். இவரு தளவாய்புரத்துக்காரரு. இவருக்கு எண்ணை ஆட்டி விக்குற வியாபாரம். அதோட கடலைப் புண்ணாக்கு. எள்ளுப்

புண்ணாக்கு கேரளாவுக்கு மொத்தமா அனுப்பற யாவாரம். அவரு தட்சிணாமூர்த்தி அண்ணாச்சி. ரொம்ப பக்தியானவரு. பலசரக்கு மொத்த கொள்முதல் பண்ணி, சில்லரை வியாபாரிகளுக்கு கொடுக்கறாரு. ஊரு சிவகிரிப் பக்கம். அவங்க விசாலாட்சி. என் சம்சாரம். அய்யா, நாங்க எல்லாரும் சேந்து, சத்திரப்பட்டி பக்கத்துல இருக்கற மொட்டமலைல ஒரு காலி இடத்தை வாங்கினோம். அதை வாங்கிப் போட்டு, பல வருஷமாச்சு. இப்ப சமீபத்துல அதுல ஒரு காலேஜ் ஆரம்பிக்கலாமேன்னு தோணிச்சு. அதனால், அங்க ஒரு கட்டிடம் கட்டி காலேஜும் ஆரம்பிச்சாச்சு, அதுக்கு யுனிவர்சிட்டில உள்ள நம்ம சமூகத்து ஆளுங்களைப் புடிச்சு லைசன்ஸும் …….’

தட்சிணாமூர்த்தி உடனே குறுக்கிட்டு, பேசிக் கொண்டிருந்தவரை திருத்தினார்.

- 'அண்ணே! அது லைசன்ஸ் இல்லை. அதுக்குப் பேரு அஃபிலியேஷன் '.
- 'ஆ… அதே தான்… அஃபிலியேஷன்... அந்த அஃபிலியேஷனையும் வாங்கிட்டோம். இப்போது அந்தக் காலேஜை முன்னுக்குக் கொண்டு வர்றது முக்கியம். அதுக்கு ஒரு பொறுப்பானவரா, நல்லா உழைக்கறவரா ஒருத்தர் வேணும். நாங்க விசாரித்துப் பார்த்ததுல நீங்க தான் சரியானவர்னு பல பேரு சொன்னாங்க. அதனால, எங்களோட சாந்தி ராமன் கலைக்கல்லூரியோட முதல்வரா உங்களையே நியமிக்கலாம்னு முடிவு பண்ணியிருக்கோம். நீங்க என்ன சொல்றீங்க? அய்யா, எங்க கோரிக்கையை மறுக்காம ஏத்துக்கணும்னு நாங்க ரொம்பப் பிரியப்படுறோம். '

- 'அய்யா, உங்க அன்புக்கு ரொம்ப நன்றி. இதுக்கு எப்படி பதில் சொல்றதுன்னே தெரியல. நான் காலேஜ்ல இருந்து ரிட்டயராகி என் ஊர்ல சும்மா தான் உக்காந்துக்கிட்டிருந்தேன். நீங்க இப்படி திடீர்னு கூப்பிட்டனுப்பி, எனக்கு ஒரு வேலை போட்டுத் தருவீங்கன்னு நான் எதிர்பார்க்கவே இல்லை. எனக்கு சம்சாரம் இல்லை. அவங்க இறந்து போய் ரொம்ப வருஷமாச்சு. ஒரே பொண்ணு. அவள கல்யாணம் பண்ணிக் கொடுத்து, அவ இப்ப நாக்பூர்ல புருசனோட தங்கிட்டா. நான் தனியாத்தான்

இருக்கேன். ஜமீன் கொல்லங்கொண்டான் கிராமத்துல ஒரு அஞ்சு ஏக்கர் நஞ்சை நிலம் இருக்கு. அதுல விவசாயம் செய்யுறேங்கய்யா'.

- 'ரொம்ப சந்தோஷம். நீங்க உங்க விவசாயத்தையும் கவனிச்சுக்கலாம். எங்க காலேஜ்ல பிரின்சுபாலாவும் இருந்துக்கலாம். நீங்க முழு மூச்சோட வேலை செய்யணும். ஏன்னா, இப்ப தான் நாங்க இந்தக் காலேஜை ஆரம்பிச்சிருக்கோம். அதனால, அதை முன்னுக்குக் கொண்டு வர வேண்டியது உங்க பொறுப்பு. மறந்துராதீங்க. நீங்க அங்க முழு சுதந்திரத்தோட இருக்கலாம். யாரும் உங்க கிட்ட குறுக்கிட மாட்டாங்க. நாங்களும் உங்க கிட்ட எதுவும் குறுக்கிட்டுக் கேட்க மாட்டோம் '.
- 'நல்லதுங்கய்யா'.
- 'வர்ற புதன்கிழமை நல்ல நாள். நீங்க அங்க மொட்டமலை காலேஜுக்குப் போக காலைல நம்ம டிரஸ்ட்டோட மினி வேன் வரும். நீங்க போய் வேலைகளை ஆரம்பிக்கலாம் '.
- 'சரிங்கய்யா'.
- 'உங்க சம்பளம், மற்ற அலவன்ஸ், இதையெல்லாம் ஒரு ரெண்டு நாள் கழிச்சு நாங்க பேசி முடிவு செஞ்சு சொல்லி அனுப்பறோம் '.
- 'அய்யா, நீங்க பாத்து அதையெல்லாம் முடிவு செஞ்சுக்கங்க. '
- எங்க தபாலை மதிச்சு நீங்க இங்க வந்ததுக்கு ரொம்ப சந்தோஷம். நீங்க போயிட்டு புதன்கிழமை அன்னிக்குக் காலைல நல்ல நேரம் பாத்து, நம்ம காலேஜுக்குப் போய் சார்ஜ் எடுத்துக்கங்க'.

கல்லூரி நிர்வாகக் கமிட்டி உறுப்பினர்கள், கட்டிட வாசல் வரை வந்து மினி வேனில் ஏற்றி விட்டார்கள். வணங்கினார்கள். வழியனுப்பி வைத்தார்கள்.

தொடர்ந்து வந்த புதன்கிழமை அன்று, அரங்க. இராமகிருட்டிணனை அழைத்துச் செல்ல கல்லூரி வேன் வந்தது. ஏற்றிக்கொண்டு போய், மொட்டமலை கல்லூரியின் அலுவலக வாசலில் இறக்கி விட்டார்கள்.

ஒரே ஒரு நீளமான, செவ்வகமான கட்டிடம். அப்போது தான் கட்டிடப்பூச்சு முடிந்து, டிஸ்டெம்பர் வாசம் எங்கும் வீசியது. கல்லூரி

முகப்பில் தேசியக்கொடி கம்பத்தைச் சுற்றி ஒரு முழு வட்டத்தில் கப்பி செம்மண்ணைக் கொட்டி மெத்தியிருந்தார்கள்.

காலை பத்து மணிக்கு வந்த ஓரிரு மாணவர்கள், கல்லூரி அலுவலகத்திற்கு வெளியே நின்று கொண்டிருந்தார்கள். அலுவலகத்தின் கணக்காளர் ஒரு பெண். நடுத்தர வயது. ஒரு டைப்பிஸ்ட். அலுவலக உதவியாளர், ஒரு இளைஞர். வாட்ச்மேன் கிழவர். அவ்வளவு தான். கல்லூரி அலுவலகத்தில் நின்ற கூட்டம் அட்மிஷனுக்காக வந்த கூட்டம்.

பதினோரு மணிக்கு டீ வாங்கி வர உதவியாளர் இளைஞன் சைக்கிள் எடுத்துக் கொண்டு வெளியே போனான். அருகில் தெற்கே சத்திரப்பட்டி கிராமம். வடக்கில் மொட்டமலை த.நா.சி.கா. போலீஸ் பயிற்சி முகாம். இந்த இரண்டு இடங்கள் தான் மனித நடமாட்டம் அங்கு இருப்பதற்கு அறிகுறி.

காலையில், அருகில் உள்ள நூற்பாலைகளில் இருந்து வேலை முடிந்து திரும்பும் பணியாளர்கள். அல்லது வேலைக்குப் போகிறவர்கள்.

வெறும் செம்மண், சரளைக்கல் பூமி. இரவு நேரங்களில் கல்லூரி மைதானத்தில் பாம்புகள் நடமாட்டம் உள்ளதாக வாட்ச்மேன் கிழவன் சொன்னான்…

… இரண்டு வாரங்கள் சென்றபின், வகுப்புகள் துவங்கின. பேராசிரியர்கள் வந்தனர். விரிவுரையாளர்கள் வந்தனர். சொற்பமான எண்ணிக்கையில் மாணவர்கள் வந்தனர்.

புதிய மாணவர்களுக்கு வகுப்பறைகளை ஒதுக்கி, அந்தந்த வகுப்பறைகளுக்குப் பெயரிட்டு, பேராசிரியர்களுக்கு வகுப்புகளை நிர்ணயித்து, என்று எல்லாப் பணியும் செய்ய வேண்டியிருந்தது. அலுவலக உதவியாளர் தனக்கு எதுவும் தெரியாது என்று கை விரித்தான். தானே உட்கார்ந்து ஒரு அட்டவணையை தயார் செய்தார் அரங்க. இராமகிருட்டிணன். ஆங்கிலம் - இரண்டாம் தாள் பாடம் நடத்த ஒரு விரிவுரையாளர் மட்டுமே இருந்தார். உடனடியாக, இன்னொரு நபர் தேவைப்பட்டார். பத்திரிக்கையில் விளம்பரம் கொடுத்த போது, உள்ளூரிலிருந்து ஒரு பெண் நேர்முகத்தேர்வுக்கு வந்திருந்தார். எம்.ஏ., எம்.ஃ.பில். முடித்திருப்பதாகச் சொன்னார். உடனே, அவரை ஆங்கிலத்துறையில் நியமித்து உத்தரவிட்டார் இராம கிருட்டிணன்.

வேலை செய்யும் பேராசிரியர்கள், சம்பளத்தைக் குறித்து முணுமுணுப்பாகப் பேசிக் கொள்வது தெரிந்தது. உடனே, ஒரு நாள் சாயங்காலம், கல்லூரி முடிந்ததும், விரிவுரையாளர்களின் கூட்டத்தைக் கூட்டினார்.

- 'என் சகோதரர்களே! நான் இப்போது தான் இந்தக் கல்லூரியில் முதல்வர் பொறுப்பு ஏற்றுள்ளேன். நம் கல்லூரியின் அடிப்படை விஷயங்களில் கவனம் செலுத்திக் கொண்டிருக்கிறேன். இப்போது உள்ள சூழல் கண்டிப்பாக மாற வேண்டும். நாமும், நாம் பணி செய்யும் கல்லூரியும் வேறு வேறு அல்லவே. நாம் ஏதாவது தியாகம் செய்து, இக்கல்லூரியை உயர்த்துவோம். உங்கள் சம்பளப் பிரச்னையை நான் அறிவேன். இது குறித்து கல்லூரி நிர்வாகத்திடம் இன்றே பேசுகிறேன். நல்லதே நடக்கும்ʹ.

தீர்க்கமான குரலில் பேராசிரியர்களிடம் இராம கிருட்டிணன் பேசினார். நிர்வாகக்குழுவிடம் போனார் இராம கிருட்டிணன்.

- 'அய்யா, நாங்க இந்தக் கல்லூரியை ஆரம்பிச்சுட்டோம். அதனோட நிதி வரவு என்னன்னு தெரியுமா? மாணவர்கள் கட்டுற ஃபீஸ் தான். அந்தக் காலேஜ் ஃபீஸைத் தான் உங்களுக்குச் சம்பளமாத் தர்றோம். காலேஜுக்கு நிதி திரட்ட ஏதாவது வழி வகை தெரிஞ்சா, அதை நீங்களே செயல்படுத்தி, நீங்களே நிதி திரட்டிக்கோங்க. எங்க கிட்ட நீங்க அனுமதி எதுவும் கேட்க வேணாம். நீங்க சரியான முடிவு எடுப்பீங்கன்னு எங்களுக்குத் தெரியும் '.

மறுநாள், நடந்த விஷயத்தைத் தன்னுடன் வேலை பார்க்கும் விரிவுரையாளர்களிடம் பேசினார். அவர்களோ எதுவும் பேசாமல் கலைந்து சென்றனர்.

கல்லூரியில் வகுப்புகளுக்கு இட நெருக்கடி இருந்தது. மேல் மாடி முதல் தளத்தில், கட்டுமானம் முடிந்து, பூச்சு வேலை பாக்கி இருந்தது. அதற்குப்பின் எலக்ட்ரிகல் வேலைகள் செய்யப்பட வேண்டும். அந்த மேல்மாடி தளத்தைக் கட்டி முடித்தால், மேலும் ஆறு வகுப்புகளுக்கு இடம் தரலாம். பணப்பற்றாக்குறையால் வேலை பாதியில் நின்று போயிருந்தது. மீண்டும் நிர்வாகக்குழுவிடம் போனார்.

- 'கட்டிடம் கட்டுறது அவசியம் தான். உங்க கோரிக்கை நியாயம் தான். ஆனா, நம்ம காலேஜ் டிரஸ்ட்ல நிதி இல்லயே. நம்ம சமூகத்துக்காரங்க கிட்டச் சொல்லி, நன்கொடை வசூலிக்கச் சொன்னேன். நம்ம இனமோ, ஒரு பைசாவையும் வெளிய

எடுத்து விடாத ஆளுகளா இருக்கு. பூராப் பயலுகளும் கஞ்சப் பிசினாரிங்க. ஒரு பயலுகளும் ஒத்த ரூபா நோட்டைக்கூட வெளிய எடுத்துவுட மாட்டேங்கறான். ஆனா, அடுத்த வருசம் பாருங்க. காலேஜ் அட்மிஷன் ஆரம்பிச்சதும் 'என் மகனைச் சேத்துக்கங்க' ன்னு தலையைச் சொறிஞ்சிக்கிட்டே மொத ஆளா வந்து நிப்பான்… "

- 'ஆனா, கட்டிடம் கட்டி முடிச்சாத்தான், நம்ம பிள்ளைகளை உட்கார வெச்சு வகுப்பு நடத்த முடியும். இப்ப பி.காம். படிக்கற பிள்ளைங்க உட்கார இடம் இல்லாம, அங்கங்கே ஒதுங்கி நிக்கறாங்க. கட்டிடம் கட்டிட்டா ஒரு பெரிய பிரச்னை தீந்துரும் '.
- 'வாஸ்தவம் தான். நீங்க சொல்றதை நாங்க அப்படியே ஏத்துக்கறோம். என்ன செய்ய? வெறுங்கையில முழம் போட முடியுமா? நம்ம டிரஸ்ட்டுல நிதி இல்லயே சார்! '.
- 'நீங்க எல்லாரும் சேர்ந்து மனசு வெச்சீங்கன்னா, எப்படியாவது முடிச்சுரலாம். நீங்க தான் சேர்ந்து கொஞ்சம் கொஞ்சமா நிதி தரணும் '.
- 'நாங்க எப்படி நிதி தர்றது? இது நம்ம சாதி சனத்துக்காக கட்டுன காலேஜ். இதுல படிக்கறது பூராவும் நம்ம ஆளுங்க. அதனால அதுக்கு நிதி தர்றது யாரா இருக்கணும்? நம்ம ஆளுங்க தான?! ஆன அவங்க சுருக்குப் பைய அவுக்க மாட்டேங்குறாங்க. என்ன செய்யறது?'
- 'சார், கொஞ்சம் மனசு வைங்க!'
- 'அய்யா, நீங்களே கொஞ்சம் மனசு வைங்க. உங்க கிட்ட ரிட்டயரான போது வந்த பிராவிடண்ட் ∴பண்ட், கிராஜுவிட்டி, அப்படின்னு தொகை ஏதாவது இருந்தா, அதைப் போட்டு கட்டிட வேலையை முடிங்க. டிரஸ்ட்டுல பணம் சேர்ந்ததும், நீங்க தந்த தொகைய அப்படியே உங்களுக்குத் தந்துர்றோம் '.

- தூக்கி வாரிப் போட்டது. அரங்க. இராமகிருட்டிணனுக்கு. பணம் வாங்கப் போனால், நம்மிடமே பணம் கேட்கிறார்களே! தெக்கத்தி ஊர்க்காரனிடம் இந்தச் சேட்டை அதிகம் உண்டு. அது இந்த மண்ணின் வாகு.
- 'அய்யா, நான் இங்க வேலை செஞ்சு சம்பளம் வாங்க வந்தேன். நீங்களாப் பாத்து, எனக்கு பிரின்சிபால்ன்னு பதவி

கொடுத்தீங்க. இப்ப நானே பணம் போட்டுக் கட்டிடம் கட்டினா அது சரியா வருமா?'

- 'ஏன் வராது? இது நீங்க சேவை செய்யற காலேஜ். அது உங்க காலேஜ். நீங்க பாத்து என்ன வேணாலும் செஞ்சு, அதை முன்னேத்துற விதத்துல முன்னேத்துங்க. இது நம்ம சமுதாயத்துக்குன்னு கட்டுன காலேஜ். நீங்க யாரு , நம்ம ஆளுங்க தான? உங்க பணத்தைப் போட்டு இந்தக் கட்டிடம் கட்டுன பிறகு, இந்தக் கட்டிடம் என்ன ஓடியாப் போகப் போகுது? இல்ல, நாங்க அதைத் தூக்கிட்டு ஓடியா போகப் போறோம்? நீங்க நம்ம ஆளுங்க. தைரியமா உங்க பணத்தைப் போட்டு கட்டிட வேலையை முடிங்க. உங்க பணத்துக்கு காரண்டி உண்டு. நாங்க வேணா உங்க பேருக்கு புரோநோட்டு எழுதித் தர்றோம் சரி தான ?'

- ‘‘ அய்யா, புரோநோட்டெல்லாம் எதுக்குங்க? நீங்க பாத்து ஒரு வார்த்தை சொல்லி 'நாங்க பணச் செலவுக்குப் பொறுப்பேத்துக்கறோம் ' அப்படின்னு ஒரு வாய்மொழி உத்திரவாதம் தந்தா, அதுவே போதாதா? என்ன நான் சொல்றது ? இருந்தாலும்… "

- 'அப்ப ஒண்ணு செய்யுங்க அய்யா. நம்ம காலேஜுக்கு இன்னும் என்னென்ன கட்டிடம் கட்டணும். இன்னும் என்னென்ன சாமான்கள் வாங்கணும்னு நீங்களே ஒரு லிஸ்ட் ரெடி பண்ணுங்க. அதன்படி, நீங்களே கொட்டேஷன் தயார் பண்ணுங்க. காலேஜுக்குத் தேவையான கட்டிடத்தைக் கட்டி, செலவுத் தொகைகளுக்கு பில் வாங்கி நீங்களே வெச்சுக்கங்க. நம்ம காலேஜ் நல்லா வளந்ததுக்கப்புறமா உங்க பணத்தைக் கொஞ்சம் கொஞ்சமா திருப்பிக் கொடுத்து, உங்க கடனை அடைச்சுடுறோம் '.

அரங்க. இராகிருட்டிணன், அந்த ஏற்பாட்டுக்குச் சம்மதம் சொன்னார். 'சம்பாதித்த பணத்தை முதலீடு செய்ய பல வழிகள். இதுவும் ஒரு வழியா? இப்படியும் ஒரு வகையோ? இப்படியும் நாம சம்பாதிச்ச பணத்தை முதலீடு பண்ணிப் பாக்கலாமோ!?' என்று யோசனை தோன்றியது அவருக்கு.

கல்லூரியின் உடனடித் தேவை, ஒரு ஆய்வகக்கட்டிடம். அதை எப்பாடு பட்டாவது கட்டிவிட்டால், பிறகு பி.எஸ்.சி., ரசாயனம் எனும் பட்டப்படிப்பு தொடங்கி விடலாம். கல்லூரியில் ஒரு சின்ன கேண்டீன் வேண்டும். வெளியூரிலிருந்து சத்திரப்பட்டி ஆள் ஒருவர் காலை பதினோரு மணிக்கு, உயரமான எவர்சில்வர் தூக்கு வாளி பிளாஸ்க்கை சைக்கிளின் பின்னே வைத்துக் கட்டிக் கொண்டு வந்து டீ விற்றுக் கொண்டிருக்கிறார். அவரிடம் மாணவர்கள், பேராசிரியர்கள் எல்லாரும் மொத்தமாக ஈ மொய்த்ததைப் போல மொய்க்கின்றனர்.

கல்லூரியில் இருக்கை வசதி இல்லை. ஒரு ஐநூறு சேர்கள் வேண்டும். பிளாஸ்டிக் சேர்கள் போதும். முடிந்தால் அடுத்த பட்சமாக ஒரு விழா அரங்கு வேண்டும். ஆனால், அது பெரிய பட்ஜெட். இப்போது உள்ள கட்டிடத்தில், முதல் மாடிக்கும் மேலே இரண்டாவது மாடி எழுப்பி, ஒரு நீண்ட கூடம் ஒன்றைக் கட்டி விட்டால், அது கூட்ட அரங்கம் என்று வைத்துக் கொள்ளலாம். இந்தத் திட்டமிடுதல் விரிந்து கொண்டே போகிறது. ஆனால், செலவு செய்து தான் ஆக வேண்டும். செலவு செய்தால் தான் நல்ல பலன் உண்டு . கல்லூரியின் புகழ் பரவும். மாணவர் எண்ணிக்கையும் கூடும்.

அரங்க. இராமகிருட்டிணன், ஒரே தீர்க்கமான முடிவோடு செயல்படத் தொடங்கினார். முதல் மாடியில் கட்டிடப்பூச்சு முடிந்திருந்தது. இன்னும் வெளி சிமெண்ட் கலவைப் பூச்சு செய்யப்பட வேண்டும். மின் இணைப்புகளைப் பொருத்த வேண்டும். முதல் பூச்சு அடித்து முடித்த பின், சுண்ணாம்புப் பொடி கொண்டு மேல் பூச்சு அடிக்க வேண்டும். அதற்கு மேலே வர்ண டிஸ்டெம்பர் பூச்சு பூச வேண்டும். கட்டிட மேஸ்திரியைக் கூப்பிட்டார் இராமகிருட்டிணன். அவன் சொன்ன செலவுத்தொகை காதுகளில் அதிர்ச்சியாய் அறைந்தது. ஏற்கெனவே உள்ள கொத்தனார், சித்தாள் சம்பள பாக்கியையும் தந்தால், அதன் பிறகு வேலையைத் தொடர எண்ணியிருப்பதாகவும், மேல் பூச்சு வேலைக்கு மட்டும் ஒண்ணரை லட்சம் ஆகும் என்றான் அந்த கட்டிட மேஸ்திரி சீனிக் கொத்தனார் என்ற சீனி.

அரங்க இராமகிருட்டிணன் யோசனையில் ஆழ்ந்தார். அதன் பின்னர், தன் சுருக்குப் பையை அவிழ்த்தார்.

முதல் மாடியின் பொலிவு கூட ஆரம்பித்தது. வேலை ஒரே மும்முரமாக நடந்தது. அந்தா, இந்தா என்று ஒரு நாற்பது நாட்கள்

போன பின், எலக்டிரிகல் வேலைகளை முடித்த பின்னர், டிஸ்டெம்பர் பூச்சு முடித்துப் பின்னர், செலவுத் தொகையைக் கணக்குப் போட அது அவருக்கு மின்சார அதிர்ச்சியைக் கொடுத்தது.

செலவுத்தொகைகளை அழகாக பல பில்களாகத் தயார் செய்து, தன் அலுவலக உதவியாளர் மூலமாக நிர்வாகக் கமிட்டிக்கு அனுப்ப, 'ஒப்புக்கொள்கிறோம். தொடர்ந்து முயற்சி செய்து, தொடர்ந்து செலவு செய்யவும். எல்லாச் செலவுகளுக்கும் நாங்கள் பொறுப்பேற்கிறோம் ' என்று பதில் வந்தது.

கல்லூரியில் மாணவர்களுக்காக ஐநூறு பிளாஸ்டிக் சேர்கள் வாங்க, இராஜபாளையம் ஃபர்னிச்சர் கடைக்குப் போய் விலை விசாரித்த போது, கறாராக விலை சொன்னார்கள். மதுரையிலிருந்து தான் சரக்கு வர வேண்டும் என்றார் கடைக்காரர்.

மதுரைக்கே போய் சரக்கு கொள்முதல் செய்தால் என்ன என்று தோணவே, நேரடியாக ஒரு சனிக்கிழமை அன்று மதுரைக்குப் போய், கடை கடையாய் அலைந்து ஏறி இறங்கவே, வியாபாரத்தின் நுட்பங்கள் கொஞ்சம் கொஞ்சமாய் அவருக்கு விளங்க ஆரம்பித்தது. இராஜபாளையத்தில் ஒரு பிளாஸ்டிக் சேர் இருநூற்றி இருபது என்று விற்ற விலை, மதுரையில் நூற்று எண்பது என்று ஆனது. மொத்த ஆர்டர் கொடுத்து விட்டு, மொத்தத் தொகைக்கும் ஒரே காசோலை எழுதிக் கிழித்து, கடைக்காரனிடம் நீட்ட, அவன் நன்றியுடன் அவரது கைகளைப் பற்றிக் கொண்டான்.

ஒரு சின்ன கட்டிடம் கட்டி ஷெட் கூரை போட்டு, சின்ன உணவு விடுதி தொடங்கினால் என்ன என்று தோன்றியது. கல்லூரியின் வடக்குப் பக்கம் இடத்தைப் பார்த்து, மேஸ்திரி சீனிக் கொத்தனாரிடம் சொல்ல, அவர் வரைபடம் தயார் செய்து எடுத்து வந்தார். எப்படியும் இன்னும் மூணு லட்சம் எடுத்து வைத்தால் தான் ஒரு சின்ன உணவு விடுதியாவது கட்ட முடியும் என்று தோன்றியது. மாணவர்கள் அமர்ந்து சாப்பிடலாம். டீ, டிபன் தயார் செய்யலாம். பெரிய சமையல் எல்லாம் செய்யமுடியாது. அரங்க. இராமகிருட்டிணன் மறுபடி சுருக்குப்பையை அவிழ்த்தார்.

கல்லூரியின் வடக்குப் பகுதியில், உணவு விடுதி எழும்ப ஆரம்பித்தது. தானே பகல் நேரங்களில் கட்டிடப்பணிகளில் நின்று, அதை மேற்பார்வை பார்த்தார். பார்க்கப் பார்க்க பெருமையாயும், ஆசையாயும் இருந்தது அவருக்கு.

மாதம் ஒரு முறை, ஞாயிற்றுக் கிழமை அன்று கல்லூரிக்கு வருகை தரும் நிர்வாகக்கமிட்டி உறுப்பினர்கள், அதன் பின்னர் வருவதைக் கொஞ்சம் கொஞ்சமாய்க் குறைத்துக் கொண்டார்கள். பிறகு ஒரு கட்டத்தில், அவர்கள் கல்லூரிப் பக்கம் வருவதே இல்லை. கல்லூரிக்குள் வந்தால் இராமகிருட்டிணன், கட்டிடம் கட்டின செலவுத்தொகை என்று ஒரு பெரிய செலவு ஜாபிதா தயார் செய்து, அதை ஒரு கோப்பாக்கி, அந்தக் கோப்பு தொலைந்து விடக் கூடாதே என்பதற்காக அதற்கொரு நகல் கோப்பும் தயார் செய்து வைத்து, நிர்வாகக்குழு உறுப்பினர்களிடம் காட்டுவதற்குத் தயாராய் இருக்கிறார் என்று வாட்ச்மேன் கிழவன் சென்ன கேசவப் பெருமாள் நேராகப் போய் நிர்வாகக் கமிட்டி உறுப்பினர்களிடம் யதேச்சையாகச் சொல்லி வைத்து விட்டுப் போய்விட்டான். அது முதல் அவன் சொன்ன கேசவப்பெருமாள் ஆகி விட்டான். அன்றிலிருந்து, நிர்வாகக் குழு உறுப்பினர்கள், கிழக்குப் பக்கம் தலை வைத்துக் கூட படுப்பதில்லை.

உணவு விடுதி கன கச்சிதமாய் இருந்தது. நல்ல அஸ்திவாரம். ஆனால், பக்கவாட்டுத் தூண்கள் சின்னச் சின்னதாய் இருந்தன. மேலே தகரக் கொட்டகை. நெருக்கி உட்கார்ந்தால் நூறு பேர் உட்கார்ந்து கொள்ளலாம்.

உணவு விடுதியின் கட்டுமான வேலை முடிந்ததும், அதற்கு ஒரு திறப்பு விழா ஏற்பாடு செய்ய வேண்டுமெனத் தோன்றியது. நிர்வாகக்குழு உறுப்பினர்களைப் போய் அலுவலகத்தில் பார்க்கப் போனால், அவர்கள் தர்ம சங்கடத்தில் நெளிய ஆரம்பித்தார்கள்..

- அய்யா, உங்க செலவுல நீங்களே ஒரு கேண்டீன் கட்டி, அதைக் காலேஜுக்காக கொடுத்திருக்கீங்க. உங்க தாராள மனசு யாருக்கு வரும்? நம்ம சாதி சனத்துக்கு மட்டும் தான் இந்த தயாள குணம் உண்டு. இந்த உலகத்துலேயே தன் சொந்தக் காசைப் போட்டு, தான் வேலை செஞ்ச காலேஜுக்குக் கட்டிடம் கட்டித் தந்த மொத ஆளு நீங்க தான் அய்யா'.

நிர்வாகக் குழு உறுப்பினர்கள் எழுந்து வந்து அவரைக் கட்டித்தழுவிக் கொண்டார்கள்.

ஒரு நல்ல நாளாகப் பார்த்து , அந்த கேண்டீன் விடுதி, கல்லூரியின் மாணவர் தலைவரால் திறந்து வைக்கப்பட்டது. உணவு விடுதி நடத்தும் ஒப்பந்த உரிமை ஒரு சிவகாசிக்காரருக்குக்

கிடைத்தது. ஆனால், அவர் தருவதாகச் சொன்ன தொகை கட்டிடத்திற்கு மாத வாடகை போலத்தான் இருந்தது.

- 'சார், இது காலேஜ் தான். ஆனா, காலேஜ்ல மொத்தம் எத்தனை பேரு? அதுல பசங்க மட்டும் தான் சாப்பிட வருவாங்க. பொம்பளைப் பிள்ளைங்க கூச்சப்படும். பிறகு, சனி, ஞாயிறு, பண்டிகை லீவு எல்லாம் கழிச்சுப் பாத்தா ஒரு இருநூறு நாள் இந்த கேண்டீன்ல யாவாரம் நடந்தா அதுவே பெரிய விஷயம். அதனால, இந்தக் கேண்டீன்ல லாபம் எடுக்க முடியாது ரொம்ப கஷ்டம். மாச வாடகை மாதிரி ஏதாவது போட்டுத் தர்றேன். வேலையாள் சம்பளமெல்லாம் சேத்துப் பாத்துக் கணக்குப் பண்ணினா எனக்கு ஒண்ணும் மிஞ்சாது' என்று சலிப்புக்கணக்கு காட்டினார் சிவகாசிக்காரர்.

அவர் சொன்ன மாத வாடகைக்கே ஒப்புக் கொண்டு, கேண்டீனை நடத்தித் தருமாறும், பேராசிரியர்களுக்கு மட்டும் இலவச டீ, டிபன் தர முடியுமா? என்று கேட்டதற்கு கண்டிப்பாய் அது சாத்தியமில்லை என்று மறுத்தார் சிவகாசி. ஆனால், போனால் போகிறதே என்று பிரின்சிபாலுக்கு காலையும், மாலையும், டீ, டிபன் இலவசமாய்த் தருவதாக உத்திரவாதம் தந்தார்.

கேண்டீன் திறந்ததும் மாணவர்கள் அங்கேயே டேரா போடத் தொடங்கினர். பேராசிரியர்களை கல்லூரிக்குள் எங்கும் தேட வேண்டியதில்லை. கேண்டீனில் போய்ப் பார்த்தால் ஒட்டு மொத்தமாக அங்கு அமர்ந்து வம்பளந்து கொண்டிருப்பார்கள். மாணவர்கள் டீ குடித்து முடித்ததும், ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்து ஊத, பேராசிரியர்கள் மாணவர்களிடமே ஓசி சிகரெட்டுகளை வாங்கி அங்கேயே உட்கார்ந்து ஊதித்தள்ள ஆரம்பித்தார்கள்.

சில நாட்களில், கேண்டீனுக்குள் உள்ளே நுழைந்தால், ஏதோ தேவலோகத்திற்குள் உள்ளே நுழைந்தது போல ஒரே புகை மண்டலாமய் இருக்கிறது என்று ஒரு பி.ஏ., தமிழ் படிக்கும் மாணவன் வருணனை செய்து வைக்க, கல்லூரியெங்கும் கேண்டீனைப் பற்றிய விமர்சனங்கள் எழுந்தன.

கல்லூரிக்கு மாதா மாதம் தர வேண்டிய வாடகையை சிகரெட் விற்கும் வருமானத்தின் மூலமாகவே சம்பாதிக்க ஆரம்பித்தார் சிவகாசி. இப்படியாக, சமத்துவ சமூக சோஷலிச ஜனநாயக மார்க்ஸீய சமூகத்தின் திட்டமான அடையாளமாகவே கேண்டீன் மாறிப் போனது குறித்து முதல்வர் இராமகிருட்டிணன் ரொம்பவே வருத்தப்பட்டார்.

பேராசிரியர்கள் மாணவர்களிடம் இலவச சிகரெட் வாங்கி ஊதுவது அவரது மனதுக்குப் புகைச்சலாக இருந்தது.

சிலர் அங்கே கேண்டீனிலேயே உட்கார்ந்து விடைத்தாள்களைத் திருத்திக் கொண்டிருந்தனர். சிலர் மதியச் சாப்பாடு முடித்து, பெஞ்சுகளில் நீட்டிப் படுத்து ஓய்வு எடுக்க ஆரம்பித்தனர். யாரையும் கேள்வி கேட்க முடியவில்லை. பேராசிரியர்களுக்கு, பேராசிரியர்கள் என்று கௌரவமான பெயர். பெயர் மட்டும் தான் கௌரவம். வாங்கும் சம்பளமோ ஒண்ணும் சொல்லிக் கொள்ளும்படியாய் இல்லை. ஒரு டீயை இரண்டு பேர் பகிர்ந்து குடித்தார்கள். சிவகாசிக்காரர் பேராசிரியர்களுக்கு ஒரு நீளமான, ஒடுக்கமான சிட்டைப் புத்தகத்தில் பேர் எழுதிக் கணக்கு வைத்துக் கொண்டு டீ, காபி, வடை, சிகரெட் என்று கடன் கொடுக்க ஆரம்பித்தார்.

தொடர்ந்து வந்த கல்வியாண்டில், நிர்வாகக்கமிட்டியின் கை மேலும் சுருங்க ஆரம்பித்தது. 'பேராசிரியர்கள் மற்றும் வேலையாட்கள் சம்பளத்தையும் நீங்களே முடிந்தால் கொடுத்து விடுங்கள். கல்லூரிக்கு கொடுத்த கடன் என்று எழுதிக் கொள்ளுங்கள் ' என்று சொல்லியனுப்பியது நிர்வாகம்.

இராமகிருட்டிணன் தீவிரமாய் சிந்தனை செய்தார். இப்போது விட்டால் கல்லூரியின் செயல்பாடு திண்டாடும். தள்ளாடும். பேராசிரியர்களுக்கு நாலாயிரம், ஐந்தாயிரம் என்று படியளந்தாலும், சம்பளத்தை நிறுத்தி வைத்தால் ஒரு ஆளும் வேலைக்கு வராது. இது சிக்கலான விஷயம். என்ன செய்வது? பாதிக்கிணறு தாண்டிய கதை தான். வந்தது வரட்டும். முடிந்தவரை செலவு செய்வோம். வந்ததை வரவில் வைப்போம் என்று ஒரு முடிவுக்கு வந்தார்.

அடுத்த இங்கிலீஷ் மாதம் முதல் தேதி அன்று, பேராசிரியர்களும், விரிவுரையாளர்களும் அவரிடமே நேரடியாகச் சம்பளம் வாங்கிக் கொள்ள ஆரம்பித்தார்கள். அவர்களைப் பொறுத்தமட்டில், யார் சம்பளம் கொடுத்தால்

என்ன, அவர்களுக்குத் தேவை சம்பளம், அவ்வளவு தான். அந்த வருடத்தில், டிசம்பர் மாதத்தில், கல்லூரியின் ஆண்டு விழா கொண்டாடலாமா என்று அவருக்குத் தோன்றியது. கல்லூரியின் ஆண்டு விழா என்றால் ஆயிரக்கணக்கில் செலவாகும். அந்தச் செலவையும் தானே செய்யும்படி நிர்வாகம் சொல்லிவிடும். எனவே,

இந்த ஆண்டு விழா, ஆண்டி விழா கொண்டாட்டங்கள் எல்லாம் வேண்டாம் என்ற முடிவுக்கு வந்தார்…

நாக்பூரிலிருந்து மகள் கடிதம் போட்டிருந்தாள். நாக்பூரில் தானும், தன் கணவரும், குழந்தையும் சுகம் என்றும், அவர் முடிந்தால் அங்கு நாக்பூருக்கே வந்து தங்கிக் கொள்ளலாம் என்றும், பேரக் குழந்தைக்கு நன்கு தமிழ் கற்றுக் கொடுக்க வேண்டும் எனவும், எழுதியிருந்தாள்.

இப்போதுள்ள சூழ்நிலையில், பதவியை விட்டு விட்டுப் போக முடியாது. ஒரு கல்லூரியையே தன்னிடம் ஒப்படைக்கிறார்கள். என்ன இருந்தாலும் இது தம்முடைய கல்லூரி. இதை விட்டு விட்டு எப்படிப் போவது ? அது சாத்தியமா? இது கொஞ்சம் ஏடாகூடமான பந்தம். மற்ற கல்லூரி முதல்வர்கள் எல்லாம் 'வேலை பார்த்தோம், நிர்வாகம் செய்தோம், சம்பளம் வாங்கினோம், காரில் வந்தோம், கையெழுத்துப் போட்டோம், போனோம்‘ என்று இருக்கும்போது தனக்கு மட்டும் ஏன் இந்த நிலைமை? கல்லூரிக்கு வேலை செய்யப் போனால், நீங்களே செலவு செய்து லாபத்தை எடுத்துக் கொள்ளுங்கள் என்றா சொல்வது?! பஸ்ஸில் பயணம் செய்யும் ஒருவனிடம், கண்டக்டர், இந்த பஸ்ஸை நீங்களே வைத்துக் கொள்ளுங்கள். இந்த பஸ் நஷ்டத்தில் ஓடுகிறது. நீங்கள் பார்த்து அதை ஓட்டுங்கள். லாபத்தையும் எடுத்துக் கொள்ளுங்கள் என்று சொன்னால் அது எப்படிப்பட்ட கோமாளிக்கூத்தாக இருக்கும்? ஆனால், அதைத்தான் இந்த சாந்தி ராமன் கலைக்கல்லூரியின் நிர்வாகம் செய்து கொண்டிருக்கிறது.

இந்தக்கல்லூரியும் ஆச்சு. அதன் கமிட்டியும் ஆச்சு. நம்ம குடும்பத்தையும் கொஞ்சம் பார்ப்போம். நாக்பூருக்குப் போய் கொஞ்ச நாள் அங்கு தங்கியிருப்போம். நிர்வாகக் கமிட்டியிடம் போய் செலவழிச்ச பணத்தையெல்லாம் திரும்பக் கேட்டுப் பார்ப்போம். போனார். பார்த்தார். கேட்டார். 'அய்யா, உங்க குடும்பத்தைப் போய்ப் பாருங்க. நாங்க வேணாம்னு சொல்லல. நீங்க, நம்ம காலேஜுக்குச் செலவழிச்ச பணம் எங்கயும் போகாது. கவலைப்பட வேண்டாம். நீங்க நாக்பூருக்குப் போயிட்டு, எத்தனை நாள், எத்தனை மாசம் வேணாலும் அங்கயே இருங்க. திரும்பி வாங்க. இந்தக் காலேஜ் எங்கேயும் ஓடிப் போகாது. ஆமா. இது யாரு காலேஜ்? உங்க காலேஜ். நம்ம சமுதாயத்துக்குன்னு கட்டுன காலேஜ். நம்ம சாதி சனத்துலயும் புள்ளைங்க நாலு எழுத்து படிக்க வேணாமா? அதுக்காக நாங்க ஆரம்பிச்சோம். கட்டிடம் எங்க போகப் போகுது? இது உங்க காலேஜ். எத்தனை வருஷம்ன்னாலும் கல்லுக்குத்தியா இங்க தான இருக்கப்

போவுது?! நீங்க போயிட்டு உங்க குடுமபத்தைப் பாத்துட்டு, சந்தோசமா இருந்துட்டுத் திரும்பி வாங்க.

- 'அய்யா, அது வந்து… 'இனிமே இங்க சொந்த ஊர்ல இருக்க வேண்டாம். நாக்பூருக்கே வந்துருங்கன்னு'. என் மகா கூப்புடுறா. அதனால அங்கயே போய் மகளோட தங்கிரலாம்னு பாக்குறேன்.

- 'ரொம்ப சந்தோசம். மறுபடி அதையே நாங்க சொல்றோம். இந்தக் கட்டிடம் எங்க போயிறப் போகுது? சந்தோசமாப் போயிட்டுத் திரும்பிவாங்க'.

- 'அய்யா, இதுவரை நம்ம காலேஜுக்கு ஏகப்பட்ட செலவு செஞ்சுட்டேன். இனிமே செலவழிக்க கையில பணம் இல்ல. நீங்க பாத்து செலவுகளை திருப்பித் தந்தீங்கன்னா, நான் நாக்பூர்லயே தங்கிடுவேன் '.

- 'அய்யா, கோவிச்சுக்காதீங்க! பணத்துக்குத்தான் நம்ம டிரஸ்டுல பெரிய தட்டுப்பாடா இருக்கு. பாருங்க, யாவாரம் முன்ன மாதிரி இல்ல. ஒரே போட்டியா இருக்கு. நேத்து வந்தவனெல்லாம் யாவாரத்துல கொடி கட்ட ஆரம்பிச்சுட்டான். துவரம் பருப்பு விலை ஒரேயடியா படுத்துருச்சு. வாங்குன சரக்கு குடோன்ல அப்படியே தங்கி நிக்குது. இப்ப நிலவரம் சம்பல்*. அவரு, நம்ம உண்ணாமலை அண்ணனும் எண்ணை யாவாரத்துல சிக்கல்ல இருக்காரு. என்ன செய்யறது? யாவாரம் நல்லா ஓடிச்சின்னா நாங்களே முன் வந்து, நீங்க காலேஜுக்குச் செலவழிச்ச பணத்தையெல்லாம் கொஞ்சம் கொஞ்சமா அடைச்சுருவோம். இப்ப காலேஜுல வேலை செய்யுற புரபஸருக்கெல்லாம் நீங்களே சம்பளம் தர்றது பத்தி ரொம்ப சந்தோசம். எல்லா புரபஸரும் நம்ம சாதி சனம் தான்.இது நம்ம சாதி சனத்துக்குனு கட்டுன காலேஜ். அதனால பிரச்னை எதுவும் பண்ணக்கூடாது. இது நல்லா நின்னு வளர்ந்ததுக்கப்புறமா உங்க எல்லாருக்கும் நல்ல சம்பளம் தர்றோம்னு ஒரு வாய் வார்த்தையா சொல்லி வெச்சிருக்கோம். என்ன செய்ய? எல்லா புள்ளைங்களும் நம்ம புள்ளைங்க தான ?…

- 'இருந்தாலும், நான் போட்ட பணம் எனக்கு எப்பக் கிடைக்கும்னு தெரிஞ்சா…'

-

- 'அய்யா, இவ்வளவு எதுக்கு ? நீங்களே காலேஜ் ஃபீஸ், மற்ற ஃபீஸெல்லாம் வாங்கிக்கங்க. அதனோட வரவு, செலவையெல்லாம் உங்க கிட்ட ஒப்படைச்சுடுறோம். நீங்களாச்சு, உங்க காலேஜ் ஆச்சு'.

அதற்கு மேல் அந்த நிர்வாகக்குழுவிடம் பேசுவதற்கு எதுவும் இல்லை. வீட்டுக்குத் திரும்பி விட்டார் இராமகிருட்டிணன்.

மற்றொரு தடவை, எதற்கும் இருக்கட்டும் என்று அதுவரை, கல்லூரிக்குத் தான் செலவழித்த பணம் குறித்த ரசீதுகளோடு போய், அவைகளைப் பார்க்கச் சொன்னார். அந்த ரசீதுகளை அவர்கள் ஒவ்வொன்றாய்ப் பார்த்துக் கொண்டிருந்தனர்.

- 'அய்யா, இந்த ரசீதுகளையெல்லாம் ஒவ்வொண்ணாய் பாக்கப் பாக்க மலைப்பா இருக்கு! இதையெல்லாம் எப்படி உங்களுக்குத் திருப்பித் தரப்போறோம்னு மலைப்பா இருக்கு. அவரு உங்களைப் பத்தி எங்க கிட்ட சொன்ன போது, இந்த அளவுக்கு நீங்க உதவி செய்வீங்கன்னு எல்லாம் சொல்லல'.

- 'அய்யா, யாரைப் பத்தி நீங்க சொல்றீங்க ?'.

- 'அதாவது அய்யா, ஒரு மூணு வருசத்துக்கு முந்தி, நம்ம காலேஜுக்கு பிரின்சிபால் தேவைன்னு பேப்பர்ல விளம்பரம் கொடுத்திருந்தோம். அதுக்கு ரொம்ப நாளைக்கு யார்கிட்டயிருந்தும் பதிலே வரலை… ஒரு நாள், ஒரு பையன் மதுரையில இருந்து வர்றதாச் சொல்லி, இங்க எங்க கிட்ட வந்தான். உங்களைப் பத்தி ரொம்ப பெருமையா உசத்திச் சொன்னான். அந்தப் பையன் உங்களைப் பத்திச்சொல்லிட்டு, நீங்க இங்க இருக்கற கீழராஜகுலராமன் கிராமத்துல தான் இருக்கறதா சொன்னான். அப்படிச் சொன்னதும், நாங்க ரொம்ப ஆச்சரியப்பட்டுப் போய், அந்தப் பையன் சொன்னதுக்காகவே உங்களை இங்க இராஜபாளையத்துக்கு வரவழைச்சு, பார்த்துப் பேசி, உங்களை நம்ம காலேஜுக்கு பிரின்சிபாலா நியமிச்சோம்.

- 'அய்யா, ரொம்ப சந்தோசம். அந்தப் பையன் யாருன்னு ஏதாவது பேர் சொன்னானாங்கய்யா?'

- 'ஆமா. அந்தப் பையன் பேரு ஏதோ பாண்டியன்னு வருமே. அது என்ன பேரு அண்ணாச்சி ? அதான், நம்மள வந்து ஒரு பையன் வந்து பாத்தானே, அவன்.. அந்த மதுரைக்காரப் பையன்…? '

அவர் அருகிலிருந்த கமிட்டி உறுப்பினர், 'அண்ணே, அது, பு.சி. செந்தூர்ப்பாண்டியன். கல்லூரி மாணவர் சங்கத்தலைவராம் ' என்றார்…

…. ஒரு ஞாயிற்றுக்கிழமை மாலையில், அலுவலகத்தில் இருந்த எழுத்து வேலைகளை முடிப்பதற்காக கல்லூரிக்குப் போயிருந்தார் இராமகிருட்டிணன். அலுவலகத்தில் அமர்ந்து பல்கலைக்கழகத்திற்கு அனுப்ப வேண்டிய கடிதங்களைத் தயார் செய்து கொண்டிருந்தார். மெல்லிய காற்று வீசிக் கொண்டிருந்தது. மேற்குப்புறத்தில் மொட்டமலையின் பரந்த கரட்டுக்காட்டு வெளியின் வழியாக கல்லூரிக்குள் வெள்ளாட்டுக்கூட்டம் ஒன்று நுழைந்திருந்தது. மிக ஆனந்தமாக அவை புல் மேய்ந்து கொண்டிருந்தன. வாட்ச்மேன் கிழவன் அந்த ஆடுகளை விரட்டிக் கொண்டிருந்தான்.

சுழித்து அடித்த ஒரு சூறைக்காற்றில், மேஜையில் இருந்த காகிதங்கள் யாவும் தூக்கி எறியப்பட்டு, பறந்து, அறை முழுவதும் விசிறிக் கிடந்தன. இராமகிருட்டிணன் இருக்கை விட்டு எழுந்து, குனிந்து, அந்தக் காகிதங்களை ஒவ்வொன்றாகப் பொறுக்கிக் கொண்டிருந்தார். அவற்றில், அவர் எழுதிய கட்டுரைத் தொகுப்புக்கான முதற்படி எழுத்துக் காகிதங்களும் கலந்திருந்தன. அவைகளை மொத்தமாக அள்ளி எடுத்து, கல்லூரி சம்பந்தப்பட்ட காகிதங்கள், தன்னுடைய காகிதங்கள் என்று தனித்தனியாகப் பிரித்துக் கொண்டிருந்தார்.

இதில் கல்லூரியின் காகிதங்கள் எவை? என்னுடைய காகிதங்கள் எவை? இரண்டுக்கும் வித்தியாசம் என்ன? அந்தக் காகிதங்களில் என் காகிதங்கள் எவை? இரண்டையும் எப்படி பிரிப்பது? இராமகிருட்டிணன் போராடிக் கொண்டிருந்தார்.

கிட்டத்தட்ட இந்தக்கல்லூரிக்கும், எனக்குமான பிணைப்பும் இப்படித்தானோ?

நான் யார்? இந்தக்கல்லூரியின் முதல்வர். இங்கு இப்போது நிர்வாகியின் வேலையையும் செய்து கொண்டிருக்கிறேன். என் சொந்தப்

பணத்தை அள்ளி எடுத்து, கல்லூரியில் முதலீடு செய்து விட்டேன். இதைத் திருப்பி எடுப்பது கஷ்டம். உடனே எடுக்க முடியாது. ரொம்பக் காலம் ஆகலாம்.

கல்லூரியின் மொத்த நிலமும், கல்லூரியின் நிர்வாக அறக்கட்டளைக்குச் சொந்தம். மையக்கட்டிடமும் அறக்கட்டளைக்குச் சொந்தம். ஆனால், முதல் மாடியின் மேல் பூச்சும், மின் சாதன அமைப்புகளும் எனக்குச் சொந்தம். வகுப்பறைகளில் உள்ள கரும்பலகைகள் நிர்வாகத்துக்குச் சொந்தம். மாணவர்கள் அமரும் இருக்கைகள் எனக்குச் சொந்தம். வடக்கே, வெட்டவெளி நிலம் அறக்கட்டளைக்குச் சொந்தம். அதில் உள்ள மாணவர் உணவு விடுதி எனக்குச் சொந்தம். அதிலிருந்து எனக்கு மாத வாடகை வருகிறது.

கல்லூரிப் பேராசிரியர்களுக்கு நான் தான் மாதா மாதம் சம்பளம் தருகிறேன். அந்தப் பணமெல்லாம் மீண்டும் எனக்கு அறக்கட்டளையிலிருந்து திரும்பி வந்தாக வேண்டும். அதுவரை, நான் இதே கல்லூரியில் வேலை செய்து கொண்டிருக்க வேண்டும். விலகிப் போனால், கொடுத்த பணம் வசூலாகாது. நான் விலகினால் பேராசிரியர்களுக்கு யார் சம்பளம் கொடுப்பது ?

இந்தக் கல்லூரியின் ஆதாரத்தில் நான் இருக்கிறேனா? அல்லது என் ஆதாரத்தில் இந்தக் கல்லூரி நிற்கிறதா? யாருக்கு யார் ஆதரவு ? யாருக்கு யார் ஆதாரம்? தொன்னைக்கு நெய் ஆதராமா? நெய்க்கு தொன்னை ஆதாரமா? … முதல்வர் அரங்க. இராமகிருட்டிணனுக்கு தலை சுற்றிக் கொண்டு வந்தது.

---------------------------------------

**சம்பல் *** - வியாபாரம் மந்த நிலையில் உள்ளது என்பதற்கு தென்மாவட்ட வியாபாரிகள் பயன்படுத்தும் குழூஉக்குறி.

# 8. தளிகை

சிவகிரி, சேத்தூர் என்ற பேருள்ள கிராமங்களைக் கடந்து, வடக்கு நோக்கி ஏழு கல் பிரயாணம் செய்த பின், தெலுங்கைத் தாய்மொழியாகக் கொண்ட வணிகர்கள், ஒரே கூட்டமாய்க் குடியிருந்த ஒரு சிறு நகரத்தை வந்தடைந்தோம்.

நெய்த துணியைத் தார்ப்பாய்ச்சிக் கட்டு கட்டிக் கொண்டு, குதிரை வண்டிகளில் ஏறி, வீதிகளில், குறுக்கும் நெடுக்குமாய்ப் போய் வந்து கொண்டிருந்தனர் அம்மக்கள். தெலுங்கு பேசிக் கொண்டு சென்ற அம்மக்களைப் பார்த்ததும் எனக்கு உள்ளத்தில் சொல்லவியலாத உற்சாகம் பீறிட்டு அடித்தது. அந்த வணிகர்களின் மனைவிகளும், பெண் மக்களும் நல்ல சௌந்தர்யமாக, சொர்ண நிறத்தில் தகதகவென மின்னினர்.

அந்த மக்கள் தாங்கள் உண்டு, தங்கள் வேலைகள் உண்டு என்று எவரையும் பொருட்படுத்தாது சென்றது குறித்து எனக்கு ஆச்சரியமாய் இருந்தது.

எனக்கு முன்னே சென்ற கட்டியங்காரன், திடீரென்று குதிரையைத் திருப்பிக் கொண்டு, நான் இருந்த ரதத்திற்கு வந்தார்.

- 'மகாராணியார் வாழ்க! தாங்கள் இவ்வூருக்கு வந்திருப்பதாக எல்லோருக்கும் முன்னறிவிப்பு செய்யட்டுமா? அதுதானே நடைமுறை?' என்றார்.
- 'நரசிம்மையா, அது எமக்குத் தேவையில்லை. நாம் வந்திருப்பதை எவரும் அறியாவண்ணமாகவே அமைதியாய் இந்த ஊருக்குள் நுழைவோம். பிறகு, அமைதியாய் இந்த ஊரைக் கடந்து வெளியே செல்ல வேண்டும். ஏற்கனவே இருட்டி விட்டது. அதனால், நம் சைன்ய பரிவாரம் யாவருமே அமைதியாய், இருக்கும் இடம் தெரியாமல், இந்த ஊரைக் கடந்து செல்ல வேண்டும் என்று பரம ரகசியமாய் யாவருக்கும் தாழ்ந்த குரலில் உத்திரவு செய்யும்! '.

- 'உத்திரவு மகாராணி!' என்று கட்டியங்காரன் பட்டூரி நரசிம்மையா என்னிடம் தலைப்பாகை கவிழ வணங்குகிறார்.

குதிரையைத் திருப்பிக் கொண்டு, யாவரையும் கடந்து செல்லும் நரசிம்மையா, அந்தப் பரிவாரக் கூட்டத்தில் ஒருவராகச் சென்று கொண்டிருக்கும் பெருமீசை வைத்த கிழவன் ஒருவனைப் பார்த்து ஏதோ சொல்ல, அந்தக் கிழவனும் தலையை ஆட்டியபடியே அதை ஏற்றுக் கொண்டான்.

கிழவன் தலையைத் திருப்பி, பின்னே சற்றுத் தொலைவில் வந்து கொண்டிருக்கும் என் ரதத்தைப் பார்க்கிறான். இந்த ரதத்தின் திரைச்சீலையை சற்றே விலக்கிப் பார்த்தால், என் முன்னே செல்லும் கூட்டம் தெரிகிறது.

இருட்டி விட்டதால், பரிவாரத்தினர் சாலை ஓரமாய் நின்று மரக்கட்டைகளின் முனைகளில் பழைய துணிகளைச் சுற்றிக்கட்டி, அதன் மேல் எண்ணையை ஊற்றி, சுளுந்து கொளுத்திக் கொள்கின்றனர்.

திவான் என்னிடம் வருகிறார். அறுபது வயதைக் கடந்த தொப்பை விழுந்த சரீரம். நாயக்கர் வம்சமே தொப்பைக்கார வம்சம் தானோ?

என் முன்னே குனிந்து நமஸ்கரித்து,

- 'மகாராணியார் புகழ் வாழ்க! முன்னே செல்லும் பரிவாரத்தில் உள்ளவர்கள், வரும் வழியில் யாருடனும் பேசக்கூடாது என்று உத்தரவிட்டிருக்கிறேன். கொண்டு போகும் பண்ட பாத்திரங்கள் யாவும் பலத்த பாதுகாப்போடு, ஈட்டி தாங்கிய சைன்ய வீரர்கள் சூழ, பாதுகாப்புடன் கொண்டு செல்லப்படுகிறது ராணி!'
- 'மெத்த மகிழ்ச்சி திவான்! பாதுகாப்பு பலமாகவே இருக்கட்டும். கவனம் வேண்டும்! '
- 'அப்படியே ஆகட்டும் ராணி!'

திவான் திரும்பிச் சொல்கிறார்.

கொண்டு போகும் பொருள், கப்பமாக வசூலித்த இந்தப்பொருள், மூன்றாண்டுகள் கழித்து இப்பொழுது தான் திருவிதாங்கூர் மகாராஜாவிடமிருந்து கப்பமாய் வசூலிக்கப்பட்டுக் கொண்டு போகப்படுகிறது. இது திவானின் முயற்சியால் தான் நடந்தது. எவ்வளவு கஷ்டம் நமக்கு ?! அந்தத் திருவாங்கூர் மகாராஜா இரவிவர்மா லேசுப்பட்டவனா? ஆள் படிகிற விதமாய்த் தெரியவில்லை! மூன்று வருடங்களாய்க் கப்பம் செலுத்தாமல் போக்குக் காட்டிக் கொண்டு இருந்தான்.

ஒவ்வொரு முறையும் நம்மிடமிருந்து அவருக்கு கப்பம் செலுத்த வேண்டியதை நினைவூட்டி ஒரு விகிதம் அனுப்புவதும், இரண்டு மாதங்களுக்குப் பின்னர், ரொம்ப சாவகாசமாய் அதற்கு சாக்குப்போக்கு ஏதாவது சொல்லி ஒரு பதில் ஸ்ரீமுகம் அனுப்புவதும் அந்த ராஜா ரவிவர்மாவுக்கு வேலையாகப் போய் விட்டது. ஏதாவது ஒரு பொய்யை தன் ஓலையில் எழுதி, தூதுவனிடம் கொடுத்தனுப்ப வேண்டியது. அந்தத் தூதுவன் அதை விரைந்து கொண்டு வந்தால் உண்டு. இல்லையேல், மறுபடியும் ஒரு ஓலையில் லிகிதம் திருவிதாங்கூர் மகாராஜாவுக்குப் போகும். மீண்டும் பழைய கதையே தொடரும்.

மலையாள தேசத்தவர்கள் எதில் கெட்டியோ தெரியவில்லை. விருந்தோம்பலில் ரொம்பவும் தேர்ந்தவர்கள். இரண்டு தூதுவர்களை அனுப்பினால், அந்த இருவரையும் கொட்டாரம் என்ற மரத்தாலான மாளிகை வீட்டில் தங்க வைத்து விட்டு, நல்ல நெய்ச்சோறும் மணக்கும் காய்கறிக்கூட்டும், திருப்பணியாரங்கள், கனி வர்க்கங்கள் என்று பரிமாறி ஆளை சாப்பாட்டிலேயே அசத்தி விடுகிறார்கள்.

போதாக்குறைக்கு இரவில் ஏதோ இராவணன் கூத்து, பீமன் கூத்து, அர்ச்சுனன் தபசு என்று நடன நாட்டியங்கள் வேறு. கதகளி என்று அதற்குப் பேராம். நள்ளிரவுக்குப் பின்னே இரண்டு, மூன்று நாழிகைகள் வரை நீளும் இந்தக்கூத்து முடியவே முடியாது. வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கும் தூதுவர்கள் இருவரும் கொட்டாவி விட்டுக் கண்ணயர்வதைப் பார்த்ததும், கூத்து அவசரம் அவசரமாய்

முடிக்கப்பட்டு, இராஜ மரியாதையுடன் தூதுவர்கள் கொட்டாரத்துக்குக் கொண்டு செல்லப்படுவர்.

அங்கு மது விருந்து நடக்கும். பின்னிரவில் மலர்கள் தூவிய சப்பர மஞ்சத்தில் தனியறைகளில் தனித்தனியே உறக்கம் கொள்ளச் செல்லும் தூதுவர்கள், நெய் தீபவொளியில் தனக்கு மயிற்பீலி சாமரம் வீசும் மார்க்கச்சு இறுக்கிக் கட்டிய ஸ்தனங்கள் பெருத்த பெண்களிடம் ஒரு இணக்கமான பார்வையை வீச வேண்டியது தான் பாக்கி.

சாமரம் கீழே வைக்கப்பட்டு, இரண்டு இள யுவதிகளும் தூதருக்கு முன் தங்கள் மார்க்கச்சைகளை அவிழ்த்தபடி 'எடுத்தேன். பரிமாறினேன். ஏற்றுக்கொள்வீர் நீரே' என்றபடி முகம் மூடி, உடலெங்கும் முத்தமிட்டு, அவனை வாரிக் கொண்டபடி நெய் தீபத்தை ஊதி அவித்து விடுவதுண்டு.

ஒவ்வொரு தூதுவரும் கப்பம் வசூலிக்கப் போகும் போது, பல வாரங்கள் அங்கேயே தங்கி விட நேர்ந்தது. சந்தேகப்பட்டு ஒற்றன் ஒருவனை தூதுவனின் பின்னாலேயே அனுப்பி வைக்க, அவன் இந்த பணிப்பெண், சாமரம் விஷயங்கள் எல்லாவற்றையும் கிரகித்து, உடனே ரகசிய ஓலை அனுப்பி வைத்தான்.

'சேர நாடே இப்படித்தான் மகாராணி. உட்கார வைத்து நெய்ச்சோறு போட்டு, ஆளைக் கவிழ்க்கும் தேசம்' என்று போன ஒற்றன் உபரித்தகவலும் அனுப்பினான்.

கப்பம் செலுத்தப்படாமல் நிலுவையில் இருக்க, அதை முழுமையாய் வசூல் செய்ய, வேலும் வாளும் தாங்கிய ஆயிரத்து நூறு பேரை மதுரையிலிருந்து திருவிதாங்கூருக்கு அனுப்பி வைத்தார் தளவாய் நரசப்பையர். திருவிதாங்கூர் கோட்டைக்கு நெடுந்தொலைவுக்கு முன்பே, நமது சைன்யம் சென்று கொண்டிருந்த போது, குழுவின் தலைவர்கள் இரண்டு பேரைத் தனியாகப் பிரித்தெடுத்துக் கொண்டு சென்று விட்டனர் திருவிதாங்கூர் ஆட்கள். நான்கு பிரிவுகளாய் நின்ற மீதி சைன்யத்தை திருவிதாங்கூர் மகாராஜாவின் சேனை சுற்றி வளைத்துக் கொண்டு துவம்சம் செய்தது.

வலங்கழி, இடங்கழி என்று இரண்டு பிரிவுகளாம். ஒருவன் வாளைச் சுழற்றினால் இருபது பேரை வெட்டி வீழ்த்தி விட்டுத்தான் உருவிய வாளை மீண்டும் உறையில் செருகிக் கொள்வானாம். போதாக்குறைக்கு களரி விளையாடும் இருபது பிராயம் நிறையாத விடலைகளை அணி வகுத்துக் கொண்டு வந்து நம் மதுரை சைன்யத்தோடு மோத வைத்தார்களாம்.

களரி வாள் சுழற்றியவர்கள், பளீர் பளீரென சூரிய வெளிச்சம் போன்ற பிரகாசமான வாட்களையும், கேடயங்களையும் சரிசமமாய்க் களத்தில் சுழற்றி சுழற்றி அடித்தார்களாம். வானத்தில் பறந்து, பறந்து அவர்கள் சண்டையிட்டதைப் பார்க்கப் பார்க்க ஏதோ கழுகுகள் வானத்தில் பறந்து, பறந்து சண்டையிட்டது போலவே இருந்ததாம்.

நொறுக்கப்பட்டு, துண்டு துண்டாய் வெட்டப்பட்ட சைன்யம் திருவிதாங்கூர் மண்ணிலே வீழ்ந்த செய்தி கேட்ட தளவாய் நரசப்பையர் கோபத்தில் மீசை துடிதுடிக்க வெகுண்டெழுந்தார்.

- 'என்ன நினைத்துக் கொண்டிருக்கிறான் அந்த மலையாள தேசத்தான்? நாங்கள் என்ன இடுப்பில் சேலை கட்டிய நபும்சகர்கள் என்றா நினைத்தான்? நமது சுண்டு விரலுக்குச் சமானம் இந்த திருவிதாங்கூர் ராஜா. அவன் என்ன பெரிய வீரனா? ஒரு நாளைக்கு அறுபது நாழிகையும் பெண்களுடன் மஞ்சத்தில் படுத்து உருளும் அவனுக்கு போர்க்களம் என்றால் என்ன என்று தெரியுமா? அவன் மல்லாந்து படுத்துப் பார்த்ததில்லை யாரும். அவனுக்குச் சரியான பாடம் கற்பிக்க வேண்டிய நேரம் வந்து விட்டது. ராணி, உத்தரவிடுங்கள் தேவி!'

தளவாய் நரசப்பையர் நாடி நரம்புகளில் துடிதுடிப்பு ஏற, முகத்தில் அத்தனை ரத்தமும் கோபமாக கொப்பளித்து நிற்க, மீசை துடிதுடிக்க, தலைச்சிரசில் உள்ள நீண்ட வெண்மையான முடிக்கற்றைகள் சிலிர்க்க, அடிபட்ட சிறுத்தைப்புலி போல சினத்தால் சீறுகிறார்.

வீரனின் கோபம் போர்க்களத்தில் முடியும். தளவாயின் கோபம் எதில் வேண்டுமானாலும் முடியும். அவரைச் சாந்தப்படுத்தி நெறிப்படுத்த வேண்டும். அவரது சினம் மீண்டும் மலையாள தேச மண்ணில் சரியான விதத்தில் வெளியாக அவரை நெறிப்படுத்த வேண்டும்.

- 'தளவாய்! அமைதி கொள்ளுங்கள். சினம் குறையுங்கள். சாந்தம் கொள்ளுங்கள். உமது கோபம் எமக்குப் புரிகிறது. மலையாள தேசத்தானோடு யுத்தம் செய்ய நமக்கு எத்தனை சைன்யம் தேவைப்படும் என நீங்கள் அறிவீர் அல்லவா ?'

- 'தேவி, மலையாளத்தானின் சைன்யம் பெரிது அல்ல. ஆனால், போர்க்கலையில் தந்திரங்கள் அறிந்தவர்கள். வலங்கழி, இடங்கழி வீரர்கள், களரி வீரர்கள், வில்லாளிகள் என இவர்கள் யாவரையும் சமாளிக்க ஒரு நாலாயிரம் பேர் போதும் '.

- 'தளவாய், நன்கு யோசித்துக் கொள்ளுங்கள். பிற்பாடு, இங்கு நமக்கு தஞ்சாவூர்க்காரனை சமாளிக்க ஏதாவது படை தேவைப்படுமா?'.

- 'தேவி, இராம வர்மாவை சந்திக்க நமது சைன்யத்தில், தேர்ந்த கை வீச்சாளர்கள் ஒரு நாலாயிரம் பேர் போதும் என்று எமக்குத் தோன்றுகிறது. இருப்பினும், கூடுதலாக ஒரு ஆயிரம் பேர் எதற்கும் இருக்கட்டும். மொத்தம் ஐயாயிரம் பேர் கொண்ட சைன்யத்தை அங்கு திருவாங்கூருக்கு அனுப்பி வைப்போம். செல்லும் வழியில் சேத்தூர், சிவகிரி, புளியங்குடி மற்றும் இதர ஜமீன்களில் உள்ள தேர்ந்த வீரர்களையும் திரட்டிக் கொள்ளலாம். நமது குதிரைப்படையும், யானைப்படையும் போதும். அதற்கு பதில் சொல்லவே அந்த மலையாளத்தான் தடுமாறுவான் '.

- 'நிஜமாகவா?

- 'தேவி, நமது சேனையின் மீது நான் ரொம்ப நம்பிக்கை வைத்துள்ளேன். தஞ்சாவூர்ப் போர், சேலம் போர், இராமநாதபுரம் கிழவன் சேதுபதியுடனான போர்,இவைகளில் நமது படைகளின் வீரத்தைக் கண் குளிரக் கண்டேன். நமது சைன்யத்தைப் பொறுத்தமட்டில், நமது வீரர்களை ஒன்று சேர்த்து நிறக வைத்தால், அவர்களின் திரண்ட பலம் என்று பார்க்கும் போது, ஒன்றும் ஒன்றும் இரண்டல்ல. பதினொன்று தான் தேவீ!'.

- 'அப்படியா நரசப்பையா! ரொம்ப மகிழ்ச்சி! திருவிதாங்கூர் நோக்கி நமது சைன்யம் செல்லட்டும். இராம வர்மாவை வீழ்த்தி அவனிடமிருந்து கப்பம் வசூலித்து வரட்டும். நமது படைக்குத் தலைமை தாங்கிச் செல்ல நமது பிரதானிகளில் ஒருவரே அங்கு செல்லட்டும் '.

- 'ராணி! இது மிக முக்கியமான களம். மலையாள தேசத்தவர்கள் ஆட்களை யுத்தத்தில் பயன்படுத்தினால் சந்தித்துவிடலாம். திடீரென்று பில்லி சூன்யம், ஏவல், பூத பைசாசங்களை யுத்தத்தில் நம் முன்னே கொண்டு வந்து நிறுத்தினால் நாம் என்ன செய்வது? அதனால் நானே போகிறேன் ராணி !'

- 'நரசப்பையா, உமது இருப்பு இங்கே மதுரையிலும், சீராப்பள்ளியிலும் எப்போதும் தேவையாய் உள்ளது. போதாக்குறைக்கு நீர் மலையாள தேசம் போய் விட்டதை சரபோஜி அறிந்தால் உடனே அவனது படையை தஞ்சாவூரிலிருந்து அனுப்பி விடுவான் என்பதையும் நினைவில் கொள்ளுங்கள்.

- 'அதனால்… '

- 'தளவாய் அவர்கள் சீராப்பள்ளி நிர்வாகத்தை எப்போதும் கவனிக்க வேண்டும் என்றே விரும்புகிறோம். '

- 'தேவியின் சித்தமே எமது சித்தமும்'.
- 'உம்முடைய சேனைப் பிரதானிகளில் ஒருவர் திருவிதாங்கூர் செல்லட்டும். உம்மிடம் தேர்ந்த பிரதானி யாராவது…?…'
- 'உண்டு மகாராணி. தந்தலூரி கிருஷ்ண கொண்டமி ரெட்டி' என்பவர் உள்ளார். அவருக்கு நானே நேரடியாக நிறைய பயிற்சி அளித்து வருகிறேன் தேவி!'.
- 'மிக்க மகிழ்ச்சி. அவரையே அனுப்புங்கள்'
- தந்தலூரி கிருஷ்ண கொண்டமி ரெட்டி என்ற பேர் கொண்ட அந்த இளைஞன் ஐயாயிரம் வீரர்கள் கொண்ட சைன்யத்திற்குத் தலைமை தாங்கிச் சென்றான். திருவிதாங்கூரே நடுங்கும் வண்ணம் யுத்தம் நடந்தது. வலங்கழி, இடங்கழி என்ற வீரர் படையைச் சிதறடித்தான். களரி முடித்த வீரர்களை போர்க்களத்திலேயே துவம்சம் செய்தான். திருவிதாங்கூர் தோற்றது. மன்னர் இராம வர்மா ஓடி வந்தார்.
- 'மன்னிக்க வேண்டும் பிரபு! தவறு நடந்து விட்டது. மதுரை சைன்யத்தின் பலம் தெரியாமல் மோதி விட்டோம். பொறுத்தருள வேண்டும். எவ்வளவு வேண்டுமானாலும் கப்பம் தரச் சித்தமாய் இருக்கிறோம் '.
- 'கொண்டு வா!'

கப்பம் கொண்டு வரப்பட்டது. தாமிர அண்டாக்களில் பொன் கழஞ்சுகள் குவிந்து கிடந்தன. கிட்டத்தட்ட கருவூலமே காலி செய்து கொண்டு வரப்பட்டது போலத் தெரிந்தது. இருபத்தி ஒன்று குதிரை ரதங்களில் அந்தப் பொன்னும், மணியும் ஏற்றப்பட்டன. இது தவிர, திருவிதாங்கூர் கோட்டை கொத்தளத்தை அலங்கரித்த ஏராளமான பீரங்கிகளும் எடுத்துக் கொள்ளப்பட்டன.

வெற்றியுடன் மதுரை நோக்கித் திரும்பி வரும் வழியில் தென்காசி அருகே ராணி மங்கம்மாளே கிருஷ்ண கொண்டமி ரெட்டியை

எதிர்கொண்டார். அவரது திறமையைப் பெரிதும் மெச்சினார். திருவிதாங்கூர் மன்னரிடமிருந்து கொண்டு வந்திருந்த கப்பம் சுமந்த வண்டிகள் வரிசையாய் நின்றன. பீரங்கிகள் வேறு.

- 'அந்தப் பீரங்கிகளை எல்லாம் கொண்டு சென்று சீராப்பள்ளியிலும், மதுரையிலும் உள்ள நம் கோட்டைகளில் ஏற்றி வையுங்கள். அவை அங்கு அலங்காரமாக இருக்கட்டும்.
- 'உத்திரவு தேவீ! தந்தலூரி கிருஷ்ண கொண்டமி ரெட்டி பணிந்து சொல்கிறார்.

சைன்யம் அந்தச் சிறு கிராமத்தினை விட்டு வெளியேறும் முன், பெரிய தலைப்பாகை அணிந்த ஒருவர் தன் கூட்டத்தினர் சிலரோடு வந்து பல்லக்கின் முன் வழி மறிக்கிறார். மெய்க்காவலர்கள் பதறுகின்றனர். உடை வாட்களை உருவி எடுத்துக் காட்டி,

- 'யார் நீங்கள் ? என்ன வகை ? என்ன வேண்டும் ? விலகிப் போங்கள் ! "

வந்த சிறு கூட்டத்தின் தலைவன் ஒரு கிழவன்.

- "மன்னிக்க வேண்டும். இராணி மங்கம்மாள் இவ்வழியாகச் செல்கிறார் என்று கேள்விப்பட்டோம். அவரைக் கண்டு மரியாதை செய்யலாம் என்று வந்தோம். மகாராணியார் வருவது முன்பே தெரிந்திருந்தால், ஊர் எல்லையிலேயே வரவேற்பு தந்திருப்போம். தாமதத்திற்கு மன்னிக்கவும் '.
- 'மகாராணியார் இங்கு வருகிறார்கள் என்று யார் உங்களுக்குச் சொன்னது ?'
- 'எங்கள் சமூகத்தின் ஆட்களில் ஒருத்தன் தான். உங்கள் சேனை வீரர்களில் சிலர் வைத்திருந்த பதாகைகளைப் பார்த்து விட்டு என்னிடம் வந்தான். தாமதமாக வந்து என்னிடம் சொன்னதற்காக அவனைக் கடிந்து கொண்டேன் ".

வந்த ஆள் சுத்தமான தெலுங்கில் பேசிக் கொண்டே இருந்தான்.

- 'வெளியே என்ன சத்தம் ? ரதங்கள் ஏன் நின்று விட்டன ?'.
- 'மகாராணி! யாரோ இந்த ஊர் மக்களின் தலைவராம். வணிகர் கூட்டமாம். உங்களைச் சந்திக்க வேண்டுமாம் '.

திரைச்சீலையை விலக்கி வெளியே எட்டிப் பார்த்து விட்டு, ரதத்திலிருந்து இறங்குகிறார் மகாராணியார்.

- 'யாரது?'
- 'மகாராணியாருக்கு எங்கள் வந்தனங்கள். நாங்கள் இவ்வூர் வணிகர் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள். நான் இக்கூட்டத்தின் தலைவர் '.

கையை முன்னே நீட்டி, பெரிய வெள்ளித்தட்டின் மேல் மூடியிருக்கும் பட்டுத்துணியை அகற்ற, தட்டிலே பழங்கள், தாம்பூலம், புதிய மலர்கள், பொற்காசுகள் பளபளக்கின்றன. சுத்தமான தெலுங்கில் பேசுகிறார் அத்தலைவர். அந்தத் தெலுங்கு வேறு மொழி கலப்பிடமில்லாத தெலுங்கு. அது எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. மதுரையில் எங்கு பார்த்தாலும் தமிழ் பேசும் கூட்டம் தான். தளவாய் நரசப்பையா கூட அவர்களைப் பார்த்து விட்டு 'அரவா, அரவா' என்பார்.

- 'உம்முடைய மரியாதைகளை நாம் ஏற்றுக் கொண்டோம் '.
- 'நன்றி மகாராணி' இம்மரியாதைகளை தாமதமாகக் கொண்டு வந்ததற்கு மன்னிக்க வேண்டுகிறோம். தங்கள் வருகை குறித்து முன்னமே எமக்குச் சொல்லப்படவில்லை'.
- 'இல்லை அய்யா. எமது வருகை மிக ரகசியமானது. அது ராஜ்ஜிய ரகசியம் '
- 'மன்னிக்கவும்! '.
- 'எதற்கு ?'
- 'தங்களை வரவேற்கத் தாமதமானதற்கு'.
- 'ஏற்கெனவே உம்மை மன்னித்து விட்டோமே!'.

- 'இருப்பினும், எமது தேசத்து மகாராணியல்லவா ? அதுவும் தெலுங்கிலேயே பேசும் மகாராணி'.
- 'தங்கள் வணிகம் தான் என்ன ?'
- நாங்கள் பருத்தி வணிகர்கள். இங்கு சுற்றுப்புற கிராமங்களில் பருத்தி அமோகமாக விளைகிறது. அவைகளை குடியானவர்களிடமிருந்து விலை கொடுத்து வாங்குகிறோம். பிறகு, அவைகளை நூலாக நூற்று நல்ல விலைக்கு விற்கிறோம். நல்ல லாபம் கிடைக்கிறது ராணி'.
- 'மிக்க மகிழ்ச்சி!'
- 'எங்கள் குலப் பெண்கள், குழந்தைகள், குடும்பங்கள் என எண்ணிக்கையில் பெருகி விட்டோம். இப்போது இக்கிராமம் முழுவதும் எங்கள் வகை ஆட்கள் தான் '.
- 'நல்லது !'
- 'தங்கள் அன்பும், ஆதரவும் எங்களுக்குத் தேவை'
- 'அது தங்களுக்கு எப்போதும் உண்டு. அவகாசம் இருப்பின், தாங்கள் மதுரைக்கு எமது அரண்மனைக்கு எப்போதும் வரலாம். எமது விருந்தினராக அங்கேயே பல நாட்கள் தங்கியிருக்கலாம். எமது முத்திரை மோதிரம் இதோ'.
- 'மிக்க நன்றி! இது தாங்கள் எங்களுக்குச் செய்யும் மிகப் பெரிய கௌரவம் மகாராணியாரே!'
- 'நாங்கள் விடை பெற்றுக் கொள்கிறோம். தங்கள் அன்பையும், பண்பையும் என்றும் மறவோம். '

மகாராணி விடை பெற்று, சைன்ய பரிவாரம் அந்த சிறு கிராமத்தின் வடக்கு எல்லையை விட்டு வெளியேறும் போது, நன்கு இருட்டி விட்டது. இருட்டு என்றால் மையிருட்டு. மருந்திற்குக்கூட வெளிச்சம் எங்கும் இல்லை.

வானத்தில் எங்கும் தேடிப்பார்த்தும் ஒரு நட்சத்திரத்தைக் கூட காண முடியவில்லை. ரதத்தின் வெளியே சுளுந்துகள் தரும் வெளிச்சம் மட்டுமே. அந்த சுளுந்துகளை ஏந்திச் செல்லும்

வீரர்களின் வியர்வை படிந்த முதுகுகளிலும், தோள்களிலும் பட்டு அவ்வொளி மினுமினுக்கிறது.

சுளுந்துகளை ஏந்தும் வீரர்களின் புடைத்த மார்புகளும், புஜங்களும், கரிய மீசையும், நிமிர்ந்த தோள்களும் காண்பதற்கே கண் பறிக்கும் காட்சி. சுத்தமான புஜபலமுள்ள வீரனைக் காணும்போது, நெஞ்சில் மதிப்பும், மரியாதையும் பிரமிப்பும் ஏற்படுகிறது. கனமான, உடல் பெருத்த வீரன் போருக்கு மட்டுமல்ல, போகத்திற்கும் ஏற்றவன். களத்திற்கும், காதலுக்கும் ஏற்ற வீரன் போற்றத்தக்கவன். அவனைப் பெண்கள் வணங்கி துதி செய்வர்! அவனைப் பெண்கள் நெஞ்சத்தில் அல்லவா வைத்துப் பூஜிப்பர்?! காமம் என்பது பெண்களுக்கு எத்தனை ருசியான விஷயம் !...

வெளியே காற்று வெப்பமாய் வீசுகிறது. புழுக்கமான காற்றில் உடல் வியர்க்கிறது. மேனியெங்கும் வியர்த்ததில் உடைகள் அப்படியே உடலோடு ஒட்டிக்கொண்டு விட்டன. திரையை விலக்குகிறேன். வெப்பமான காற்று நேரே முகத்தில் அறைகிறது. மகாராணியாகவே இருந்தாலும் காற்றும், வெய்யிலும், மழையும், பனியும் எல்லோருக்கும் உள்ளது போலத்தான் எனக்கும்.

'மதுரைத் தளபதி துப்பக்குல லிங்கம நாயக்கர் மகள், மாட்சிமை பொருந்திய இராணி மங்கம்மாள் நான் தான் ' என்று சொல்லிக் கொண்டு சமுத்திர அலைகளில் நடுவே போய் நிற்க முடியுமா? அல்லது 'மதுரை மன்னர் சொக்கநாத நாயக்கரின் துணைவியும், பட்ட மகிஷியும் நானே!' என்று சொன்னால் பெய்யும் மழையின் தண்ணீர் என்னை நனைக்காமல் விட்டு விடுமா ?′ .

புழுக்கம் அதிகமாகிறது. தொடர்ந்து வியர்த்ததில் உடல் சோர்ந்து துவண்டு போகிறது. காலையில் தொடங்கி குதிரை ரதத்தில் பிரயாணம் செய்ததில், உடல் அசதியாகி விட்டது. கைகளும், தொடைகளும் அயர்ந்து விட்டன. உடல் ஆயாசமாக இருக்கிறது.

- 'காவலரே!'

- 'தேவீ!'
- 'இங்கு எங்காவது ஓரிடத்தில் நம் ரதத்தை நிறுத்த முடியுமா?
- 'ராணி! இந்தக் காடு மிகவும் இருளான காடு. இங்கு நம் ரதத்தை நிறுத்துவது சரியல்ல. அது ஆபத்தானதும் கூட. '
- 'அப்படியானால் அருகில் கிராமம் ஏதாவது உண்டா?'

அந்த மெய்க்காப்பாளன், அருகில் இருந்த மற்றொருவனிடம் வினவ, அவன் இந்த வட்டாரத்தை நன்கு அறிந்தவன் போலும். முன்னே சாரதியின் அருகில் அமர்ந்திருந்த அவன் பின்னே திரும்பி,

- 'தேவீ! இன்னும் சற்றுத் தொலைவு தான். கொஞ்சம் பொறுத்துக் கொள்ளுங்கள். இன்னும் ஒரு கல் தூரம் பயணம் தான். நாம் மடவார் வளாகம் என்ற இடத்தை நெருங்கிக் கொண்டிருக்கிறோம். அங்கு உள்ள சிவன் கோவில் மிகவும் பிரசித்தம் '.
- 'அப்படியா? ஆனால், எனக்கு உடனே குளிக்கவும், ஓய்வு கொள்ளவும் ஒரு இடம் வேண்டுமே!'
- 'இதோ, இன்னும் கொஞ்சம் தொலைவு தான் '.

உடல் வேதனையைச் சகித்துக் கொண்டு பிரயாணம் போவது ரொம்பக் கஷ்டம் தான். பயணம் போகும் சாலை நல்ல சாலை. செம்மண்ணும் சரளைக்கற்களும் கொட்டப்பட்டு, திட்டமாக இறுக்கிப் போடப்பட்ட சாலை. ரதங்கள் கல் சாலையில் ஓடும் கடமுட சத்தம், உடல் சலிப்பை அதிகப்படுத்துகிறது. இந்த சாலையே நான் கட்டுமானம் செய்தது தான்…

- 'ராணி ! தங்கள் சிரமத்திற்கு எங்களை மன்னிக்கவும் '.
- 'இது என்ன இடம்? எந்த ஊர்? '
- 'இந்த இடத்திற்கு மடவார் வளாகம் என்று பெயர். இங்கு ஒரு சில குடிசை வீடுகள் உள்ளன. ஊருக்குள் செல்ல இன்னும் நெடுந்தொலைவு பயணம் செல்ல வேண்டும் '.

- 'பரவாயில்லை. நான் இங்கேயே இறங்கிக் கொள்கிறேன். இங்கு ஓய்வெடுக்க அருகில் எங்காவது வீடுகள் உண்டா என விசாரியுங்கள் '.

ஒரு காவலன் வடக்கு திசையில் விசாரிக்க ஓடுகிறான். நான் இருளில் நிற்கிறேன். தூரத்தே மெய்க்காவலர்கள். சாரதி, கட்டியங்காரன், ஏவலர்கள், ராஜப்ரதானிகள், சம்பிரதிப்பிள்ளை, சைன்யம் மற்றும் சகலமும் சுளுந்துகளின் வெளிச்சத்தில் என் கண்களில் அசையும் நிழல்கள் போலத் தெரிகின்றனர். இந்தக் கணம் எனக்கு எதுவும் நேரலாம். எதிரிகள் கூட என்னைச் சூழ்ந்து கொள்ளலாம். அருகில் உள்ள மலைத்தொடரில் இருந்து காட்டு விலங்குகள் திடீரென வந்து என்னைத் தாக்கலாம். அல்லது மெய்க்காவலரில் ஒருவரே கூட என்னைக் கண்டதுண்டமாய் வெட்டிக் கொன்று விடலாம். இராஜ வாழ்க்கை என்பது எத்தனை ஆபத்துள்ளது?!!!…

…. ஓடிப்போன காவலன் திரும்பி வருகிறான். முகம் வியர்த்திருப்பது சுளுந்து வெளிச்சத்தில் தெரிகிறது.

- 'தேவீ! இங்கு மடவார்வளாகத்தில், சிவன் கோவிலின் வடபுறம், தெப்பக்குளத்திற்கு அருகே ஒரு அந்தணர் வீடு உள்ளது. அந்த வீட்டிற்கே போய் விசாரித்து விட்டேன். அவர்கள் தெலுங்கில் தான் பேசினார்கள். நீங்கள் சற்று தூரம் ஓய்வு எடுத்துக் கொள்ள அங்கு ஏற்பாடுகள் செய்யச் சொல்லி விட்டு வந்தேன்.
- 'வீடு எப்படி உள்ளது ?'
- 'ஏதோ சிறிய வீடு தான். இது தவிர, இந்த வட்டாரத்தில் வேறு எங்குமே வீடு இல்லை தேவி !'.
- 'பரவாயில்லை. நான் சற்று நேரம் சிரம பரிகாரம் செய்து கொண்டு மீண்டும் பயணம் தொடர நினைக்கிறேன். நமது சைன்யம் இங்கு தங்க வாய்ப்புள்ளதா?'
- 'தேவீ! இங்கு அருகில் பெரியகுளம் கண்மாய் உள்ளது. நீர் நிரம்பி ததும்பி வழிந்து கொண்டிருக்கிறது. உடல்

உபாதைகளை இங்கு கழித்துக் கொள்ளலாம். நமது சைன்யத்தை இங்கு மரத்தடிகளில் ஓய்வெடுக்கச் சொன்னாலும் அவர்கள் சம்மதிப்பார்கள் '.

- 'நல்லது. இந்த ஓரிரவு மட்டும்தான் இப்படி. நாளை அருகில் உள்ள ஊருக்குப் போய் விடலாம், இல்லையா?'.
- 'ஆம் ராணி, அருகில் ஸ்ரீவில்லிபுத்தூர் எனும் அழகிய ஊர் உள்ளது. அங்கு உள்ள கோவிலில் உள்ள ஆண்டாள் தான் இந்த வட்டாரத்து மக்களின் குல தெய்வம்.'
- 'நான் இப்போது ரதத்திலிருந்து இறங்கலாமா? எனக்கு முன்னே செல்ல கட்டியங்காரனும், சம்பிரதிப் பிள்ளையும் தேவையில்லை. வெகு அமைதியாய் நான் அங்கு செல்ல விரும்புகிறேன்'.
- 'தங்கள் சித்தம் ராணி !'

சாலையின் வலது பக்கம் சிவன் கோவில். கோவிலின் வடபுறம் பெரிய தெப்பக்குளம். இருளில், குளத்தின் கரையில் தவளைகள் சப்தமிட்டுக் கொண்டிருந்தன. தெப்பக்குளத்தின் கரையில் அந்த வீடு. சின்ன வீடுதான். வடக்கு பார்த்த வாசல். இரவு நேரத்தில் அந்த வீடும் கருமையாய், மிக மங்கலாய்த் தெரிந்தது. வீட்டின் முன்னே ஏதோ அவரையோ, பூசணியோ கொடி படர்ந்து கிடக்கிறது. வீட்டின் வாசலில் நின்று கொண்டிருந்த குடும்பத்தினர் என்னைக் கை கூப்பி பணிந்து வரவேற்கின்றனர். தெலுங்கு மொழியில் அன்பான, குழைவான உபசரிப்பு. என்னுடன் வந்த சேவகர்களை வெளிறே நிற்கச் சொல்கிறேன். நான் மட்டும் உள்ளே நுழைகிறேன்.

- 'மகாராணி வர வேணும்! வர வேணும்! '.
- 'இங்கு உள்ளே வர வேணும் '.

உள்ளே நுழைந்ததும் சிறிய திண்ணை. குழந்தைகள் அங்கு உறங்கிக் கொண்டிருக்கின்றன. வீட்டின் தலைவர் குழந்தைகளை பரபரப்போடு எழுப்புகிறார்.

- 'வேண்டாம். குழந்தைகளை எழுப்ப வேண்டாம். அவர்களைத் தொந்தரவு செய்ய வேண்டாம். அவர்கள் நிம்மதியாக உறங்கட்டும் '.

வீட்டின் உள்ளே நுழைகிறேன். கூடத்தில் குத்துவிளக்கு வெளிச்சத்தில் யாவரும் கரும் உருவங்களாகத் தோன்றுகின்றனர்.

- 'இங்கு உட்காருவதற்குக் கூட இடம் இல்லையே மகாராணி'.

வீட்டின் தலைவர் ஓடிச்சென்று மர இருக்கையை எடுத்துக் கொண்டு வருகிறார்.

- 'சற்று நேரம் இளைப்பாருங்கள். ப்ரியம்வதா, இந்த விசிறியால் மகாராணிக்குச் சற்று நேரம் விசிறிக் கொண்டிரு. நான் வெந்நீர் வைக்க ஏற்பாடு செய்கிறேன்.

வீட்டின் தலைவர், பின்புறம் கொல்லைப்புறத்துக்கு விரைகிறார். அங்கு அவர் தன் மனைவியிடம் உத்திரவுகள் போடுவது இங்கே கீழ் ஸ்தாயியில் கேட்கிறது.

ப்ரியம்வதா என் இடது பக்கம் நின்று கொண்டு, பணிவாக எனக்கு ஒரு பெரிய பனை ஓலை விசிறியால் விசிறி விடுகிறாள். நான் அவளது முகத்தைப் பார்க்கிறேன். தீட்சண்யமான களங்கமற்ற முகம். தீபவொளியில் அவளது கண்கள் ஒளிர்கின்றன. கன்னங்கள் பளபளக்கின்றன. மெல்லிய பருத்தி ஆடை அணிந்திருக்கிறாள். கண்களின் மணிகள் தீபத்தின் வெளிச்சத்தில் மின்னுகின்றன. வறுமையிலும் செம்மை!

என் மேல் போர்த்தியிருக்கும் பட்டுத் துணியை எடுத்து ப்ரியம்வதாவின் தோளின் மேலே போர்த்தி விடுகிறேன். அவள் நன்றியுடன் அதை ஏற்றுக் கொள்கிறாள். வீட்டின் மேல் விதானம் மிகவும் தாழ்ந்திருக்கிறது. உள்ளே புழுக்கம்தான். ஆனால்,

ப்ரியம்வதா விசிறியால் வீசியது என்னை ஆசுவாசப்படுத்துகிறது. வீட்டின் தலைவர் என்னை நோக்கி விரைந்து வருகிறார்.

- 'மகாராணியார் சமூகத்திற்கு நமஸ்காரம். கால தாமதம் ஆனதற்கு மன்னிப்பு கோருகிறோம். தாங்கள் மெதுவாக கொல்லைப்புறம் செல்லலாம். அங்கு வெந்நீர் தயாராக உள்ளது. என் மனைவி தளிகை வேளைகளில் ஈடுபட்டுள்ளாள். சிறிது நேரம் பொறுத்துக் கொள்ள வேண்டும் '.

எழுந்து நின்று, நான் முன் செல்ல, ப்ரியம்வதா பின்தொடருகிறாள். பின்கட்டின் கதவு தாழிடப்படுகிறது. பின்கட்டில், திறந்த கொல்லைப்புற வெளியில் குளிக்கும் இடத்தில் என்னை ஒரு சதுரமான கருங்கல்லின் மேலே அமர்த்துகிறாள் ப்ரியம்வதா, மேலே திறந்த வெளியில் கருமையான ஆகாயம். பின்புறத்தில் சிவன் கோவிலின் கல்லால் ஆன உயரமான மதிற்சுவர்.

நான் அமர்ந்திருக்கும் சதுரமான கருங்கல் சற்று உயரமாகவே உள்ளது. அது அரியணை போலவே உள்ளது. பல காலம் பயன்படுத்தப்பட்டது போலும். மழுமழுவென வழவழப்பாக உள்ளது. உட்கார்ந்ததும், என் அனுமதியுடன் என் மேலாடைகளைக் களைகிறாள் ப்ரியம்வதா. மதுரை தென்மண்டல நாயக்கர் வம்சத்துக்கு மகாராணி என ரத்தின சிம்மாசனத்தில் அமர்ந்திருந்தேன். இன்று பெயர் முகம் தெரியாதவர்கள் வீட்டின் கொல்லைப்புறக் கருங்கல்லில் அமர்ந்திருக்கிறேன். எனக்கு தலைக்கு மேலே விதானமோ, பட்டுத்துணியாலான படர்ந்த மேலாப்பு எதுவும் இல்லை. கொல்லைப்புறமே அரண்மனை. வானமே விதானம். கருங்கல்லே சிம்மாசனம். உடல் சீலையையும் அகற்றுகிறாள் ப்ரியம்வதா. என் மார்க்கச்சைகள் திமிறிக் கொண்டு நிற்கின்றன. பெருத்த வட்டமான மார்புகள் பிரயாணம் செய்த வெப்பத்தால் கொதிக்கின்றன. என்னிடம் பெருமூச்சு எழுகிறது. என் மார்புக் கச்சைகள் தெறித்து விழுந்து விடுவன போல உள்ளன. மீண்டும் என்னிடம் அனுமதி கேட்டு, என் மார்க்கச்சையின் முடிச்சுக்களை நீக்குகிறாள் ப்ரியம்வதா. பருத்த, கனமான கருமுலைகள் திமிறிக் கொண்டு வெளியே வருவது அந்த அரை குறை வெளிச்சத்தில் தெரிகிறது. இருண்ட வானத்தின் கீழே, ஒரு கருங்கல்லில் மேனியில் ஆடை எதுவும் இன்றி நான் அமர்ந்திருக்க,

சுற்றிலும் உள்ள இருளே என் ஆடை. சொக்கநாத நாயக்கர் பற்றிய முலைகள் இவையல்லவா? ரங்க கிருஷ்ணனுக்கு அமுதம் தந்த மார்புகள் இவையல்லவா? அவன் என் மணி வயிறு உதித்த பிள்ளை. பாவம், இருபத்தி இரண்டு வயதில் மஞ்சள் கிழங்கு போன்ற மனைவியை விட்டு விட்டு, மேலுலகத்திற்குப் போயே போய் விட்டான்.

வெந்நீர் ஒரு அண்டாவில் ஊற்றப்பட்டு, இதமான சூட்டிற்காக, குளிர்ந்த நீர் கொண்டு விளாவப்பட்டு, என் மேல் கலசம், கலசமாக ஊற்றப்படுகிறது.

- 'சூடு போதுமானதாக இருக்கிறதா ராணி?' என்று வினவுகிறாள் ப்ரியம்வதா.

இருபத்தி இரண்டு வயதான பெற்ற பிள்ளையைப் பறி கொடுத்து விட்டு, வயிறெரிய, உள்ளம் உடைந்து போய், மூன்று மாதமே ஆன பேரக்குழந்தை விஜயரங்க சொக்கநாதனின் சார்பாக அரியணையில் ஏறி ஆட்சி புரிந்து கொண்டிருந்த எனக்கு , நெருப்பை உருக்கி நீராக என் மேல் ஊற்றினாலும், உடலும் மனமும் தாங்கிக் கொள்ளும்.

மேலும், மேலும், இளஞ்சூட்டில் உள்ள வெந்நீரை எடுத்து தலை வழியே ஊற்றுகிறாள் ப்ரியம்வதா. பரிமள சுகந்த வாசனைப்பொடியை ஒரு கிண்ணத்தில் குழைத்துக் கொண்டு, உடலெங்கும் பூசி விட்டு, கழுத்தை இதமாக நீவி விடுகிறாள். உடம்பில், எலும்பிலும், தசையிலும் தேங்கி நின்ற அசதி கொஞ்சம் கொஞ்சமாய் வெளியேறுகிறது. அவள் என் மேல் சுதந்திரமாகக் கைகளைப் பரவ விட்டு கழுத்தையும், தோள்களையும் இதமாக தடவி, நீவி நீவி வலி நீக்குகிறாள். கன்னத்தின் குழிவுகளில் கைகளால் தேய்த்து அதன் அழுக்கைப் போக்குகிறாள்.

இரு பருத்த மார்புகளையும் இதமாகப் பிசைந்து, பிசைந்து, வாசனைப் பொடியை முலைகளின் மேல் கைகளால் குழைத்துக் குழைத்துத் தேய்த்து விடுகிறாள். அழுந்தி அழுந்தித் தேய்க்கிறாள். இரு கைகளாலும் மார்புகளை முற்றிலும் பற்றிக் கொண்டு, இதமாக

அவைகளைப் பிசைந்து, நன்கு தேய்க்கும் போது மிகவும் சுகமாக அதை உணர்ந்து, என் கண்களை ஆனந்தத்தில் மூடிக் கொள்கிறேன்.

வயிறையும், குழைந்த இடுப்பையும் தடவி விடுகிறாள். கைகளைப் பற்றி, விரல்களின் வழியாக சுளுக்கு எடுக்கிறாள். உடலின் ஒவ்வொரு கணுவிலிருந்தும் வலி வெளியேறுகிறது. இப்போதே இந்த இன்பக்கிளர்ச்சியில் கண்கள் சொக்கிக் கொண்டு வருகிறது.

இளஞ்சூடான வெந்நீர் மீண்டும் என் தலையில் ஊற்றப்படுகிறது. நான் உடலில் பலமிழந்து, மேனியெங்கும் பரவசம் பொங்க, கண்கள் செருகி, அந்த இடத்திலிருந்தபடியே மிகுந்த கிளர்ச்சியடைந்து, காற்றில் மேலே, ஒரு இறகைப் போல மெதுவாய் மிதக்க ஆரம்பிக்கிறேன்…

… தலை துவட்டி முடித்ததும், கூந்தலுக்குச் சாம்பிராணி புகை போடுகிறார்கள். ஒரு மர இருக்கையில் அமர வைத்து விட்டு, கொல்லைப்புறத்துக்கு சடுதியாய் ஓடி, வாழை இலைகளைக் கொய்து வருகிறார் வீட்டின் தலைவர்.

சாப்பிட இருக்கைகள் ஆயத்தம் செய்யப்படவே, அதையெல்லாம் நான் மறுத்து விட்டு, தரையிலேயே அமர்ந்து கொள்கிறேன். ஏதோ அந்த வீட்டிலேயே வாழ வந்த மருமகள் போல. எனக்கும் அந்த வீட்டிற்கும் ஏதோ பூர்வ ஜென்மத்தொடர்பு உள்ளது போலும் ஒரு பிரமை எனக்குத் தட்டுகிறது.

நீண்ட வாழை இலையைத் தரையில் பரப்பி, குளிர்ந்த நீரைத் தெளித்து, சுத்தம் செய்து, காய்கறிகளைப் பரப்பி வைக்கின்றனர். இந்த நள்ளிரவிலும் எப்படி இவர்களால் இப்படி சுடச்சுட சமையல் செய்து பரிமாற இயலுகிறது?! எப்படி இது சாத்தியம்?! சுடச்சுட கறி வகைகள். பூசணிக்காய், வழுதுணங்காய், அவரை, கொடிப்புடலை, சுடச்சுட பொங்கிய சோற்றில் நெய் சேர்த்து, வழுதுணங்காயும், கொண்டைக்கடலையும் இட்ட, சூடான சாம்பார் அதன் மேல் ஊற்றப்பட்டதும், அந்த வீட்டின் கூடம் முழுவதும் திவ்வியமான மணம் பரவுகிறது.

கையால் எடுத்து, கவளம் கவளமாக , சூடாக, சுவையாக அள்ளிச் சாப்பிட வயிறு நிறைகிறது. மனதும் நிறைகிறது. சாப்பிட்டு முடித்ததும் கண்களில் ஜலம் ததும்பி நிற்கிறது. எத்தனை அரண்மனைகள். சேவகர்கள், ஏவலர்கள், சமையற்காரர்கள் இருந்தென்ன! எத்தனை உணவுகள், பால், பழங்கள், பட்சணங்கள் இருந்தென்ன! இப்படி அன்போடும், அனுசரணையோடும் வீட்டின் ஒரு உறுப்பினர் போல நம்மை உபசரித்து, அன்பு செய்து, வெந்நீர் போட்டுக் குளிக்க வைத்து, உடல் வலி போக்கி, சாந்தப்படுத்தி, பிரியமாக அமர வைத்து, அமுது படைத்து, பாசம் பொழிந்த இந்த அந்தணர் யார் ? இவர் குடும்பத்திற்கும் எனக்கும் என்ன பூர்வீக பந்தம்? இவர்கள் என் உறவினரா? நான் பேசும் தெலுங்கு மொழியிலேயே பேசுவதைத் தவிர எனக்கும், இவர்களுக்கும் என்ன தொடர்பு?

இது என்ன என் மேல் இவ்வளவு கரிசனம்? நான் இந்த தேசத்தின் மகாராணி என்பதாலா? அந்த மரியாதையா? அல்லது இராஜ விசுவாசமா?

'எங்கள் வீடு ஏழை வீடு. நாங்கள் தரித்திரர்கள். பரம ஏழைகள். எங்களை மன்னித்து விடுங்கள். மகாராணிக்கு உபசரணை செய்ய எந்தவித யோக்கியதையும் எங்களுக்கு இல்லை'. என்று பணிவாகச் சொல்லியிருக்கலாமே!!

ஆனால், அப்படிச் சொல்லவில்லை. தரித்திரத்தில் உழன்றாலும், இப்படி அதிதி வந்து விட்டார் என்றல்லவா உபசரித்தார்கள்?! இராஜ விசுவாசம் என்பது வேறு. இது வேறு.

- 'அந்தணரே! தங்கள் பெயர்? '
- 'இராம சுப்பையர். '
- 'தங்கள் தொழில் ?'
- இதோ இங்கு உள்ள மடவார்வளாகம் வைத்தியநாதஸ்வாமி கோவிலில் பூஜை செய்யும் அர்ச்சக ஸ்தானீகம். எனக்கு மூன்று பெண் மக்கள். இருவரைத் திருமணம் செய்து கொடுத்து அனுப்பி விட்டேன். கடைசி மகள் ப்ரியம்வதாவை மட்டும்

விவாகம் செய்து கொடுத்து விட்டால் என் கடமை முடிந்தது. என் அண்ணன், அண்ணி, அவர்களது மக்கள் யாவரும் என்னோடு தான் ஒரே வீட்டில் வாழ்கின்றனர். ஒரே தளிகை தான். அவரது பிள்ளைகளையும் நானே ரட்சித்து வருகிறேன் '.

- 'தங்கள் விருந்தோம்பலுக்கு மிக்க நன்றி. தங்கள் குடும்பத்தினர் மிகவும் அன்பானவர்கள். உங்கள் வறுமை விரைவில் நீங்க, அந்த வைத்தியநாதஸ்வாமி துணை புரிவார்'.

இராமசுப்பையர் மகாராணியை நோக்கிப் பணிவுடன் கை குவிக்க, அவரும் பதிலுக்கு மிக மரியாதையாகக் கை குவிக்க, இராணி மங்கம்மாள் மெதுவாக வாசல் நோக்கி நடந்து, வெளியே செல்கிறார்.

இராணி சென்ற வழியை இராம சுப்பையர் பார்த்துக் கொண்டே நிற்க, வாசலில் ஏதோ பேச்சுக்குரல்கள் கேட்கின்றன. மனைவியும், ப்ரியம்வதாவும் இராணி சாப்பிட்ட இடத்தைச் சாணத்தால் மெழுகி, சுத்தம் செய்கின்றனர். ப்ரியம்வதாவை விட இராமசுப்பையரின் மனைவி அலுத்துப் போயிருக்கிறாள்.

குத்துவிளக்கின் தீப ஒளியில் அவர்கள் இராமசுப்பையரைப் பார்க்கின்றனர். 'உபசரிப்பு செய்யும் எங்கள் கடமை முடிந்து விட்டது' என்பதைப் போல. இராமசுப்பையரும் தன் பார்வையினாலேயே அவர்களுக்கு நன்றி சொல்கிறார்.

வீட்டினுள் கால் தடங்கள் நடக்கும் சப்தம் மீண்டும் வருகிறது. இப்போது இராணி மங்கம்மாள் முன் வர, அவர் பின்னே ஒருவர் மூடிய தட்டைக் கையில் ஏந்தி வருகிறார். இராணி, இராமசுப்பையர் முன் வந்து நின்று, திவானை நோக்கிக் கை காட்ட, அவர் மூடிய தட்டின் மேல் உள்ள துணியை விலக்க, அந்த இருளிலும் தட்டு நிரம்ப இருக்கும் பொற்காசுகள் தீபவொளியில் மின்னுகின்றன. இராம சுப்பையர் திகைத்துப் போய் நிற்கிறார்.

- 'அந்தணரே! தங்கள் வறுமை நிலை அறிந்தோம். ஏதோ இந்த ஏழையால் இயன்ற அளவு இதைத்தங்களுக்குத் தருகிறோம். மறக்காது ஏற்றுக் கொள்ளவும். அருகில் உள்ள வைத்தியநாஸ்வாமி கோவிலில் ஆறு கால பூஜையைத்தாங்களும், தங்கள் சகோதரரும், குறைவற, சந்ததி சந்ததியாய் நடத்தித் தருமாறு தங்களை வேண்டிக் கேட்டுக் கொள்கிறோம். தங்கள் வீட்டை இடித்துப் புதிதாகக் கட்டிக் கொள்ள, என்னால் இயன்ற சிறு உதவி. இராணி மங்கம்மாள் தன் கழுத்தில் இருந்த மரகதமணி மாலையைக் கழற்றி, இராமசுப்பையரிடம் கொடுக்க, அதை அவர் கண்ணீர்ப்பெருக்கோடு பெற்றுக் கொள்கிறார்.

- 'அய்யா, சிவன் கோவில் பூஜைகள் ஆகம நெறியோடு நடைபெற தங்களுக்கு, இக்கோவிலை ஒட்டியுள்ள பெரியகுளம் கண்மாய்ப் பாசனத்திற்குட்பட்ட நஞ்சை நிலம் இருபது வேலி விஸ்தீரணத்தை, குடிவாரமாகத் தருகிறோம்.

- 'திவான்! நம் இராஜ்யத்திற்குட்பட்ட ஸ்ரீவில்லிபுத்தூர் பிரதேசத்தில், இங்கு இருபது வேலி நிலத்தை இந்த இராமசுப்பையர் பெயருக்குக் குடிவாரமாக நாம் தந்ததாக தாமிரப்பட்டயம் ஒன்றைப் பொறித்து, உடனே எடுத்து வாரும். '

- 'அய்யா, தங்கள் அன்பையும், விருந்தோம்பலையும் கண்டு பெரிதும் மகிழ்ந்தோம். தாங்கள் விருப்பப்பட்டால், மதுரைக்கு வரும்போது, என்னை வந்து அரண்மனையில் சந்திக்கலாம். அதற்கு இந்த முத்திரை மோதிரத்தை அடையாளமாகப் பயன்படுத்திக் கொள்ளுங்கள். இது உங்களுக்குப் பெரிதும் உதவும். இதையும் பெற்றுக் கொள்ளுங்கள். ப்ரியம்வதா! அம்மா, உங்கள் இருவரின் அன்பிற்கு நான் எப்படிக்கடன் தீர்ப்பேன்? அவசியம் மதுரை வந்து என்னைப் பாருங்கள். அம்மா, ப்ரியம்வதாவிற்குத் திருமணம் நடத்த ஏற்பாடு செய்தால், அந்தச்சமயம் எனக்குத் தகவல் சொல்லியனுப்புங்கள். அதற்கும் ஏதாவது என் பங்கிற்குச்

செய்தாக வேண்டும். ப்ரியம்வதா! விரைவில் விவாகம் செய்து கொண்டு, நீ புருஷன், மக்களோடு நல்லபடியாக வாழ வேண்டும் அம்மா'.

ப்ரியம்வதா, தாரை தாரையாய்க் கண்ணீர் விட்டவள், உணர்ச்சி மேலீட்டால், இராணியின் கைகளைப் பற்றிக் கொள்ள, இராணியோ, அவளைக் கட்டித்தழுவிக் கொண்டு விடுகிறாள். இராணியின் உதடுகளில் முத்தங்கள் பெறுகிறாள் ப்ரியம்வதா. இருவரது ஆடைகளையும் கண்ணீர் நனைக்கிறது.

பிரிய மனம் இல்லாமல் பிரிந்து, ப்ரியம்வதாவிடமும், இராமசுப்பையரின் குடும்பத்தினரிடமும் விடைபெற்று, அந்தச்சிறு வீட்டின் வாசல் வழியாக மெதுவாக வெளியே வரும் இராணி மங்கம்மாள் தலை நிமிர்ந்து, கருநீல வானத்தைப் பார்க்க, அங்கே வடக்கே, உயரே, பிரகாசமான துருவ நட்சத்திரம் அவளைப் பார்த்துக் கண் சிமிட்டிச்சிரித்து நிற்கிறது.

---------------

**தளிகை** –-- சமையல்

**குடிவாரம்** --- ஏதாவது ஒரு குறிப்பிட்ட பணி அல்லது வேலையைச்
செய்யும்படி ஒரு நிபந்தனையுடன் தரப்படும் நிலம்.

------------------------------

# 8. ஸ்வாமி

**'என் நேசர் வெண்மையும் சிவப்புமானவர்,**
**பதினாயிரம் பேர்களில் சிறந்தவர். '**

**- உன்னதப்பாட்டு 5 : 10**

**'அவருடைய சிரசும் மயிரும் வெண் பஞ்சைப் போலவும் உறைந்த மழையைப் போலவும் வெண்மையாயிருந்தது. அவருடைய கண்கள் அக்கினி ஜுவாலையைப் போலிருந்தது.**

**அவருடைய பாதங்கள் உலைக்களத்தில் காய்ந்த பிரகாசமான வெண்கலம் போலிருந்தது. அவருடைய சத்தம் பெருவெள்ளத்து இரைச்சலைப் போலிருந்தது. '**

**--- வெளிப்படுத்தின விசேஷம் 1 : 14, 15**

**'நம்முடைய தேவனாகிய கர்த்தரை நாம் தொழுது கொள்ளுகிறபோதெல்லாம், அவர் நமக்குச் சமீபமாயிருக்கிறது போல, தேவனை இவ்வளவு சமீபமாய்ப் பெற்றிருக்கிற வேறே பெரிய ஜாதி எது?'**

**- உபாகமம் 4 : 7**

- --------------------------------------

இன்னொரு புதிய திவசத்தின் புலருகின்ற அதிகாலையின் முதல் கீற்று வெளிச்சம், கொல்லைப்புறத்தில் உள்ள அவரைக்கொடிகளின் மேல் படர்ந்து, மலர்ந்த சிறிய அவரைப் புஷ்பங்களின் ஒளியிலும், சி.எம்.எஸ். பள்ளி தெருக்கம்பத்திலிருந்து கசிந்து வந்த விளக்கு வெளிச்சத்தின் பிசிறுகளையும் பார்த்தபடி கண் விழித்தாள் தோத்திர மேரி.

நைட்டியை எடுத்து முழங்கால் வரை வழித்துக்கட்டிக் கொண்டு, கொல்லைப்புறத்திற்குப் போனவள், மேற்குத்தொடர்ச்சி மலையின் உச்சி முகடுகளில் இளஞ்சாம்பல் வர்ணத்தில் வானம் தெரிவதையும், அதன் நீண்ட மலைத்தொடர்ச்சியின் உச்சி விளிம்புகள், இடைவெளியின்றியும் ஒரே வரிசையாய், ஏற்ற இறக்கங்களோடு இருந்த அந்த மலைகளில் கருமை

அப்பியிருந்ததையும் பார்த்தாள். மேகம் இளநீலத்தில் வெளிறிப் போயிருந்தது.

பல்பொடியை எடுத்துக் கொண்டு வலது விரலால் முன்னும் பின்னும் தேய்த்துக் கொண்டிருந்தபோது, சீனியாபுரத்தின் மொத்தப் பின்புலப்பரப்பையும் அந்த மேற்குத்தொடர்ச்சி மலையே ஆக்கிரமித்திருந்தது தெரிய வந்தது. நீண்ட பரப்பும், விரிவும், அழகும் கொண்ட மலைத்தொடர்களைப் பார்த்து விழிகள் விரிந்த தோத்திர மேரிக்கு 'சீயோன் மலையிலிருந்து கர்த்தர் உங்களை ஆசீர்வதிப்பார் ' என்ற வசனம் ஞாபகத்துக்கு வந்தது.

தோத்திர மேரிக்குப் பிடிக்காத இரண்டு விஷயங்கள், குடித்துவிட்டுப் பின்னிரவில் வந்து கதவைத் தட்டும் ஆண்கள், ஒரு கையில் பைபிளை வைத்துக் கொண்டு, மறு கையில் கத்தியைத் தூக்கும் ஆசாமிகள்.

தோத்திர மேரியின் சீனியாபுரம் திருச்சபையில் இந்த இரண்டு வித ஆட்களுக்கும் பஞ்சமே இல்லை. சாயங்காலமானதும், கைலி கட்டிக்கொண்டு சீனியாபுரம் மக்கள் மெதுவாக நகர்ந்து, தெருவை விட்டு வெளியேறி, திருமுக்குளம் தெப்பக்குளத்தைக் கடந்து, ஊருக்குள் போய், பஸ் ஸ்டாண்டு அருகில் நின்று கொண்டு, குடித்து விட்டு, புரோட்டா பொட்டலங்களோடு பின்னிரவில் வீடுகளுக்குத் திரும்புவார்கள். நள்ளிரவிலும், அதற்குப்பின்பும், சீனியாபுரத்தின் தெருக்கள் எங்கும் சண்டையும், சலம்பலும் தான். எல்லா ரகளைகளையும், முடித்து விட்டு, ஆண்கள் கயித்துக் கட்டிலில் படுத்து உறங்குவது தெருவின் ஓரத்தில் தான்.

தோத்திர மேரி வாயைக் கொப்பளித்துத் துப்பும் போது, தலை உயர்த்திப் பார்க்க, சீனியாபுரத்தின் செம்மண் வீதிகள் எங்கும் ஆண்களும், குழந்தைகளும் சுருண்டு படுத்துக் கொண்டு தூங்குவது தெரிந்தது.

முகம் கழுவிய தோத்திர மேரி, சுவரில் இருந்த மேரியின் படத்தின் முன்பு நின்றாள். ஒரு நீண்ட மெழுகுவர்த்தியை எடுத்து, அதை ஸ்டாண்டில் பொருத்தி, தீக்குச்சியைக் கிழித்து, அதை எரிய விட்டாள். தலையை மேலெடுத்துப் பார்க்க, சுவரில் மேரியும்,

அவளருகே ஏசுவும் ஒளிவிட்டபடி தெரிந்தனர். தன் கைகளை எடுத்து நெஞ்சிற்குக்கீழும், மார்புக்குக் குறுக்காகவும் காற்றில் சிலுவை போட்ட தோத்திர மேரி 'அநாதி தேவனே எனக்கு அடைக்கலம் ' என்று முணுமுணுத்தாள். மீண்டும் ஒரு தடவை சிலுவைக்குறி போட்ட தோத்திர மேரி, யதேச்சையாக ஜன்னலுக்கு வெளியே பார்த்தாள். ஃபாரஸ்ட் ரேஞ்சர் ஆபீஸ் அருகே குட்டைப்பாலத்தின் மேல் ஒரு ஆள் உட்கார்ந்திருந்தான். நீண்ட சிவப்பு அங்கி அணிந்திருந்த ஆளின் தலைமுடி வெள்ளை வெளேரென்று இருந்தது. அந்த ஆளின் பார்வை சாலையின் மீது நிலை குத்தியிருந்தது.

'இந்தக் காலை நேரத்தில் இங்கு வந்திருக்கும் இந்த ஆள் யார்? பரதேசி போலத் தெரிகிறானே! பிச்சை எடுக்கும் பரதேசியோ? சீனியாபுரம் முழுக்க பரதேசிகள் தான். கழுத்தில் சிலுவை அணிந்த பரதேசிகள்.

மற்ற பிச்சைக்காரர்களுக்கும் இவர்களுக்கும் அதிக வித்தியாசமில்லை. சீனியாபுரத்து பரதேசிகள் எல்லோருமே கூலி செய்பவர்கள் தான். பிச்சை எடுக்க ஊருக்குள்ளிருந்து இங்கு வரும் விபூதி அணிந்த சாமியார் பரதேசிகளுக்கும், இவர்களுக்கும் அதிக வித்தியாசமில்லை. ஆனாலும், குட்டைப்பாலத்தின் மேல் உட்கார்ந்திருக்கும் இந்த பரதேசியின் கையில் திருவோடு எதுவும் இல்லை. அந்த ஆளின் அங்கி சிவப்பு நிறத்தில் நீண்டு தொங்குகிறது.

தலையைத் திருப்பி, வீட்டுக்கு வெளியே தோத்திர மேரி பார்க்க, அங்கே வீட்டு வாசல் படிகளுக்கு அருகே கயித்துக் கட்டிலில் சுருண்டு படுத்திருக்கும் புருஷன் ஆண்டனி ஆசீர்வாதம். பகல் முழுக்க வேலை செய்து வேர்வை சிந்தி விட்டு வருவான். எந்த வேலை என்று குறிப்பிட்டுச் சொல்ல முடியாதபடி எல்லா வேலையும் செய்யத் தெரியும். வீட்டுக்குழாய் ரிப்பேர் வேலை, எலக்டிரிக்கல் வேலை, தச்சு வேலை, புதுக்கட்டிடம் கட்டும் இடத்தில் சித்தாள் வேலை. வெள்ளையடிப்பது, பெயிண்ட் அடிப்பது, அச்சாபீசில் கட்டிங் மிஷின் ஓட்டுவது, இப்படி சகல வேலைகளும் அவனுக்கு அத்துபடி, சில்லரை வேலைகள் என்று எல்லாமே தெரியும். இருந்தாலும் பெயிண்டர் ஆண்டனி என்று சொன்னால் தான் ஊருக்குள் தெரியும். வேலை செய்து விட்டு வரும்போது சில நாட்கள் குடித்து விட்டு வருவான்.

'இன்னிக்கு ரொம்ப வேலை மேரி. ஆண்டாள் கோவில் மாட வீதியில ஒரு வீட்டுல ஆஸ்பெட்டாஸ் கூரை மாத்துற வேலை. பழைய

தகர ஷீட்டு எல்லாத்தையும் கழட்டிட்டு, புதுசா ஆஸ்பெட்டாஸ் ஷீட் போடச்சொன்னாங்க. சாப்பாடு, காபி எல்லாம் கொடுத்தாரு அந்த வீட்டு அய்யரு. காலைல வேலைய ஆரம்பிச்சேன். நானே நாடார் கடைக்குப் போயி, பனஞ்சட்டமும், ஆஸ்பெட்டாஸ் ஷீட்டும் வாங்கிட்டு வந்து பொருத்தினேன். வேலை முடிச்ச போது, அய்யர் கேட்டாரு 'உனக்கு எவ்வளவுப்பா?' ன்னு. ‘நான் முந்நூறு ரூவா சாமி' ன்னேன் 'இந்தா பிடி நானூறு. நன்னா ஷீட் பொருத்திருக்கே'ன்னார்.

சம்பளத்தை வாங்கிட்டு வர்ற வழியில கணபதி தியேட்டர் பக்கமா வந்தேன். சாராயக்கடையைப் பார்த்தேன். உடம்பு நோவு எடுக்குதுன்னு சொல்லிட்டு ஒரு ரவுண்டு விட்டேன். அவ்வளவுதான். ஒரு கிளாஸ் தான். அதுக்கு மேல கிடையாது' அது ஏதோ நம்பர் டூ சரக்கு போல. குடலைச் சுழிச்சுக்கிட்டு வலிக்குது. ஒரு கிளாஸ் தான். உனக்குத் தெரியாம நான் குடிப்பேனா என் ராசாத்தி?’ என்பான் ஆண்டனி ஆசீர்வாதம்.

குடித்து விட்டு வரும் அவளது புருஷன் ஆண்டனியை ஒரு விதத்தில் சகித்துக் கொள்ளலாம். ஆண்டனி, அவளைத் திட்டியதில்லை. என்ன சமைத்துப் போட்டாலும் வாய் பேசாமல் சாப்பிட்டு விட்டு, வேலைக்குப் புறப்பட்டுப் போய் விடுவான்.

சில நாட்கள் அவனுக்கு வேலை கிடைக்காது. அந்த மாதிரி சந்தர்ப்பங்களில் தான் தோத்திர மேரிக்குக் கஷ்டம். என்ன செய்வது என்று தெரியாமல் கையைப் பிசைந்து கொண்டு இருப்பாள். ஆனால் ஆண்டனியோ வெகு சாமர்த்தியசாலி. சைக்கிளை எடுத்து மிதித்துக் கொணடு, மம்சாபுரம், இடையங்குளம் அல்லது பொன்னாங்கண்ணி கிராமத்துப் பக்கம் போய் விடுவான். எங்காவது கரும்பு ஆலை ஓடிக் கொண்டிருந்தால், அங்கே போய் ஏதாவது வேலை கேட்பான்.

கரும்பு ஆலையில் ஏதாவது வேலை கிடைக்கும். ஆண்டனி குடித்து விட்டு வந்தாலும், நிதானம் தவறியதாக அவளுக்கு நினைவில்லை. இந்தச்சீனியாபுரத்தில் குடிக்காதவர்கள் எண்ணிக்கை தான் குறைவு. அதிகாலையில் மக்கள் குடிப்பதில்லை. வேலை செய்து விட்டுத் திரும்பும் போது குடிப்பவர்கள் அதிகம்…

ஜன்னல் வழியே பார்த்ததில், இன்னமும் அந்த சிவப்பு அங்கி பரதேசி குட்டைப் பாலத்தில் தான் உட்கார்ந்திருந்தான். பார்வை

அங்குமிங்குமாக செண்பகத்தோப்பு சாலையில் போவோர் வருவோரைப் பார்த்துக் கொண்டிருந்தது. இவன் பரதேசியா அல்லது திருடனா? சீனியாபுரம், கோட்டைப்பட்டி கிராமங்களில் திருட்டுக்குப் பஞ்சமேயில்லை. அசந்தால், ஆளையே கடத்திக் கொண்டு போய் விற்று விடுவார்கள். தெரு விளக்குக் கம்பத்தில் ஏறி டியூப் லைட்டைக் கழட்டிக் களவாடுபவர்களைப பற்றி என்ன சொல்ல?!

சிவப்பு அங்கி பரதேசியின் தலைமுடி வெள்ளை வெளேர் என்று புது வீட்டுக்குச் சுண்ணாம்பு அடித்தது மாதிரி இருந்தது. தலையில் ஏதோ ஐஸ்க்ரீமை கொட்டிக் கவிழ்த்தது போலத் தெரிகிறது. இந்த ஆளுக்கு இங்கே என்ன வேலை? அதுவும் இந்த அதிகாலையில்... இவன் இங்கே வந்த சோலி என்ன? தோத்திர மேரி அந்த நீள சிவப்பு அங்கி பரதேசியைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்த போது, வீட்டு வாசலில் கூழைக்கம்பில் கட்டியிருந்த செம்மறி ஆடு 'மே' என்று கனைத்தபடி புளுக்கையும், மூத்திரமும் பெய்தது.

ஆண்டனி படுத்திருந்த கயித்துக் கட்டிலை வாயால் நக்கியது. செம்மறியின் புளுக்கை நாற்றத்தில் கண் விழித்த ஆண்டனி 'ச்சே... தூரப்போ... மனுசனை நிம்மதியாத் தூங்க வுடுறியா? சும்மா 'மே மே'ன்னு மொணங்கிக்கிட்டு. சுத்த நச்சரிப்பாப் போச்சு. இரு... இரு... இந்த பஸ்கா பண்டிகை வரட்டும்... ஃபாதர் கிட்டச் சொல்லி உன்னை பலி கொடுத்துர வேண்டியது தான் ' என்று சலித்தபடி புரண்டு படுத்துக் கொண்டான் ஆண்டனி ஆசீர்வாதம் தாஸ்...

... செம்மண், கருங்கல் கப்பி சாலையில் தன் பைக்கைத் திருப்பி, பிறகு அதில் வேகம் கூட்டி, சீனியாபுரத்தில், குறுக்காக வெட்டி நிற்கும் அந்தச் சாலையின் ஓரத்தில் பைக்கின் வேகத்தைக் குறைத்த ஃபாதர் சிரியன் பெர்னாண்டோ, பைக்கை விட்டுக் கீழே இறங்கி, அதைச் சாலையோரமாக ஸ்டாண்டு போட்டு நிறுத்தி விட்டு, தன் நீள வெள்ளை அங்கியைச் சரி செய்து கொண்டார்.

வலது கையில் பைபிளையும், பைக்கின் சாவியையும், எடுத்துக் கொண்டு, சில தப்படிகள் நடந்த போது, வலதுபக்கம் யதேச்சையாகத் தலையைத் திருப்பிப் பார்க்க, அங்கு தூரத்தில் இருந்த குட்டைப்பாலத்தின் சுவர் மேலே இருந்த நீண்ட சிவப்பு அங்கி போட்டிருந்த அந்தப் பரதேசியைப் பார்த்தார்.

நீண்டு வாரப்படாத தலைமுடி வெள்ளையாய் இருந்தது. அநேகமாக அந்தத் தலை மீது சவரகனின் கத்தி பட்டிருக்க வாய்ப்பே இல்லை.

'யாரிந்த ஆள்? இந்த வட்டாரத்தில் புது ஆள் மாதிரி தெரிகிறதே! நமது சபையைச் சேர்ந்த ஆள் மாதிரியும் தெரியவில்லை. இவன் ஏதோ வேற ஊர்க்காரன் ', என்று எண்ணினார். ஃபாதர் சிரியன் பெர்னாண்டோ. அவருக்கு அந்தத் திருச்சபையின் ஆட்கள் எல்லாரையும் அடையாளம் தெரியும். ஆளைப் பார்த்ததுமே சொல்லி விடுவார், இவன் சீனியாபுரம். இவன் ரைட்டன்பட்டி. இவன் சந்தைப்பேட்டைத்தெரு என்று இடத்துப் பேர் சொல்லி அடையாளம் காட்டுவார். சிலருடைய பெயரும் அவருக்குத் தெரியும். தன் ஆடுகளைத் தெரிந்து கொள்ளாத மேய்ப்பன் யாராவது உண்டா?

சிவப்பு அங்கி பரதேசியைப் பார்த்த ஃபாதர் சிரியன், பிறகு உதட்டைப் பிதுக்கிக்கொண்டு, தலையைத் திருப்பி, நேரே நடந்து போய், தன் முன்னே இருந்த மேரி ஆலயத்தின் வாசல்புற இரும்புக்கதவின் நாதாங்கியை நீக்கியபடி உள்ளே நுழைந்தார்.

மேரி ஆலயம் என்பதை ஆலயம் என்று சொல்ல முடியாது. அது ஒரு சின்ன ஷெட். தகரக்கூரை போட்ட எட்டுக்கு எட்டு சிமிண்ட் தளம். அதன் மேற்கு மூலையில் மேரி மாதாவின் வண்ண ஃபோட்டோ. ஃபோட்டோவிற்கு மேலே ஒரு விடி விளக்கு ஸீரோ வாட்ஸ் பல்பு எப்போதும் ஒளி வீசிக் கொண்டிருக்கும். இந்த இடுக்கத்துக்குள் நின்று கொண்டு ஆராதனை பண்ண முடியாது. எட்டுக்கு எட்டு இடத்தில் நாலு பேர் நிற்கலாம். ஆறு பேர் நிற்கலாம். ஆறு பேர் நின்றால் ஃபாதர் வெளியே வந்து விட வேண்டியது தான். இதைத்தான் சீனியாபுரத்து ஆலயம் என்று இத்தனை வருஷங்களாகச் சொல்லிக் கொண்டு அந்த அப்பாவி அருந்ததியர்களை ஏமாற்றி வந்தாகி விட்டது.

மேரி 'ஆலயத்துக்குள் ' விளையாடிக் கொண்டிருந்த ஒன்றிரண்டு சட்டை போடாத சின்னப்பையன்களை ஃபாதர் துரத்துகிறார். 'ஓடு, ஓடு. கோவிலுக்குள் விளையாடாதே! வெளிய போய் நில்லு. சர்வீஸ் ஆரம்பிக்கப் போறேன்! ' என்றபடி முன்னே இருக்கும் செம்மண் கப்பி சாலையில் மெதுவாக நகர்ந்து சீனியாபுரத்தின்

வடக்குத்தெருவின் பாதையில் போகிறார். அந்த வீதியின் இரு புறமும், அரைகுறையாகக் கட்டி முடிக்கப்பட்ட வீடுகள். பல வீடுகளுக்கு ஆஸ்பெட்டாஸ் கூரை தான். பல வீடுகள் அரசாங்கம் இனாமாகக் கொடுத்தது. பல வீடுகளில் வெளி சிமெண்ட் பூச்சு கிடையாது.

அவ்வீதியின் இடது புறம் முதலாவதாக இருந்த வீட்டின் முன்பு நின்ற ∴பாதர் சிரியன் பெர்னாண்டோ, 'சூசை, ∴பாதர் வந்துருக்கேன். வந்து மேசையை எடுத்துப் போடு!' என்றார்.

வீட்டுக்குள்ளிருந்து சூசை வெளியே ஓடி வந்தான். அவன் கண்களில் முந்தின நாள் இரவு குடித்த சாராயத்தின் வாடை இன்னமும், அவனை விட்டுப்போகாதபடி, இரண்டு நாட்களாக சேர்த்து வைத்திருந்த சோர்வு அவனைக் கண் சொக்க வைத்தது. அவன் முகத்திலேயே உடலின் எல்லாச் சோர்வும் தெரிந்தது.

- '∴பாதர், தோத்திரம். இவ்வளவு சீக்கிரமே, வந்துட்டீங்களா? இன்னிக்கு ஞாயித்துக்கிழமைங்கறது மறந்து போச்சு! மன்னிச்சுக்குங்க ∴பாதர் என்கிறான் சூசை.

- ‘ஞாயிற்றுக்கிழமை எப்படி ஞாபகத்துல இருக்கும்? ஏம்ப்பா ராத்திரியானா டவுனுக்குள்ள போய்டுற. வர்றபோது ஒரு சப்பட்டை பாட்டிலை வாங்கிட்டு வந்திர்ற! ராத்திரி முழுக்கக் குடியும், கும்மாளமும் தான். பெறகு எப்படி ஆண்டவர் கிட்ட மனசு போகும்? ' சூசையைக் கண்டித்தபடியே, அவனிடமிருந்த மேஜையை வாங்கிக் கொண்டார் ∴பாதர் பெர்னாண்டோ.

- 'இத யாராவது தூக்கிக்கொண்டு போய் அங்க தெரு முக்குல போடுங்கப்பா!'

∴பாதரின் கட்டளையைக் கேட்ட நான்கைந்து சிறுவர்கள், 'தோத்திரம் ∴பாதர், நான் கொண்டு போய்ப் போடுறேன் ∴பாதர்! ' என்று, நான் நீ என முந்திக்கொண்டு அந்த மேஜையைச் சேர்ந்து தூக்குகின்றனர்.

ஐந்து பேர் சேர்ந்து தூக்கியதும், அந்தச் சின்ன மேஜை வெகு இலகுவாக அவர்களுக்குச் சுமையே இல்லாதது மாதிரி ஆகி விட்டது.

'ஹையா ஜாலி!' என்கிறான் சிறுவன் ஒருவன். மேஜை அந்தத் தெருவின் முனைக்குப் புறப்பட்டுப் போனது. அதன் பின்னே அந்த நாற்காலி போனது.

மேஜை, நாற்காலிக்கு ஏற்பாடு செய்ததும், ∴பாதர் சூசையிடம் 'சூசை, நான் இன்னும் பத்து நிமிசத்துல சர்வீஸை ஆரம்பிச்சுருவேன்! நீ தான் வீடு வீடாப் போயி எல்லாரையும் வரச் சொல்லணும்! என்கிறார் ' ∴பாதர் பெர்னாண்டோ.

இது வாரா வாரம் நடக்கும் சடங்கு தான். தேவ ஆராதனைக்குப் பயன்படும் மேஜை, நாற்காலி சூசை வீட்டிலிருந்து தான் வரும். கொஞ்ச நேரம் கழித்து, மேஜையை மூட ஒரு வெள்ளை லேஸ் ஒன்றை எடுத்துக் கொண்டு வருவாள். சூசையின் பெஞ்சாதி தெரேசம்மாள்.

சர்வீஸ் ஆரம்பிக்கும் முன் ஒரு பெரிய டம்ளரில் நிறைய சூடான கருப்பட்டி போட்ட டீ வரும். ∴பாதர் தொண்டையை நனைத்துக் கொண்ட பிறகு தான் ஆராதனையை ஆரம்பிப்பார். வீதியின் இருபுறங்களிலும் உள்ள வீடுகள் ஒவ்வொன்றாகப் போய், ஞாயித்துக்கிழமை ஆராதனைக்காக அவர்களை வரச்சொல்லி வருந்தியழைப்பான் சூசை.

எல்லா வீடுகளுக்கும் போய், 'வா, வா… சர்வீஸ் ஆரம்பிக்கப் போறாரு ∴பாதர் ' என்று கூப்பிட்டான் சூசை…

அந்த மர மேஜையும், அதன் பின்னே இருக்கும் நாற்காலியும் தான் பலி பீடம். இந்த மேஜையின் மேல் திருவிருந்துக்கான வெள்ளை அப்பம் ஒரு உயர்ந்த கிண்ணத்தில் இருக்கும்.

குறுகலான வீதி, மையச் சாலையைச் சந்திக்கும் இடத்தில் அந்த மேஜைக்குப் பக்கவாட்டில் நின்று கொண்டு ∴பாதர் பொனாண்டோ ஞாயித்துக்கிழமை ஆராதனையை ஆரம்பிக்கிறார். அவர் முன்னே நீண்ட செம்மண் வீதியின் இருபுறமும் இரட்டை வரிசையாக நிற்கும் சீனியாபுரத்து ஆடுகள் தங்கள் மேய்ப்பனின் சத்தத்துக்குச் செவி கொடுக்க ஆரம்பிக்கின்றன. திருச்சபையின் விசுவாசிகள் பலரும் இன்னும் பல் வெளக்கவில்லை. பல பேர் அரைத்தூக்கத்திலும், பல பேர் தலை கூட வாராமல், முடி கலைந்த

தோற்றத்திலும், அலங்கோலமாய் நிற்கின்றனர். பெண்கள் தலை மேலே முக்காடிட்டபடி தலை கவிழ்ந்தும், தங்கள் வலது கை விரல்களால் கண்களின் இமைகளை மூடியபடி பாவ மன்னிப்புக் கோரி ஜெபம் பண்ணுகின்றனர்.

ஆராதனையை ஆரம்பித்த ஃபாதர் பெர்னாண்டோ, தன்னையே இரு கண்கள் உற்று, உற்றுப் பார்ப்பதையும், அந்தப் பார்வையின் வெப்ப வீச்சைத் தாங்கிக் கொள்ள மாட்டாதவராய், தன் வலது பக்கம் தலையைத் திருப்ப, அந்தச் சிவப்பு அங்கியும், நீண்ட சடை முடியும் கொண்ட ஆள், அங்கு மேரி மாதா ஆலயத்தின் நிழலில், தனக்கு சமீபமாய் நின்று கொண்டிருப்பதைப் பார்க்கிறார்.

இப்போது அந்த ஆளின் உருவம் தெளிவாய்த் தெரிகிறது. அவனது பார்வை தன்னையே ஊடுருவதைப் பார்த்த ஃபாதர் பெர்னாண்டோ, அதன் கூர்மையைத் தாங்க மாட்டாதவராய், தன் மனசு உறுத்தப்படுவதாக உணர்கிறார். பெர்னாண்டோவின் வார்த்தைகள், தொண்டைக்குழியிலிருந்து திக்கித் திணறித்தான் வெளியே வருகின்றன.

'... ஆகவே, எனக்கு அன்பான தேவப்பிள்ளைகளே! நம்மை உண்டாக்கின கர்த்தரே பர தத்துவம். அவரே மெய்த்தேவனும், நித்திய ஜீவனுமாயிருக்கிறார். அவரே நம் நித்திய கன்மலை. இஸ்ரவேலின் மேல் கண்ணோக்கமாய் இருக்கற கர்த்தர் நம் பலத்த துருக்கமும், கேடகமுமானவர். எனவே, நம் கர்த்தராகிய ஸ்வாமியின் பத்துக் கட்டளைகளுக்குச் செவி கொடுங்கள். அவரே நம் ரட்சகர். தரித்திரருக்குச் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கவே நான் உலகிற்கு வந்தேன் என்று எம்பெருமான் திருவுள்ளம் பற்றிச் சொன்னார். அவரை அறிவதே நித்திய ஜீவன். அவரைச்சேவிப்பதே மெய் சுவாதீனம். எனக்கு அன்பான தேவ பிள்ளைகளே! நம் ஒரே தேசிகனாகிய கர்த்தரின் சித்தத்தைப் பற்றுங்கள்... '

வானமே கூரையாக, அதன் கீழ் உள்ள நீண்ட சீனியாபுரம் செம்மண் சாலை மீது நின்று கொண்டு, அக்கிராம மக்களுக்கு ஸ்வாமி அருளிய தேவ வசனங்களைக் குறித்து விலாவாரியாகப்பிரசங்கிக்கிறார் ஃபாதர் பெர்னாண்டோ.

பிரசங்கத்தின் போது, அவரது கண்கள் ஒவ்வொரு ஆளின் மீதும் படிகிறது. அவர் முன்பாக அமர்ந்திருக்கும் சீனியாபுரம் தேவ ஜனம், வயது முதுமையால் வீட்டுக்கு வெளியே நாற்காலிகளில் அமர வைக்கப்பட்ட முதியவர்கள். அரை டிராயர் மட்டுமே போட்டுக் கொண்டு குறுக்கும், நெடுக்கும் கண்ணாமூச்சி விளையாடும் விடலைகள்.

பிரசங்கத்தின் போது, பெர்னாண்டோவின் கண்கள் ஆண்டனி ஆசிர்வாதத்தின் மீதும், அவனருகே தலை முக்காடிட்டிருக்கும் தோத்திர மேரி மேலும் படிகிறது. ∴பாதரின் பார்வை தன் மீது படிவதைப் பார்க்கும் தோத்திர மேரி, அவரை நோக்கி, கைகளைக் கூப்பி, வார்த்தைகளின்றி மௌன ஸ்தோத்திரம் ஒன்றை உதடுகளால் சொல்கிறாள்.

மர மேஜைக்குப் பக்கத்தில் நிற்கும் ∴பாதர், தன் கைகளை மார்புக்குக் குறுக்கும், நெடுக்குமாகக் காட்டி, 'மகளே! உனக்கு என் சம்பூர்ண ஆசீர்வாதம் ' என்று சைகையால் சொல்லுகிறார்.

தோத்திர மேரியின் கண்கள் திரும்பிப் பார்க்க, மேரியின் ஆலயத்திற்கு வெளியே நிற்கும் சிவப்பு அங்கி பரதேசியின் மேல் அவளது பார்வை விழுகிறது. அந்தப் பரதேசி திரும்பி, தோத்திர மேரியைப் பார்த்து கண் நோக்கி, மெல்லிய புன்னகை பூக்கிறார்.

தன் இரு கைளை மார்புக்குப் பக்கத்தில் விரித்துக் காட்டி ஆசீர்வாதம் பண்ணுகிறார். தோத்திர மேரிக்கு உடலில் மின்சாரம் பாய்ந்தது போல உணர்வு. உடல் துள்ளுகிறது. உள்ளே நாடி, நரம்புகள் எல்லாம் ஒரு துள்ளு துள்ளி பளீர் என மனதில் மின்னல் வெட்டுகிறது. கண்கள் செருகி தன் வயமிழந்து, அவளது கால்கள் நிலத்தில் ஊன்ற முடியாமல் ஒரு கணம் தள்ளாடி, உடல் சமச்சீர் இழந்து, நின்ற இடத்திலேயே தோத்திர மேரி ஆடுகிறாள்.

தன் கண் முன்னே நிற்கும் தோத்திர மேரி, சிவப்பு அங்கி பரதேசியைப் பார்த்த பிறகு, உடல் சிலிர்த்து கண் மயங்குதைப் பார்க்கும் ∴பாதர் பெர்னாண்டோ என்ன நடந்தது என்பதைப் புரிந்து கொள்ள, தோத்திர மேரியின் பார்வை எதன் மேல் விழுகிறது என்று அவளது விழியின் நோக்கத்தைப் பார்க்க, அங்கே மேரியின் தேவாலயத்திற்கு வெளியே நிற்கும் சிவப்பு அங்கி பரதேசி, தன்

தலையை வேறு பக்கமாகத் திருப்பி, மேற்குப் புறச்சுவரில் தொங்கும் மேரி மாதாவைப் பார்த்துப் பணிவாக வணங்குகிறார்.

∴பாதர் பெர்னாண்டோ, பரதேசியின் தோற்றத்தைப் பார்த்து விட்டு, எதுவுமே புரியாமல் குழம்பி நிற்கிறார். திவ்விய நற்கருணை தொடங்குகிறது. உயரமான அலங்கரிக்கப்பட்ட கோப்பையிலிருந்து ஒரு வெள்ளை அப்பத்தை எடுத்து, 'நான் உங்களுக்கு ஒப்புவித்ததைக் கர்த்தரிடத்தில் பெற்றுக்கொண்டேன், என்னவெனில், கர்த்தராகிய இயேசு தாம் காட்டிக் கொடுக்கப்பட்ட அன்று இராத்திரியிலே அப்பத்தை எடுத்து, ஸ்தோத்திரம் பண்ணி, அதைப் பிட்டு, நீங்கள் வாங்கி புசியுங்கள். இது உங்களுக்காகப் பிட்கப்படுகிற என்னுடைய சரீரமாயிருக்கிறது, என்னை நினைவு கூரும்படி இதைச் செய்யுங்கள் என்றார் '.

அந்த வெள்ளை அப்பத்தை எடுத்துத் தன் தலைக்கு நேர் மேலே உயர்த்தும் ∴பாதர், அதை நடுவில் நேராக இரு அரை வட்டத்துண்டுகளாக உடைக்கும் போது, தன் பிடறியில் வெப்பக்கற்றை ஒன்று ஓங்கித் தாக்குவதை உணர்ந்து, அதிர்ந்து, தன்னையுமறியாமல் திரும்பிப் பார்க்க, அங்கே மேரி தேவாலயத்தின் அருகே பரதேசி தன்னைக் கூர்மையாகப் பார்த்துக் கொண்டிருப்பதை அறிந்து நடுநடுங்குகிறார். அவரது முதுகுத் தண்டு சில்லிட, அவர் வாயிலிருந்து வார்த்தைகளே எழவில்லை. மூச்சு தடுமாற, கண்கள் இமைக்காது அவர் நிற்பதைப் பார்த்து விட்டு, அவர் முன்னே நிற்கும் திருச்சபையினரும் எதுவும் புரியாமல் குழம்பிப் போகின்றனர்.

திருச்சபை விசுவாசிகளுக்கு திருவிருந்தாகிய வெள்ளை அப்பத்தையும், திராட்சை ரசத்தையும் தரும் பணியைத் தனக்குக் கீழே இருக்கும் க்ளர்ஜியிடம் ஒப்படைத்து விட்டு, நடக்க முடியாமல் நடந்து, ∴பாதர், பலி பீடத்திற்குப் பக்கத்தில் இருக்கும் நாற்காலியில் தன் தலையைப் பிடித்தபடியே உட்காருகிறார். க்ளர்ஜி அப்பத்தையும், திராட்சை ரசத்தையும் வரிசையாக நிற்கும் சபையினருக்கு விநியோகிக்கின்றனர்.

திருவிருந்தில் முதலாவது ஆளாக நிற்கும் ஆண்டனி ஆசீர்வாதம், தன் வாயைத் திறந்து அப்பத்தைப் பெற்றுக் கொள்ளும்போது, அந்தப் பரதேசியைப் பார்க்கிறான். பரதேசி

மெலிதாகப் புன்னகைக்கிறார். திருவிருந்து முடிந்ததும், ஃபாதர் நிறைவான ஸ்தோத்திர ஜெபத்தை ஏறெடுக்கிறார்.

திருச்சபையினரைப் பார்த்து,

- 'கர்த்தர் உம்மோடிருப்பாராக!' என்கிறார்.
- 'அவர் உமது ஆவியோடும் இருப்பாராக!'
- 'சமாதானத்தோடே போய் வருவோம்! '
- 'கர்த்தருடைய நாமத்தினாலே, ஆமென்! ' என்று ஆராதனை முடிகிறது.

தன் கைப்பையுடன் வந்து, பைக்கில் ஏறி, சாவியை அதன் இடத்தில் பொருத்தி, காலால் உதைத்து, அதைக் கிளப்ப, புகை விட்டபடி பைக்கை வளைத்துத் திருப்பும் போது, மீண்டும் அந்த பரதேசியைப் பார்க்கிறார் ஃபாதர்.

'நீ யார்? ' என்று வாய் கேட்கிறது. ஆனால், வார்த்தைகள் வெளியே வர மறுக்கிறது.

இதயம் 'தடக் தடக் ' கென்று துடிக்கிறது. மேலங்கியின் பக்கவாட்டுப் பைக்குள் கையை நுழைத்து துவாலையை எடுத்து முகத்தில் பெருகி வழியும் வியர்வையை வழித்துக் கொள்கிறார். அந்தப் பரதேசியின் கண்களைப் பார்ப்பதையே தவிர்த்து விட்டு, பைக்கைக் கிழக்குப் பக்கம் செலுத்த, அங்கே சி.எம்.எஸ். பள்ளிக்கூட பின்புற காம்பவுண்டு சுவரில், சிவப்புக்காவி எழுத்துக்களில் எழுதப்பட்ட சுவிசேஷ வசனம் அவர் கண்களில் தென்படுகிறது.

'இயேசு வருகிறார்! '

அதன் கீழேயே 'வரட்டும்! சிலுவை தயாராக இருக்கிறது!' என்று வேறொரு கையெழுத்தில் எவனோ எழுதி வைத்து விட்டுப் போயிருக்கிறான். இந்த ஊர் முழுக்க சேட்டைக்காரர்கள் இருக்கும் ஊர் தான்…

… இடுப்பில் இருக்கும் லுங்கியில் சுருட்டி வைத்த பீடிக்கட்டை கவனமாக அவிழ்த்து எடுத்து, அதிலிருந்து ஒன்றை உருவித் தன் வாயில் வைத்து, அதன் கூர் முனையைக் கடித்துக் கீழே துப்பி விட்டு,

அதைப் பற்ற வைத்துக் கொண்டு சாவகாசமாக அந்த குட்டைப் பாலத்தை நோக்கிச் சென்ற ஆண்டனி ஆசீர்வாதம், காலையில் சபை திருவிருந்தின் போது தான் பார்த்த பரதேசி அங்கே உட்கார்ந்து கொண்டு, போவோர் வருவோரைப் பார்த்தபடியே இருப்பதைக் கண்டு, 'இந்த இடத்துக்குப் புது ஆளா இருக்க. யாருய்யா நீரு?' என்று கேள்வி கேட்டபோது, அவனுக்கு இருமல் எழுந்தது. நெஞ்சுச்சளி தொண்டைக்கு வந்து, பேச்சு தடைபட்டு, நெஞ்சைப் பிடித்துக் கொண்டு, அவன் ரோட்டின் ஓரமாய், சி.எம்.எஸ். பள்ளி காம்பவுண்டு சுவரில் காரித் துப்பினான்.

- 'உடம்புக்கு முடியலயா? அப்புறமா எதுக்கு அந்தக் கருமத்தைப் போய்ப் பிடிச்சுக்கிட்டு?' தூக்கித் தூரப் போடு !'

  பரதேசியின் நிர்த்தட்சண்யமான குரலில் இருந்த அதிகாரம் அவனுக்கு அதிர்ச்சி தந்தது. தன் வாயில் கனன்று கொண்டிருந்த பீடியை எடுத்துத் தூர எறிந்தான். மீண்டும் ஒரு முறை காறித் துப்பினான். துப்பிய ஆண்டனி ஆசீர்வாதம்,

- 'இனிமே அந்தக் கருமத்தைத் தொட மாட்டேன்னு உனக்கு நீயே உறுதி பண்ணிக்க!' பரதேசி, ஆண்டனி ஆசீர்வாதத்துக்குச் சொன்ன வார்த்தைகள், தெளிவாகக் கணீரென ஒலித்தன.

- 'ஆமா, காலையில இருந்தே நீரு இங்க உக்காந்திருக்கீரு. நீர் யாரு? உமக்கு எந்த ஊரு? நானும் அப்ப புடிச்சே கேட்கணும்ல நெனச்சுக்கிட்டு இருந்தேன். நீரு யாரு ? சொல்லுவே ! '

- 'அட நானோ பரதேசிப்பா. பரதேசிக்கு ஏது ஊரு, பேரு, அதெல்லாம் எனக்குக் கிடையாது. '

- 'அட, ஊரே இல்லாம ஒரு ஆளா?! நீரு என்ன வானத்துல இருந்தா எறங்கி வந்தீரு?! புதிரு போடாதீரும்வே !'

  பரதேசி பலமாகச் சிரித்தார். ஆண்டனி ஆசீர்வாதம் புரியாமல் விழித்தபடியே அவரைப் பார்த்தான்.

- 'ஆமா, அந்த ∴பாதர் ஆராதனை நடத்தினாரே! உனக்கு அதுல ஏதாவது புரிஞ்சுச்சா?'

- 'பின்ன புரியாம இருக்குமா? எல்லாம் புரியுது. இத்தனை வருசமா சர்வீஸ் எடுக்கறாரு ∴பாதர். புரியாம இருக்குமா? எல்லாம் தெளிவாப் புரியுது. '

- 'அப்படியா! அப்ப அந்த மலைப்பிரசங்கம் செஞ்சது யாரு, சொல்லு!'
- '…………'

- 'மலைப்பிரசங்கம் செஞ்சது யாரு?'

- 'மலைப் பிரசங்கமா? இப்படித் திடீர்னு கேட்டா எப்படி? அது வந்து யாரு? பவுல் பண்ணினதா?'

பரதேசி வாய் விட்டு பலமாகச் சிரித்தார்.

- 'யாரு சேவியரா?'

பரதேசி, மேலும் தொடர்ந்து சிரித்தார்.

- 'யாரு மேரி மாதாவா?'

பரதேசி சிரித்துக் கொண்டே இருந்தார்.

- 'தோமையாரா?'

- '……………'

- 'அட எனக்குத் தெரியல. அடுத்த வாரம் ∴பாதர் சிரியன் இங்க வருவாரு. அவருகிட்ட கேட்டுச் சொல்றேன்.'

- 'உன் வயசு என்ன ?'

- 'என்ன, எனக்கு நாப்பத்தி அஞ்சு இருக்கும். '

- 'எத்தனை வருஷமா ஞாயித்துக்கிழமை சர்வீசுக்கு வர்ற?'

- 'யோவ், சின்னப் புள்ளையா இருக்கறப்பவே என்னை வாராந்தவறாம எங்கம்மா கோவிலுக்குக் கூட்டிட்டுப் போவாங்க. இந்த சபை இல்ல. அங்க, சிவகாசி ரோட்டுல சந்தைப்பேட்டைல ஒரு சபை இருக்குல்ல. அங்க தான். எங்கம்மா என் சட்டை, டிராயரை நல்லாத் துவச்சி எனக்குப் போட்டு விட்டு, என்னைய ஞாயித்துக்கிழமை காலைல அங்க கூட்டிட்டுப் போவும், எட்டு மணிக்கெல்லாம் அங்க சந்தைப்பேட்டை சர்ச்ல ஞாயித்துக்கிழமை சர்வீஸ் ஆரம்பிச்சுருவாங்க. அங்க உள்ளே போனதும், எங்கம்மா வாசலுக்கு வெளியே நின்னு கையால சிலுவைக்குறி போடும். அதைப் பார்த்து நானும் அப்படியே எனக்குப் போட்டுக்குவேன். பிறகு, எங்கம்மா என்னையக் கூட்டிட்டுப் போயி, அங்கே மேற்கு மூலையில், தரையில ஒரு ஓரமா உக்கார வெச்சிடும். சர்வீஸ் முடியறதுக்கு ரெண்டு மணி நேரம் ஆகும். '

- 'ஏன் உங்கம்மா உன்னையக் கொண்டு போய் மூலைல உக்கார வெச்சாங்க? அங்க முன்னாடி உக்கார வைக்க வேண்டியது தான?'

- 'அதெப்படி முடியும்? எனக்கு இது முதல்ல ஒண்ணும் புரியல. பிறகு கொஞ்ச வருசம் போன பெறகு தான் என் அம்மா எனக்குச் சொன்னாங்க. அப்புறம் தான் எனக்கு அந்த வெவரம் புரிஞ்சுச்சு.

- 'என்ன வெவரம்?'

- 'திருச்சபைல, சர்வீஸ் நேரத்துல, பலி பீடத்துக்குப் பக்கத்துல, முத வரிசையில ஆர்.சி. முதலியார் சாதி ஆளுங்க உக்காரணும். அவங்களுக்குப் பின் வரிசைல ரெட்டியார் கிறித்தவர்கள். '

- 'அப்புறம்? '

- 'சபைல வலது பக்கம் முன்வரிசைல சைவப் பிள்ளைமார் ஆளுங்க. '

- 'கிறித்தவத்துல எப்படி சைவப்பிள்ளை, அசைவப்பிள்ளை எல்லாம் வந்துச்சு?'

- 'அத என்கிட்ட கேட்காத. திருநெல்வேலியில இருந்து வந்து, இங்க தங்கின சைவப் பிள்ளை கிறித்தவங்க கிட்ட போய்க்கேளு…'

- 'அடப்பாவி… அப்புறம்… '

- 'ஆர்.சி. சைவப் பிள்ளை கூட்டம் சபைக்கு வலது பக்கம் முன் வரிசைல. அவங்களுக்கு நேர் பின்னாடி நாடார் கிறித்தவங்க. அவங்களுக்கு முன் வரிசைல. அல்லது எதிர் வரிசைல ஆர்.சி. தேவர். '

- 'கிறிஸ்தவங்கள்லயும், தேவர், நாடார்ன்னு ஒரு பிரிவா?'

- 'என்ன இப்படிக் கேட்டுப்புட்டீரு? எங்க சபைல கல்யாணம் பண்ணுற போது அவங்கவங்க அடிக்கற கூத்து இருக்கே, அது அந்த ஆண்டவருக்கே பொறுக்காது' ஆண்டனி கைகளை விரித்தபடி வானத்தைப் பார்த்தான்.

- 'அப்படி என்ன கொடுமைப்பா?'

- 'இந்த ஆர்.சி. முதலியார், ஆர்.சி. முதலியார் வகையறாவுல தான் பொண்ணு எடுப்பாரு. பொண்ணு கொடுப்பாரு. வேற ஆளுகளுக்குப் பொண்ணு தர மாட்டாரு'.

- 'இது வேறயா?'

- வனத்துல போனாலும் இனத்துல அடைன்னு எங்க ஊர்ப்பக்கம் சொல்லுவாங்க. அந்த மாதிரி ஆர்.சி. ரெட்டியார், ஆர்.சி. ரெட்டியார் பொண்ணத்தான் கட்டுவாரே தவிர, நாடார்ல சம்பந்தம் பண்ண மாட்டாரு. '
- 'பிதாவே!'
- 'அதாவது ஆர்.சி. ரெட்டியார், ஆர்.சி. நாடாரை விட ஒரு பங்கு ஒசத்தியாம். அதனால அப்படியாம். '
- 'பேஷ்!'
- 'ஆர்.சி. நாடார், ஆர்.சி நாடார் ஆளுக்குப் பொண்ணு தருவாரு. அப்படி மாப்பிள்ளை கிடைக்கலைன்னா, கொஞ்சம் படியிறங்கிப் போயி சிஎஸ்ஐ நாடார் மாப்பிள்ளைக்குப் பொண்ணு கொடுப்பாரு. அதுவும் இல்லாட்டி, ஒரு இந்து நாடார் பையனைப் புடிச்சு, அவனுக்கு ஞானஸ்நானம் கொடுத்து, அவனை ஆர்.சி. சபைக்கு மாத்தி, அப்புறமா அவனுக்குத்தன் பொண்ணைக் கொடுப்பாரு. '
- 'அதாவது, அவங்க அவங்க தன் இனத்துக்குள்ளேயே... பிரமாதம்! '
- 'ஆமா... ஆனா... ஆர்.சி. நாடார், தன் பொண்ணைக் கொண்டு போய், ஆர்.சி. அருந்ததியருக்குத் தர மாட்டாரு!'
- 'அதெப்படிப்பா, எல்லாருமே கர்த்தரோட புள்ளைங்க தான?! அப்படி இருக்கறச்சே, ஒண்ணுக்குள்ள ஒண்ணு பொண்ணு கொடுத்தா என்ன கொறஞ்சா போயிடும்? '
- 'இப்படித்தான் எங்க சீனியாபுரத்துக்காரன் ஒருத்தன் ஈட்டிக்குப் பூட்டியா கேள்வி கேட்டான். அதுவும் ஒரு ஞாயித்துக்கிழமை அன்னிக்கு காலைல சபைல சர்வீஸ் நடக்கறபோது... அவன என்ன பண்ணினாங்க தெரியுமா?'
- 'என்ன பண்ணினாங்க?'

- 'அடுத்த வாரமே அவன சீனியாபுரத்துல வெச்சு வெட்டிட்டாங்க.'

- ' வெட்டினவன் எங்க ஊர்க்காரன் தான். அவனுக்கு நாலு பாட்டில் சாராயத்தை வாங்கி ஊத்தி, வெறியேத்தி அனுப்பி, கேள்வி கேட்டவனைத் தீத்துட்டாங்க. ஆளைக் குளோஸ் பண்ணி, குட்டத்தட்டி கண்மாய்ல மிதக்க விட்டுட்டாங்க. '

- 'அடப்பாவமே! போலீசு விசாரிக்கலையா?'

- 'யோவ், உனக்கு வெவரமே பத்தாதுய்யா. நீரு எந்த நாட்டுல குடியிருக்கீரு? திருச்சபை மேல் மட்டம் பூராவும் அவுங்க ஆளுங்க. யாரு கேள்வி கேட்கறது? போலீசாவது ஒண்ணாவது!'

- 'தேவனே!'

- 'திருச்சபைல பின்வரிசைல தான் நாங்க உக்காருவோம். எனக்கு ரொம்ப சின்ன வயசுலயே இது தெரிஞ்சு போச்சு. நான் கேள்வி கேட்டு மோதிப் பாக்கலாம்னு நெனச்சேன். ஆனா, அடுத்த வாரமே என்னைய யாராவது வெட்டி, குட்டத்தட்டி கண்மாய்ல மிதக்க விட்டுட்டா?...'

- 'இங்க ஞாயித்துக்கிழமை சர்வீஸை இப்படி நடுத்தெருவுல வெச்சு நடத்துறீங்களே! உங்களுக்குப் பக்கத்துலயே கர்மேல் திருச்சபை இருக்குல்ல. அங்க போய் உட்கார வேண்டியது தான. இங்க எதுக்கு ரோட்டுல நின்னுக்கிட்டு 'கர்த்தாவே ஸ்தோத்திரம்' ன்னு சொல்லணும்? '

- 'அங்க பக்கத்துல இருக்கற கன்னிமார் மடத்துல இருக்கற சபைக்குத்தான் நாங்க மொதல்ல போய்க்கிட்டு இருந்தோம். அங்க உள்ளுக்குள்ள பள்ளிக்கூடம், அநாதை விடுதி, விவசாயத் தோட்டம், சீமைப்புல் வளக்குற இடம், சீமைப்பன்னி வளக்குற ஷெட்டு, தையல் பள்ளிக்கூடம், இதெல்லாம்

இருக்கு. பாதிரியார், கன்னிமார்கள் எல்லாரும் அங்க தான் தங்குவாங்க. எங்க தாத்தா காலத்துல இருந்தே நாங்க ஞாயித்துக்கிழமைக்கும், பண்டிகை காலத்துக்கும் அங்க தான் போயி சாமி கும்பிடுவோம். பிற்பாடு, எங்க அம்மா காலத்துல கொஞ்சப் பேரு, நேரா பாதிரியார் கிட்டப்போயி, அவர் பேரு மரிய இருதயம். அவர்கிட்டப் போயி, 'ஏன் சாமி, எங்க தலைமுறை தலைமுறையா இங்க வந்து நாங்க வாரா வாரம் சாமி கும்முடுறோம். ஆனா, எங்க சீனியாபுரத்து ஆளுகள எல்லாம் கடைசியா ஒரு மூலைல உட்கார வெக்கிறீங்களே! எங்கள ஏறெடுத்தும் பாக்குறீங்களா? பேசாம இந்தச் சபை இடத்தை ரெண்டாப் பகுந்து எங்களுக்கு ஒரு பாகம் தாங்க. நாங்க தனியா ஒரு ஏசு சாமி கோவில் கட்டிக்கிட்டு சாமி கும்பிடுறோம் ' அப்படின்னு சொல்லிப் பார்த்தாங்க.

- 'அதுக்கு அந்தப் பாதிரியார் என்ன சொன்னாராம்? '

- ‘பாதிரியாருக்கு முகமெல்லாம் ரத்தமாச் செவந்து போச்சாம். கோபம் மூக்குக்கு மேலே ஏறி நிக்குதாம். ஏலே, என்ன தைரியம் இருந்தா, நான் ஒரு பாதிரியார். என்னையப் பார்த்து இந்தக் கேள்வி கேப்பீங்க?! இது ஆர்.சி. நாடார் சபைலே, தெரியுமா? உன் கோஷ்டி சீனியாபுரம். உங்க ஆளுங்க விருப்பம் இருந்தா இங்க வந்து சாமி கும்புடலாம். இல்லன்னா நீங்க பாட்டுக்கு இங்க வராமலே வெளிய வேற எங்காவது போய்க்க. உன்னை எவம்லே இங்க வரச்சொன்னது? உன் கூட்டாளி உன் வகையறா ஆளுக ஒரு பயலும் இங்க வர வேணாம். நீங்க இனிமே சீனியாபுரத்துலயே இருந்து சாமி கும்புட்டுக்குங்க. இங்க வர வேணாம். மொதல்ல சபையை விட்டு வெளிய போங்கடா…' அப்படின்னு சொல்லி எங்க சீனியாபுரத்துக்காரங்கள எல்லாம் வெளியே துரத்தி விட்டுட்டாராம் '

- 'அடக்கஷ்டமே!'

- ‘இத விடப் பெரிய அவமானம், அதுக்கு அடுத்த வாரம் நடந்துருக்கு. அடுத்த வாரம் ஞாயித்துக் கிழமை வழக்கம்

போல காலைல சர்வீஸுக்கு எங்க ஆளுங்க அங்க கன்னிமார் மடத்துக்குப் போன போது, கேட் வாட்ச்மேன் ஃப்ரான்சிஸ் எங்க ஆளுங்கள உள்ள நுழைய வுடாம வெளிய தள்ளி, கதவைச் சாத்திட்டான். அன்னிக்கு எங்க ஆளுங்க மனம் நொந்து போய்த் திரும்பி வந்தவங்க தான். அதுக்கப்பறம் அங்க கன்னிமார் மடத்துக்குள்ள போறதே இல்ல…'

- 'என்ன கொடுமை இது?'

- ‘‘அன்னிக்கு இருந்து நாங்க இப்படி ஞாயித்துக்கிழமை சர்வீஸுக்கு தெரு நடுவுல நிக்குறோம். எங்களக் கொண்டு வந்து நடுத்தெருவுல நிறுத்திட்டுப் போயிட்டானுவ. என் முப்பாட்டன் காலத்துல வெள்ளைக்காரங்க எங்க நெலமையப் பார்த்துப்பச்சாதாபப்பட்டு, எங்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்து, பீட்டர், பால், தாமஸ், சகாயம், சவரி, மேத்யூ, ஜான், டேவிட், ஆண்ட்ரூ, சார்லஸ், அப்படி, இப்படின்னு பேர் வெச்சாங்க. எல்லாருமே ஊருக்கு வெளில பறைச்சேரில இருந்தவங்க தான். ரேக்லேண்ட் அய்யர் காலத்துல எங்க ஆளுங்க கொஞ்சப்பேரு கிறிஸ்தவங்களா மாறினாங்க. பிற்பாடு, நிறைய வெள்ளைக்கார மிஷினரி ஆளுங்க வந்து பணம், துணிமணி, கோதுமை மாவு, பால் பவுடர், இப்படியெல்லாம் கொடுத்து எங்க ஆளுக கொள்ளைப் பேரை மாத்திட்டாங்க. அது நடந்து எத்தனையோ தலமுறை ஆகிப் போச்சு. ஆனா, ரேக்லேண்ட் அய்யர் காலத்துல எங்க ஆளுங்களுக்கு என்ன உத்திரவாதம் கொடுத்தாங்க? உங்களை மதிப்பா நடத்துறோம். எல்லாரையும் மரியாதையா நடத்துறோம். நீங்க எங்க கிட்ட ஞானஸ்நானம் எடுத்துக்கங்க. எங்க சபைக்கு வாரா வாரம் வாங்க. உங்க புள்ளைங்களையும் அங்க கூட்டிக்கிட்டு வாங்க. அவுங்களை நாங்களே படிக்க வெக்கிறோம்', அப்படின்னு சொன்னாங்க. ஆனா என்னாச்சு?’’

- 'என்னாச்சு?' எனப் பரதேசி கேட்டார்.
- ‘எங்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்து, வெள்ளைக்காரன் மாதிரியே பேர் வெச்சதோட சரி.  முடிஞ்சு போச்சு அவுங்க கடமை. எங்க நெலமை அப்படியே தான் இருக்கு. வெறும் பேரை மட்டும் வெச்சிக்கிட்டு என்ன பண்ண? பேரைக் கேட்டா

'ஜான் டேனியல் ' அல்லது 'மைக்கேல் பீட்டர் ' அப்படின்னு நாகரீகமாப் பேர் சொல்லுவோம். எங்களுக்கு என்ன இருக்கு? தெலுங்கு பேசறவங்க சொல்லுற மாதிரி 'பேரு பெத்த பேரு, தாக நீலு லேது', அப்படிங்கற மாதிரி தான் எங்க பொழைப்பும். இதுல ஒரு வேடிக்கை பாருங்க. அக்கிரஹாரத்து ஆளுங்க பேசிக்கறதை நான் கேட்டிருக்கேன். 'காசிக்குப் போனாலும் கருமம் தொலையாதுன்னு'. அதே மாதிரி, பேரை மாத்தி, கோவிலை மாத்தி, என்ன ஆச்சு? ஒண்ணும் இல்ல!'.

பரதேசி பேசாமல் அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்தார். அவரது முகத்தில் இயல்பான சுமூகத்தன்மை கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து உக்கிரம் எனும் கோபம் ஏறிக்கொண்டிருந்தது. மேற்குத் தொடர்ச்சி மலை அடிவாரத்தில் செம்பகத்தோப்பு பக்கமாக காலை நேரத்தில் மேய்ச்சலுக்குப் புறப்பட்டுப் போன மாடுகள், ஆடுகள் மந்தை மந்தையாக கம்மாப்பட்டிக்குத் திரும்பிக் கொண்டிருந்தன. அந்த மாடுகளின் மடி நிறைந்தும், அந்த மேய்ப்பர்களின் முகம் சோர்வடைந்து ஆயாசமாக இருப்பதையும் பரதேசி கவனித்துக் கொண்டிருந்தார். மாடுகளின் கழுத்தில் கட்டப்பட்டிருந்த மணிகளின் ஓசையும், வெள்ளாடுகளின் கழுத்தில் இருந்து ஒற்றை மணிச்சப்தமும், மாலை நேர வெயிலின் சாய்ந்த கிரகணங்கள் எங்கும் பரப்பிய பொன்னொளிக்குத் திவ்வியமான பின்னணி இசையைக் கூட்டிக் கொண்டிருந்தன. மாட்டு மந்தைகள் எழுப்பிய புழுதி, செம்பகத்தோப்பு சாலையை அடைத்துக் கொண்டு வழி மறித்தது. பழம் தின்னி வௌவால்களும், கிளிகளும் கூடுகளுக்குத் திரும்பிக் கொண்டிருந்தன. மேற்கு மலை மேல் தெரிந்த வெளிரிய பின்புலத்தையும், அதன் மேல் புள்ளிகளாய்த் தெரிந்த கூடு திரும்பும் பறவைகளையும், சாயங்கால வானத்தின் கலவையான, பரந்த வர்ண ஜாலங்களையும், மேகத்தின் நீண்ட நீல விரிவையும் ஆழ்ந்து நோக்கிய பரதேசி, ஒரு நீண்ட பெருமூச்சை இழுத்து வெளியே விட்டார். பிறகு தலையைத் தாழ்த்தி, ஆண்டனி ஆசீர்வாதத்திடம், 'அப்புறம் என்ன? விஷயத்தைச் சொல்! ' என்றார்.

- ‘என்னத்த நான் சொல்ல! எங்க ஆளுங்கள்ல ஒருத்தன் எப்படியோ மதுரை அரசரடிக்குப் போயி, அங்க இருக்கற காலேஜ்ல படிச்சுட்டு, பாஸ்டராகிட்டான். பிறகு, அந்தா இந்தான்னு பத்து வருஷம் பாஸ்டராவே இருந்துட்டு, பெறகு மதுரை டயோசீஸ்ல சேர்ந்து, அதுல ஒரு பெரிய பதவிக்குப் போயிட்டான். சர்ச் கமிட்டில முக்கியத் தலைவர் பதவி அவனுக்கு. அதுக்கப்புறம் நடந்தது ஒரு கூத்து!'

- 'அது என்ன கூத்து ? சொல்லேன் கேட்போம்! '

- 'அந்த சர்ச் நிர்வாகக் கமிட்டி பதவிக்குப் போன எங்க ஆளு பேரு மைக்கேல் ராமர். ஒரு நாள் திருச்சபைல பெரிய கூட்டம் ஒண்ணு நடந்துச்சு. அதுக்கு டெல்லில இருந்து பெரிய பாதிரியாரெல்லாம் வந்திருந்தாங்க. அங்க தான் இந்த கூத்து நடந்துச்சு!'

- 'என்னது?'

- அந்த மீட்டிங்ல வந்து கலந்துக்கிட்டவங்க எல்லாம், இவன் பெயரைப் படிச்சுப் பார்த்துட்டு, 'என்ன இது? இவ்வளவு கோக்கு மாக்கான பேரா இருக்கே! மைக்கேல் ராமர்ன்னு ஒரு பாதிரியார் பேரா? இதென்ன சி.எஸ்.ஐ. சபைல ராமர், லட்சுமணர், அனுமார்ன்னெல்லாம் பேரை வெச்சிக்கிட்டு! அந்த ஆளை முதல்ல பேரை மாத்தச்சொல்லு. இல்லன்னா, சபையை விட்டு வெளிய போயி ராமர் கோவில்ல மணியாட்டச்சொல்லு' அப்படின்னாங்க.

- 'அதுக்கு மைக்கேல் ராமர் என்ன சொன்னாரு?'

- 'மைக்கேல் ராமர் அடிச்ச பதில்ல தான், எங்க சீனியாபுரத்தோட மக்கள் நெலமை வெளிய தெரிய வந்துச்சு!'

- 'அப்படியா?'

- மைக்கேல் ராமர் என்ன சொன்னாருன்னா, ‘என் சனத்துக்கிட்ட இருந்து இந்தப் பதவிக்கு மேல வந்திருக்கிற மொத ஆள நான் தான். என் முப்பாட்டன் காலத்துல இருந்து எங்களுக்குச் செருப்புத் தெக்கிற தொழில் தான். எங்க பாட்டன், வெள்ளக்கார தொரை ஒருத்தனுக்கு பூட்ஸ் செஞ்சு கொடுத்தான். அந்தத் தொரை எங்க பாட்டனுக்கு குடியிருக்க இடம் கொடுத்து, ஞானஸ்நானம் பண்ணி, ராமர்ங்கிற பேரை சவரிராயன்னு மாத்தி வெச்சாரு. எங்க அப்பா டேவிட்டு, ரொம்பக் கஷ்டப்பட்டு என்னைய படிக்க வெச்சு, என்னைய ஆளாக்கி ஒரு பாஸ்டராக்கினாரு. எங்க பரம்பரைல ஒரு தலைமுறை விட்டு ஒருத்தருக்கு ராமர்ன்னு பேரு வெப்பாங்க. என்ன தான் நீங்க மைக்கேல்ன்னு பேரு வெச்சிக் கூப்பிட்டாலும், எல்லா ஆளுகளுக்கும் சமமாவா என்னைய நடத்துறீங்க? என்ன இருந்தாலும், இங்க மேல் மட்டத்துல அவனவன் சாதியைப் பாத்துத்தான கூட்டுச் சேந்துக்கறான்? இதுல என் பேரை ராமர்ன்னு வெச்சிக்கிட்டா என்ன? கிருஷ்ணர்னு வெச்சிக்கிட்டா என்ன? எத்தன கிறிஸ்தவங்க அக்ரகாரத்து அய்யர் கிட்டப் போயி, ஜாதகப்பொருத்தம் பாத்துட்டு, அப்புறமா கல்யாணம் நிச்சயம் பண்றாங்கன்னு எனக்குத் தெரியும். அதுவும் ராகு காலம், எல்லாம் பாத்துத்தான் கல்யாண முகூர்த்தம் வெக்கிறான். போய்யா உன் சோலியைப் பார்த்துக்கிட்டு', அப்படின்னு பெரிய பாதிரிமார்கிட்ட முகத்துல அறைஞ்ச மாதிரி சொல்லி விட்டாராம். '

- 'கேள்வி கேட்ட ஆளுகளுக்கு முகத்துல நாலு அறை விட்ட மாதிரி இருந்திருக்கும்! '
- 'சரியாச் சொன்னீங்க!'

- 'அதுக்கு அவங்க என்ன சொன்னாங்களாம்? அவங்களுக்குக் கோவம் கோவமா வந்திருக்குமே!?'

- 'சரி தான். அந்தப் பெரிய பாதிரிமார்கள் மைக்கேல் ராமர் கிட்ட சொன்னாங்களாம். 'மைக்கேல் இவ்வளவு வியாக்ஞானமாகப் பேசறீங்களே. பேசாம அந்த ராமர் சாமி கிட்டப் போயி

சேந்துக்க வேண்டியது தான நீரு' அப்படின்னு கேட்டிருக்காங்க. '

- 'அதுக்கு ராமர் என்ன சொன்னாராம்? '

- 'அங்க தான் ராமர் அவனுவளை வெளுத்துக் கட்டிட்டாரு. 'நான் அங்க சாமி கும்பிட்டா என்ன, இங்க சாமி கும்பிட்டா என்ன? எல்லாம் ஒண்ணு தான். ரெண்டு இடத்துலயும் என்னைய ஒரே மாதிரி தான் நடத்துறாங்க', அப்படின்னு சொன்னார் மைக்கேல் ராமர். '

பரதேசி கண்களை இறுக மூடிக் கொண்டிருந்தார். கேட்ட விஷயம் எல்லாவற்றையும் அவர் மனசுக்குள் போட்டு அரைத்துக் கொண்டிருப்பதாக ஆண்டனி ஆசீர்வாதத்துக்குப் பட்டது! பரதேசியின் முகத்தில் கவலை ரேகைகள், வரி வரியாக விரிந்து கொண்டு போவது தெரிந்தது. முகம் கனமானது. அவரது தீவிர எண்ணத்திற்குப் பின்னர், அந்தப் பரதேசி சொல்லப்போகும் வார்த்தைகளுக்காக அவரது உதடுகளையே பார்த்துக் கொண்டிருந்தான் ஆண்டனி ஆசீர்வாதம்.

பரதேசி தொண்டையைச்செருமினார். கண்களை திறந்து அவனை நோக்கி, 'ஏம்பா, ஒழக்குக்குள்ள கிழக்கு, மேற்கு பிரிச்சுப் பார்க்கலாமா, சொல்லு?' என்றார்.

- 'ஆனா, இத ஒழக்குன்னு சொல்லாதீங்க. அது பொருத்தமா இருக்காதுங்கய்யா. வேணாலும் ஒரு கோடாரின்னு சொல்லுங்க. கோடாரி பளபளன்னு கூர்மையாத்தான் இருக்கும். ஆனா, அதுலயும் மேல, கீழன்னு வித்தியாசம் பாப்பாங்க நம்ம ஆளுங்க!'

- 'பிதாவே!'

- அந்த பரம பிதா நேர்ல இங்க வந்தாலும் இதைச் சரி பண்ண முடியும்னு நம்புறீங்களா? எனக்கு என்னமோ அப்படியெல்லாம் நம்பிக்கை இல்லங்கய்யா…'

- 'பிதாவே!…'

- அய்யா என்னங்கய்யா உங்க உள்ளங்கையில இருந்து ரத்தம் வழிஞ்சுக்கிட்டு இருக்கு!? என்ன இது ரெண்டு கையில இருந்தும் ரத்தம் வடியுது?!… அட ஆண்டவனே! கால்ல இருந்தும் ரத்தம் வருதே!….

---------------------

# 9.டைனோசர் ஆயிரம் சூழ வலஞ்செய்து...

**தோற்றுவாய்**

உரிமையியல் நீதிமன்றத்தில் வழக்காடும் இரண்டு எதிர் எதிர் கட்சிக்காரர்களுக்கிடையில் ஒரு சமரசம் செய்து கொள்ளும் பொருட்டு, ஒரு ஒத்திசைவு ஏற்பாட்டுத் தீர்ப்பாணை (Scheme decree) என்பது செய்து கொள்ளப்படுகிறது. இதற்கு அனுகூலமாக உரிமையியல் நடைமுறைச் சட்டத்தில் எந்த சட்டப்பிரிவும் இல்லை. இரண்டு எதிர் எதிர் கட்சிக்காரர்களே மனமுவந்து சிவில் நீதிமன்றத்தில் செய்து கொள்ளும் சமரசத் தீர்வே அது.

**I**

ஒரு வரிசைக்கு எட்டு உயரமான உருளைத் தூண்களுடன், ஆறு வரிசைகள் ஒரே நேர் கோட்டில் நிரலாக நின்றிருந்த அந்தக் கல் மண்டபத்தின் நேர் ஒருங்கினைப் பார்த்து வியந்தபடியே அதைக் கடந்து உள்ளே நுழை நீதிமன்ற ஆணையர், தன்னுடன் வந்து சக வழக்கறிஞர்களில் ஒருவரைப் பார்த்து, 'ஆமா, அது இப்ப எங்க இருக்கு?' என்று கேட்டார்.

சக வழக்கறிஞர் ஒருவர் பெரிதும் பவ்யமாக, 'சார், இங்க தான் இந்தக் கடைசித்தூண்ல அதைக் கட்டியிருக்காங்க', என்றார்.

நீதிமன்ற ஆணையர் அதைக் கேட்டபடி, மீண்டும் பல தூண்களைக் கடந்து செல்லும் போது, அந்தத் தூண்களில் நேர்த்தியான உருளை வடிவத்தைப் பார்த்து வியந்தார். தேர்ந்த சிற்பிகளின் உளி வண்ணத்தில் உருவாகிய அந்தக் கலைப் பொக்கிஷங்கள் ஆண்டாள் கோவிலுக்கே மெருகூட்டிக் கொண்டிருந்தன.

ஆணையர் ஒரு சில தூண்களைத் தடவிப் பார்க்கவும் செய்தார். 'என்ன வழவழப்பு! என்ன வேலைப்பாடு!' என்று அருகில் இருந்த வழக்கறிஞர்களைப் பார்த்து அவர் சொல்ல, அதைக் கேட்டபடி அவர்களும் 'ஆமா…ஆமா' என்ற ரீதியில் தலையாட்டினார்கள்.

தூண்கள் பல இன்னும் கடந்த ஆணையர், கடைசியில் மேற்கு மூலையில் ஒரு தூணில், கொச்சக் கயிறுகளை வைத்து முறுக்கிக் கட்டப்பட்டிருந்த அந்த டைனோசரின் முன்னே வந்து நின்றார்.

'இது தானா அது? என்று அருகில் இருந்த நெற்றியில் நாமம் தரித்த கோவில் அர்ச்சகர்களிடம் கேட்க அவர்களும் 'ஆமாம் சார். இது தான் சார்! ' என்றனர்.

அந்த டைனோசர் சுமார் முப்பது நாப்பது அடி உயரம் இருந்தது. அதை ஏராளமான தென்னை நார் கொச்சக் கயிறுகளால் இறுக்கிக் கட்டி, தூணோடு தூணாக வைத்திருந்தார்கள். கொஞ்சம் ஆறடி நீளத்தில், கொச்சக் கயிறு நீட்டிக் கட்டப்பட்டிருந்ததால், அந்த டைனோசர் அங்குமிங்கும் நடமாடிக் கொண்டிருந்தது. இளம் பச்சை நிறமும், அடர்த்தியான கருமையும் திட்டுத் திட்டுக்களாக அதன் தோலின் மேல் தென்பட சொரசொரப்பான முதலையின் தோல் போல இருந்த அதன் மேல் தோல் பார்க்க அருவருப்பும், அசூயை யுமாய் இருந்தது. அதன் இரண்டு கண்களும் பெரிய பந்துகள் போலே, பார்க்கும் போதே மிரட்டிக் கொண்டிருந்தன.

முன் குவிந்த அதன் தலை ஒரு ஒழுங்கற்ற கூம்பு போன்றும், முதுகின் மேல் திமில் கொழுத்துப்பருத்தும் இருக்க, அதன் நீண்ட ஆறடி வால் அங்குமிங்கும் அசைந்து கொண்டிருந்தது.

ஒரு மொத்த நீதிமன்றக் கூட்டமும், டைனோசரைச் சுற்றி நின்று வாய் பிளந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தது.

- 'இதை எப்படி சாப்பிடப் பழக்கி வெச்சீங்க?' என்று பாகனிடம் கேட்டார் ஆணையர்.
- 'சார், இது சைவம் மட்டும் சாப்பிடுற டைனோசர் சார். வேற அசைவம் எதுவும் சாப்பிடாது. அது மட்டுமில்லாம ஆண்டாள் கோவிலுக்குள்ள ஆட்டுக்கறியெல்லாம் எடுத்துட்டு வரக்கூடாதுன்னு ஈ.ஓ. ஆபிசர் கண்டிசனா என் கிட்ட சொல்லிட்டாரு', என்றார் பாகன்.
- 'அப்படியா!' என வியந்தார் ஆணையர். 'சரி சார்! நாம வந்த வேலையை முடிச்சுரலாமா?' என்று அருகில் இருந்த வழக்கறிஞர்களிடம் கேட்டுக் கொண்டே தனது கேஸ் கட்டை நாடா அவிழ்த்து, அதன் முகப்பைப் பார்த்தபடி,

'ஓ.எஸ். அறுநூற்று எண்பத்து ஒண்ணுக்கு ஆயிரத்து தொள்ளாயிரத்து தொண்ணூ. இதுல வாதி பக்கம் யாரு?' என்று கேட்டபடி ஒரு பார்வை பார்த்தார்.

- 'இப்ப அப்பீல்வாதி பக்கம் யாரு இருக்கா?' என்று கேட்டார் ஆணையர்.

உடனே நெற்றியில் நாமமும், தலையில் கட்டுக்குடுமியும், காதுகளில் நீலக் கடுக்கண்களும், மார்பில் மரகதப் பச்சை பதக்கமும், பஞ்ச கச்சமும், இடுப்பில் பட்டுத்துணியும் இறுக்கிக்கட்டி அந்த ஆண்டாள் அருகில் நிற்கும் ரெங்கமன்னார் பெருமாள் போலவே நின்றிருந்த ஒருவர் அவர் முன்னே வந்து நின்று, ஆணையரைப் பார்த்து,

- 'சார், ஐயாம் லயன் ராகவாச்சாரியார். ஐ பிலாங் டு த தென்கலை ஸப்ஸெக்ட் ஆ.்.ப் ஸ்ரீவைஷ்ணவாஸ். ஐ நோ எவ்ரிதிங் அபவுட் திஸ் டெம்பிள்', என்று தாமஸ் மெக்காலே, உட்ரோ வில்சன், ஜான் எர்ஸ்கின் போன்ற குளிக்காத வெள்ளைக்காரர்கள் நமக்கு விட்டு விட்டுப் போன, மிச்ச சொச்ச ஆங்கிலத்தில், படபடவென வசன மழை பொழிந்தார்.

இதைக் கேட்ட ஆணையர், 'ஐ ஸீ! அப்படியானால் எதிர்மனுதாரர் எங்கே சார்? ' எனக் கேட்டார். அதே லயன் ராகவாச்சாரியார் அணிந்திருந்த பெருமாள் கோவில் யூனி.்.பார்ம் எல்லாவற்றோடும் முன்னே வந்தார் தேசிகன் என்பவர். ஒரே ஒரு வித்தியாசம், தேசிகன் நெற்றியில் இருந்த திருமண் சின்னத்தில் சிவப்பு கோட்டுக்குப் பதில் மஞ்சள் கோடு இருந்தது.

- 'ஐயாம், தேசிகன், தி டிரஸ்டி ஆ.்.ப் தி வடகலை சேரிட்டிஸ்! ஐயாம் த ரெஸ்பான்டன்ட் இன் த அப்பீல். ஐ நோ த கேஸ் .்.பேக்ட்ஸ் பெட்டர் தேன் திஸ் லயன் ராகவாச்சாரியார் ' (என் பெயர் தேசிகன். நான் வடகலையார் பிரிவின் அறக்கட்டளைக்கு அறங்காவலர். நான் இந்த மேல்முறையீடு

வழக்கில் எதிர்மனுதாரர். எனக்கு இந்த வழக்கில், இந்த லயன் ராகவாச்சாரியாரை விட அதிக விவரங்கள் தெரியும்! ' ).

இரண்டு பேரும் போட்டு வெளுத்த கிழக்கிந்தியக் கம்பெனியாரின் ஆங்கிலத்தைக் கேட்டுக் கிறுகிறுத்துப் போன சென்னை உயர்நீதிமன்ற ஆணையர் முத்துச்செல்வன், பார்க்கும் ஆட்கள் தலையில் குடுமி நாமதாரிகளாகவும், அவங்க பேசுற ஆங்கிலம் அதற்கு நேர் எதிராக கும்பெனியாரின் மிலேச்ச பாஷையாகவும் இருப்பதைக் கண்டு, தலை கிறுகிறுத்து, அதே இடத்தில் பலர் முன்னிலையிலும் தலையைச் சொறிந்து கொள்ள ஆரம்பித்தார்…

(இந்தக் கதையைப் படிக்கும் வாசக நண்பராகிய நீங்களும் உங்கள் தலையைச் சொறிந்து கொள்வதற்கு முன்னால், இவ்வழக்கில் நடைபெற்ற முன் சம்பவங்களை எடுத்துச் சொன்னால் தான் இந்த விஷயத்தில் ஒரு கோர்வை ஏற்படும் என நான் நம்புகிறேன்…)

அதாகப்பட்டது, தமிழ்நாட்டின் தென் கடல் எல்லையில் உள்ள நாகர்கோவில் பிரதேசமும், மலையாள தேசமும் முட்டி முத்தமிட்டுக் கொள்ளும் அந்த மலைப்பிரதேசத்தில் தொடங்குகின்ற மேற்குத் தொடர்ச்சி மலை நெடுக்க ஒரே நீட்டமாக, மலையாள தேசம், கர்நாடகம் தாண்டி மகாராஷ்ராவில் போய் முடிகிறது. இந்த மேற்குத்தொடர்ச்சி மலைத் தொடர் ரொம்ப அழகானது. அகத்தியர் அவரோட அறிவுக்கு அமெரிக்காவே போயிருக்கலாம். அங்கயெல்லாம் போகாம, அவரு இங்க வந்து, தென் பொதிகையில வந்து தங்கினார்னு சொன்னா அந்த மலையோட மகிமைய என்னன்னு சொல்ல?!…

இந்த மலைத்தொடர்ல எத்தனையோ மர்மங்கள் மறைஞ்சு கிடக்கு, ஆமா. ஒரு பயலுவளும் அதப்போயி கண்டுபிடிக்க முடியல. அப்படி ஏகப்பட்ட மர்மம் அங்க அடைபட்டுக் கிடக்குது சாமி.

அங்க பார்த்தீங்கன்னா, எங்க ஸ்ரீவில்லிபுத்தூருக்கு மேற்குப் பக்கமா, ஒரு எட்டு மைலு, ஒரே போக்குல போனா, செம்பகத்தோப்புன்னு ஒண்ணு வரும். நல்ல அடர்த்தியான காடு தான். அதுக்குப் பேரு தோப்புன்னு சொல்றது தப்பு. அங்க இலுமிச்சையும், மாவும், பலாவும், தென்னையும், தேக்கும், பாக்கும், ஒரு பாடுக்கு வெளஞ்சு கிடக்குற பொன்னு பூமி, அது தான் சாமி…

திருநெல்வேலிய தின்னவேலின்னு தன் செவந்த வாயால சொன்ன ஒரு வெள்ளக்கார துரை ஒருத்தன், பொழுதைப் போக்குறதுக்கு, அந்தச் செம்பகத்தோப்புக்கு ஒரு தடவை தன்னோட கருப்புக் குதிரையில ஏறிப் போயிப் பார்த்தபோது, அங்க இருந்த காட்டுச் செடிகள்ல இருந்த பூக்கள்ல இருந்து தேனு சொட்டுச் சொட்டா வடிஞ்சிக்கிட்டு கிடக்கறதையும், அதுக்குப்பக்கத்தில இருந்த மரங்கள்ல இருந்த தேனடைகள் தேனால நிரம்பி, அது பாரம் தாங்காம தொங்கிக்கிட்டு கீழ வுழுகிற மாதிரியும் இருக்கறதைப் பார்த்துட்டு, அசந்து போயி, நேரா திருநெல்வேலி சீமைக்குப் போயி, தன்னோட ஆபீசுல உக்காந்துக்கிட்டு, தான் கண்ணால பார்த்ததை, அப்படியே மைக்கூட்டுல இருந்த கட்டைப் பேனாவை வெளியே எடுத்து, அச்சு அச்சா இங்கிலீசுல எழுதிட்டுப் போயிட்டாரு. அந்தப் புஸ்தகம் இன்னிக்கு வரை அப்படியே இருக்கு.

இப்படி கண்ணைப் பறிக்கற மாதிரி, காட்டுச்செடிகளும், கொடிகளும், அநேக பேரே தெரியாத மரங்கள் எல்லாம் ஒண்ணுக்குள்ள ஒண்ணு பின்னிப் பிணைஞ்சுக்கிட்டுக் கிடக்கற போது, அதுக்குள்ள மிருக ஜாதி இல்லாம போகுமா?

கழுதைப்புலி என்ன? சிறுத்தை என்ன? மிளா என்ன? ஆனை என்ன? காட்டெருமை , காட்டுப்பன்னி, மயில், அப்புறம் இந்த பாம்பு வகையில மட்டும் நூறு ரகம் இருக்கும். கடிச்சா அதே இடத்துல மனுசன் நுரை தள்ளிச் செத்துப் போற மாதிரி, ராஜ நாகம், மலைப்பாம்பு, நல்லபாம்பு, பச்சைப்பாம்பு, விதம் விதமா அணில் மட்டும் ஆயிரம் ரகம் இருக்கும்னா பாத்துக்கங்க. பூச்சி, மரவட்டை, சில் வண்டு, தட்டான், என தினுசு தினுசா சின்ன வகைகள்ல… இப்படி பலப்பல.

அங்க அந்தக்காட்டுல இத்தனை மிருக வர்க்கத்துக்குள்ளயும், ஒருத்தருக்கும் தெரியாம, யாரோடயும் சேராம, ஒரு முழு பனைமரம் ஒசரத்துல, நல்ல கெம்பீரமா டைனோசர் ஒண்ணு ஒதுங்கி வாழ்ந்துக்கிட்டு இருந்திச்சு.

அதைப் பார்க்கறதுன்னா, தலையைப் பின்னுக்குச் சாய்ச்சுத்தான் அதனோட கழுத்தைப் பார்க் முடியும். அடக் கழுத்து மட்டுமே பத்து, பதினஞ்சு அடி இருக்கும்னா, அதனோட மொத்த ஒசரத்தையும் கணக்குப் போட்டுப் பார்த்துக்கங்க.

முன்ன இருக்கற ரெண்டு காலயும் மேல ஒசரத்துல தூக்கிக்கிட்டு, அது கோவத்துல ஒரு பிளிரு பிளிருச்சுன்னா, கஜராசன் யானை கூட அரண்டு போயி, எங்கயாவது ஓடிப்போயி, ஒளிஞ்சுக்குவாரு. அப்பேர்ப்பட்ட பராக்கிரமமும், மலை மாதிரி உடம்பும் உள்ள அந்த டைனோசர், ரொம்ப ஆச்சரியமா ஒரு சைவப்பிராணி.

அதனால அது சைவம் தான் சாப்பிடும். வைணவம் சாப்பிடுவதில்லை, என்பதால், அது பாட்டுக்கு நல்ல ஓங்கு தாங்கென வளர்ந்த மரக்கிளைகளை அப்படியே நின்னபடி முறிச்சு, உடைச்சு இலையைச் சாப்பிடுறதை மற்ற எந்த மிருகமும் பக்கத்துல போயிப் பார்த்ததில்லை.

(இப்படி ஒரு டைனோசர் இந்த மேற்குத் தொடர்ச்சி மலையில வாழ்ந்ததுங்கறதை நம்ப மாட்டேன்னும், நான் ஒரு புளுகூணி மூட்டையை கதையா அவிழ்த்துக் கொட்டுறேன்னும், என்னைச் சந்தேகப்பட்டு திட்டுறவங்க என் ஊருக்கு வந்தா, உங்களைக் கூட்டிக்கிட்டுப் போயி அந்த டைனோசர் இருந்த காட்டோட குகையை ஒங்களுக்கு மட்டும் ரகசியமாய் காட்டறேன்.)

இப்படித் தானுண்டு, தன்னோட இடம் உண்டுன்னு தன்னந்தனியாக் கெடந்த டைனோசருக்கு ஆத்தா, அப்பன்னு யாரும் கெடையாது. அது பொறந்ததுமே அதனோட ஆத்தா, பிரசவ ஜன்னி கண்டு, குட்டியப் பிரசவிச்சுட்டு, மண்டையப் போட்டுட்டா. பெஞ்சாதி போன துக்கத்துல அப்பன் டைனோசரும் சோறு, தண்ணி (அதாவது இலை, தழை) எதுவுமே சாப்பிடாம (வடக்கிருந்து உயிரை விடற மாதிரி) பட்டினி கெடந்து போயிச் சேர்ந்துட்டான். இதுல அந்தக்குட்டி டைனோசரு அநாதையாப் போயி, ஒரு ஆளுக கூடயும் சேராம, எந்த ஒரு மிருகத்தையும் ஏறெடுத்தும் பாராம, ஊரும் அறியாம, உலகமும் அறியாம, ஒருத்தனோடயும் ஒட்டாம, ஒதுங்கிப் போயிக் கெடந்துச்சு. சாப்பாட்டுல கூட ஆடு, கோழி இதெல்லாம் கிடையாது. வெறும் பயறு, பச்சை தான்.

இப்படி ரொம்ப சாதுவா வளந்துக்கிட்டு வந்த டைனோசரு, ஒசரத்துல ரொம்ப பெருசா வளர்ந்து, ஒரு பனை மர ஒசரத்துக்கு வந்ததும், மொத மொறையா மேற்குத் தொடர் மலை உச்சிக்குப் போயி, அங்க இருந்த ஒரு ஒசரமான மேட்டுல ஏறி நின்னுக்கிட்டு, நாலா பக்கமும் ஒரு ராஜ பார்வை பாத்துட்டு, அப்படியே கீழ இருந்ததையும் பாத்துச்சு, அடடா… அது என்ன கண்ணைப் பறிக்கற காட்சி! பச்சைப்

பசேல்னு ஒரேயடியா ரங்கநாதன் சாமி பெருமாளோட தோள் மேல இருக்கற பச்சைத் துண்டை எடுத்து, ஒரே நெடுக்கு வசத்துல வீசி விரிச்சு வெச்ச மாதிரிக் கெடந்த வயக்காடு. அதென்ன வரைஞ்சு வெச்ச மாதிரி சதுரம், சதுரமா பச்சை நெல்லு நாத்து பாவிக் கெடக்குற நஞ்சை நெலம். வடக்க கிருஷ்ணன்கோவில் தொடங்கி, தெக்க தேவதானம் தாண்டி கடையநல்லூர் வரை எல்லாத்தையும் ஒண்ணு சேரப் பார்த்தது.

அடேங்கப்பா… அங்கங்கே குச்சி குச்சியா பனை மரங்கள். ஒரே பச்சை நெறந்தான். அங்க காட்டழகர் மலையில இருந்து கீழ வெள்ளியை உருக்கி ஊத்துன மாதிரி ஒரே பளபளப்பா ஆத்துத் தண்ணி ஓடி, கூமாப்பட்டி, கான்சாபுரம் வழியா வத்திராப்பு கண்மாயில போயிச் சேருது. இந்த அழகைப் பாத்துக்கிட்டே நின்ன டைனோசரு அதனோட அழகுல அப்படியே சொக்கிப் போயி, இந்தத் தூரத்துப் பச்சையை பக்கத்துல போயிப் பார்த்தாத்தான் என்னவாம்னு நெனைச்சுக்கிடுச்சு. பெறகு, மறுநாள், காலைல கண்ணு முழிச்சு எழுந்திரிச்சதும், அதனோட குகையை விட்டு வெளிய வந்து பார்த்தா, கருக்கல் பொழுது தான். இன்னும் வைரக்கல்லா நட்சத்திரம் மின்னிக்கிட்டு டாலடிக்குது. சரி, நேத்து சாயங்காலம் பார்த்த அதே இடங்களையெல்லாம் போயிப் பார்ப்போம்னு மனசுக்குள்ள நெனச்சுக்கிட்டு, உண்ணாம, தின்னாம அது தன்னோட குகையை விட்டுப் புறப்பட்டு மலையை விட்டு மெதுவா கிழே இறங்க ஆரம்பிச்சது. இறங்கற வழியில சில இடங்கள்ல, மழை பேஞ்ச இடங்கள்ல கால் வழுக்கித் தடுமாறி, பெறகு, சமாளிச்சுக்கிட்டு, ஏதாவது கொப்பு, கொடியை ஆதரவாப் பிடிச்சுக்கிட்டு, அப்பப்ப தடுமாறி கீழே விழுற போது, ஒரு பிளிறல் பிளிரும். அப்ப, அதே மேற்குத் தொடர்ச்சி காட்டுல இருக்கற மத்த மிருகங்கள், இந்த மான், எருமை, புலி, கரடி, யானையெல்லாம் நெல்லிக்காய் மூடையை உதறிக் கொட்டுனா மாதிரி, நாலாபக்கமும் சிதறி ஓடும்.

இந்த டைனோசர் சும்மாப் போகல 'ஏலே, நான் ஊரு நாட்டாமை. எவம்லே வீதியில எறங்கி செருப்பைப் போட்டுக்கிட்டு, மேல் துண்டு போட்டுக்கிட்டு எதிர்ல வர்றது? கூவை! வழியை விட்டு நில்லுவே! அப்படின்னு கரிவலம் கிராம நாட்டாமை போல பிளிறிக்கிட்டு கம்பீரமாய்ப் போச்சு.

போற வழியில அங்க இருந்த பெரிய பெரிய மரங்கள்ல கிடந்த வெள்ளை முடிக் குரங்குக எல்லாம் கிளை விட்டுக் கிளை தாவி ஓடிப்போயி, பதுங்கிக்கிட்டு, 'ஏலேய்! பெரிய தனம் தலைக்கட்டு ஊர்ப்பஞ்சாயத்துக்கு வர்றாரு. நீ தலைய வெளிய நீட்டி, வெட்டப்பட்டு சாகாதல, அப்படின்னு சிங்க வால் குரங்குகளுக்கு முன்னாடியே அந்தடி சந்தடியா சேதி சொல்லி அனுப்பிருச்சு.

அந்த மலையையும், அங்க இருந்த மாவடை, மரவடை எல்லாத்தையும் பாத்துக்கிட்டே கீழே ரொம்ப நேரமா ஏறங்கிக்கிட்டிருந்த பெரிய நாட்டாமை டைனோசரு, தேனூத்தைப் பார்த்ததும் அங்க கொட்டிக்கிட்டிருந்த அருவியைப் பார்த்ததும், ஆசை ஆசையா ஒரு குளியலைப் போட்டது. அதுக்குப்பின்னாடி அந்தத் தண்ணி, கண்ணாடிய உருக்கி ஊத்துன மாதிரி பளிங்குச்சுத்தமா இருக்கவும், அதையும் ஆசை தீரக்குடிச்சிட்டு ஒரு ஏப்பம் விட்டுச்சு. அந்த ஏப்பத்துல ஒரு நவாப்பழ மரத்தோட நாலு கிளைகள் முறிஞ்சு கீழே விழுந்து, மரமே ஒரு தடவை தடுமாறி ஒரு ஆட்டம் ஆடிருச்சு.

தலைக்கு மேலே நிமிர்ந்து பார்த்த டைனோசர், சூரியன் தன் தலைக்கு மேலே கொஞ்ச தூரத்துல இருக்கறதைப் பார்த்துட்டு, 'சரி, கஞ்சி குடிக்கிற நேரம் வந்திருச்சு. இங்க எங்கயாவது எதுனாச்சும் கிடைக்குதான்னு பார்ப்போம்னு நெனச்சிக்கிட்டு, அங்க இருந்து மலையை விட்டுக் கொஞ்சம் கொஞ்சமா கீழ இறங்க ஆரம்பிச்சது. அப்படி இறங்கி வர்ற போது, அங்க இருந்த பச்சைப் பசேல்னு இருந்த காட்சியைப் பார்த்து ரசிச்சுக்கிட்டு, அது மெல்ல ஏறங்கி, எங்க வர்றோம்னு தெரியாமலேயே, செம்பகத் தோப்புல அடிவாரத்தில இருந்த ஸ்ரீரெங்க ராஜாவோட மாந்தோப்புக்குள்ள நுழைஞ்சிருச்சு. அங்க மாந்தோப்புல அந்த சமயம் நல்லா பெருசு பெருசா காசா லட்டு, கிளி மூக்கு, இராஜபாளையம் சப்பட்டை மாம்பழம்னு விதம்விதமா மாம்பழம் காய்ச்சுத் தொங்கது. அது தொங்கிக்கிட்டு கிடக்கறதைப் பார்த்ததும், நம்ம டைனோசருக்கு வாயி முழுக்க எச்சில் ஊறி, அடடா, இந்த மாம்பழமெல்லாம் எவ்வளவு அழகா கொத்துக்கொத்தா காய்ச்சுத் தொங்குது. பார்க்கறதுக்கு ரத்தச் சிவப்புல இருக்குதே?! இது எத்தனை ருசியா இருக்கணும்னு சொல்லிக்கிட்டு, தன்னோட நீண்ட கழுத்தை வளைச்சு, ஒரு மாங்கொப்பை சடால்னு உடைச்சு, அதுல இருந்த மாம்பழங்களை எடுத்து வாயில போட்டு திங்க ஆரம்பிச்சது.

நெறைய மாம்பழங்களைத் தின்னுட்டு, அதுக்கு தொண்டைல விக்கல் எடுக்க ஆரம்பிச்சுருச்சு. தண்ணி குடிக்கணும் போல, அதுக்கு இருந்துச்சு, உடனடியா, அது அங்க இங்க சுத்திப்பாத்துட்டு, அதே மாந்தோப்புல ஒரு கெணறு இருக்கறதைப் பார்த்துட்டு, அங்க போச்சு. அங்க, அந்த நேரத்துல பம்புசெட்டுல இருந்து மரங்களுக்குத் தண்ணி பாய்ச்சிக்கிட்டு இருந்தது ஆசையன். அவன், 'என்னடா இது, வித்தியாசமான உறுமலா இருக்கே!' அப்படின்னு சத்தம் கேட்டுட்டுத் திரும்பிப் பார்த்தா, இதோ இந்த டைனோசர் அவன் பக்கத்துல போயி நிக்குது. அந்தப் பயலுக்கு அதைப்பார்த்ததும் அதே இடத்துல அவன் போட்டிருந்த அரை டிரவுசர் நனைஞ்சு போச்சு. பய வாய் ஒட்டிப் போய், பேச முடியாம, விக்கிக்கிட்டு நிக்குதான். இந்த டைனோசர், அது பாட்டுக்கு நேராப் போயி, கிணத்துக்குப் பக்கத்துல இருந்த பெரிய தொட்டிக்குள்ள வாயை நுழைச்சது. அவ்வளவு தான்! அடுத்த நிமிசமே முழுத்தொட்டியும் காலி! அத்தோட, தொட்டிக்குள்ள இருந்து தலையை வெளியே நீட்டி, ஒரு பெரிய ஏப்பம் விட்டுச்சு. பய ஆசையன் அத்தோட நடு நடுங்கி அதைப் பார்த்து, 'அய்யா, பெரிய மாடசாமி! உங்க பெருமை தெரியாம இந்தச் சின்னப்பய ஏதோ சும்மா இருந்துட்டேன். இனிமே வருசந்தவறாம உமக்கு பௌர்ணமியில கிடா வெட்டிப் பொங்கல் படையல் வெக்கிறேன். என்னை ஒண்ணும் செஞ்சுராத, பெரிய மாடசாமி. என் பொஞ்சாதி, புள்ளைங்களை நீ தான் சாமி வாழ வைக்கணும்', அப்படின்னு சொல்லிக்கிட்டு கீழ மண்ணுல நெட்டுக்க, சாஷ்டாங்கமா வுழுந்து அந்த டைனோசரை கும்புடுதான் அந்த ஆசையன்.

என்னடா இது! தண்ணி குடிக்க வந்த இடத்துல ஒரு பய நடுங்கிக்கிட்டு கீழ வுழுந்து கிடக்கான்னு அந்த டைனோசருக்கு ஒரு மண்ணும் விளங்கல.

டைனோசர மண்ணுல வுழுந்து சாமி கும்பிட்ட ஆசையன், நேரா ஓடிப் போயி, சைக்கிளை எடுத்து மிதிச்சுக்கிட்டு, வேகாத வெயில்ல வேர்க்க விறுவிறுக்க ஸ்ரீவில்லிபுத்தூருக்குள்ள போறான் பய. அங்க போயி தெக்கு ரத வீதியில அவனோட மொதலாளி ஸ்ரீரெங்கராஜா வீட்டுக்கு முன்னாடி போயி நின்னு, சைக்கிளை நிறுத்திட்டு, திண்ணையில உட்கார்ந்திருக்கிற பெரிய பண்ணை கிட்ட விசயத்தைச் சொல்லுதான்.

'ஏலே, நீ முதல்ல கொஞ்சம் மூச்சை வாங்கிக்க. நின்று நிதானமா வெசயத்தைச் சொல்லு. ஒண்ணும் பதட்டப்பட வேணாம், கேட்டியா!' அப்படின்னு ஸ்ரீரெங்க ராஜா அவன நிதானப்படுத்துறாரு. ஆசையன், தன் முதலாளி கிட்ட, தான் செம்பகத்தோப்புல மாமரத்துக்குத் தண்ணி பாய்ச்சுக்கிட்டு இருந்தப்ப பார்த்ததை அப்படியே ஒண்ணு விடாம ஒப்பிக்கிதான்.

.... ஸ்ரீவில்லிபுத்தூர் மேற்குப்புற விளிம்பில் இருக்கறது ஒன்றரை நூற்றாண்டுகளைக் கடந்த சி.எம்.எஸ். பள்ளி. இதுக்குப் பின்புறமா உள்ள சீனியாபுரம் கிறித்தவக் குடியிருப்பை ஒட்டியிருப்பது வனத்துறை ரேஞ்சர் ஆபீஸ். செம்பகத்தோப்பு விசயம் தெரிஞ்சதும், உடனடியா தன்னோட ரெண்டு பேரைக் கூட்டிக்கிட்டு, ஜீப்பை எடுத்துக்கிட்டு, அந்த ஓட்டை உடைசலா இருக்கும் செம்பகத்தோப்பு ரோட்டுல கடகடா, கொட கொடான்னு ரேஞ்சரோட ஜீப் உருண்டுக்கிட்டு ஓடுற போது, பாறாங்கல்லை உடைக்கற மாதிரி சத்தம் வருது. அந்தச் சத்தத்துல தூரத்துல இருக்கற மேற்குத்தொடர்ச்சி மலையே கிடுகிடுக்குது.

செம்பகத்தோப்புல, ஸ்ரீரெங்க ராஜாவுக்குச் சொந்தமான நாப்பது ஏக்கர் தோப்புக்குள்ள ஜீப் போகுது. மொத மொதலா, அதைப் பார்த்த ஆசையன், ரேஞ்சர் அய்யாவைக் கூட்டிக்கிட்டுப் போயி, பம்புசெட் பக்கத்துல 'பெரிய மாடசாமி' நின்னுக்கிட்டு இருந்த இடத்தை அடையாளம் காட்டுதான்.

- 'என்னய்யா, என்னமோ பெருசா ஒரு மிருகத்தைப் பார்த்தேன்னு சொன்னியே! ஒண்ணுமே இல்லயே!'
- 'அய்யா, இங்க தான் பார்த்தேன் சாமி. ஒரு பன மரம் ஒசரத்துக்கு அது பாட்டுக்கு நின்னுக்கிட்டு, என்னைய ஒரு பார்வை பார்க்குது. தலைய ஒரு வெட்டு வெட்டிச்சு. அத நெனச்சா இப்பவும் என் ஈரக்கொலை நடுங்குது சாமி!' என்கிறான் ஆசையன்.
- 'என்னய்யா, ஏதாவது பகல்ல உறங்கிக் கிடந்துட்டு, கனா கினா கண்டியா?'
- 'அய்யோ சாமி! எனக்கு நல்லா நெனவு இருக்கு சாமி. நல்ல பட்டப்பகல். இதே இடத்துல தான் என் ரெண்டு கண்ணால

பார்த்தேன். என் குல தெய்வம் புளுவேணி வலுவேட்டரையன் மேல சத்தியமாச் சொல்லுதேன்! அப்படின்னு ஆசையன் சத்தியத்தின் மேல சத்தியமாச் செஞ்சுக்கிட்டு போறான். அந்த நேரத்தில தான், பம்புசெட் தொட்டி அருகே வெளியே ஈர மண்ணில் பதிந்திருந்த பெரிய்ய்ய்ய்ய கால் தடங்கள் வித்தியாசமாய்த் தெரிய, யதேச்சையாக அதைப் பார்க்கிறார் ஃபாரஸ்ட் ஆபீசர்.

பெரிய யானையின் கால் தடம் போலவே செம்மண்ணில் பதிந்திருக்கும் அந்தச்சுவடு அவருக்குப் புதிராகப்படுகிறது. தன் சக அலுவலர்களுடன் கலந்து ஆலோசிக்கிறார் ஆபீசர்.

- 'நமச்சிவாயம்!'
- 'அய்யா!'
- 'இந்தக் கால்தடம் யானையோடது மாதிரி தெரியல!'
- 'ஆமாங்க சார்! யானையோட தடம் வட்டமா, பள்ளமா இருக்கும் இதுல நீளம் நீளமா அந்த மிருகத்தோட கால் விரல் தடங்கள் வேற பதிஞ்சிருக்கு. இதோ பாருங்க! அந்த நீளமான கூர்மையான விரல் தடம் தெரியறதா!'
- 'சார், இந்தக் கால்தடம் வந்து யானையோடதோ அல்லது காட்டெருமை அல்லது கழுதைப்புலி இப்படி எதுலயும் சேராம வேறு ரகமா இருக்கு! ஆனா அது என்னன்னு தான் தெரியல!'
- 'ஒரு வேளை அந்தப் பருவக்காரன் சொல்ற மாதிரி இருக்குமோ?' அந்தாளை இங்க கூப்பிடுங்க!'
- 'யோவ், இங்க வாய்யா! இங்க வந்ததை, நீ பார்த்ததா சொல்றேல்ல. அது என்ன மிருகம்னு அய்யா கிட்ட விளக்கமாச் சொல்லு!'

ரேஞ்சர் முன்னாடி கை கட்டும் பருவக்காரன் ஆசையன், பவ பவ்யமாய், 'அய்யா, மதிய நேரத்துல இங்க தோப்புல தண்ணி பாய்ச்சிக்கிட்டு இருந்தேன். அப்ப இங்க மம்பட்டி கணை நழுவி லூசாப் போச்சு. அதை சரி பண்ணலாம்னு இங்க பம்புசெட் பக்கமா வந்தேன். அப்பத்தான், அங்க பம்புசெட் தொட்டி பக்கமா ஒரு பனை மர ஒசரத்துக்குப் பெரிசா ஒரு ராட்சசன் மாதிரி ஒண்ணு நின்னுக்கிட்டு, தண்ணி குடிச்சுக்கிட்டு இருக்குது. அதை எப்படி சொல்றதுன்னு

தெரியல. பெரிய பச்சை பூதம் மாதிரி இருக்கு. தலை மட்டும் பெரிசா, இத்தாந்தண்டி. கண்ணு ரெண்டும் அங்கயும், இங்கயும் சுழலுது. தொட்டியப் பார்த்தா ஒரு சொட்டுத் தண்ணி கூட இல்ல. சுத்தமா வழிச்சு வெச்ச மாதிரி கெடக்கு. நடுங்கிக்கிட்டே நான் எடுத்தேன் ஓட்டம். நேரா டவுனுக்குள்ள போயி முதலாளி ராசாகிட்ட சொல்லிட்டு, உடனே திரும்பிட்டேன். பிறகு தான் நீங்க இங்க வந்தீங்க!'

- 'யோவ், இப்ப இங்க ஒண்ணும் இல்ல. ஒரு வேளை உனக்கு ஏதாவது மனப்பிரமை வந்து, இப்படி உளறிக் கொட்டுறியா?'
- 'அய்யா, அப்படியெல்லாம் ஒண்ணும் கெடயாதுங்கய்யா என் ரெண்டு கண்ணால நான் நல்லாப் பார்த்தேன். அது ஒண்ணும் கனா கினா கிடையாதுங்கய்யா.
- 'ஒண்ணுமே புரியலயே! நமச்சிவாயம், நம்மளோட இத்தன வருஷ சர்வீஸ்ல இப்பத்தான் மொத தடவையா இந்த மாதிரி ஒண்ணு கேள்விப்படறேன்.

முகக்கடவாயைக் கையால் தடவியபடியே ஆழ்ந்த சிந்தனையில் மூழ்குகிறார். ஃபாரஸ்ட் ஆபீசர்…

**II**

… சிங்க மாடத் தெருவில் உள்ள வீதி மிகக் குறுகலானது. எதிரும் புதிருமாக நேராக நூல் பிடித்து வைத்தாற்போல முப்பது, முப்பது வீடுகள் கிழ-மேலாகச் செல்லும்.

அதன் கிழக்கு மூலையில் தெருவை அடைத்துக் கொண்டு இருக்கும் சதுரக்கல் கட்டிடம் தான் பஜனைக் கூடம். வெள்ளிக்கிழமை சாயங்கால வேளைகளில் அதன் கம்பிக்கதவுகள் திறக்கப்பட்டு, உள்ளே சுத்தம் செய்யப்பட்டு, ஒரு நெய் தீபம் ஏற்றப்பட்டு, அதன் உள்ளே நெற்றியில் நாமம் தரித்த பிராமணர்கள்.

' ஹரி நாம ஸ்மரணம், கோவிந்தா கோவிந்தா' என பஜனை பாடியபடி இருக்க, அந்தத் தெருவில் வீடுகளின் திண்ணை மாடக்குழிகளில் அகல் விளக்கு தீபங்கள் ஏற்றப்பட்டு, எந்த இருட்டிலும் ஒளி விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருக்கும். பஜனை மடத்தின் மனதுக்கு ரம்மியமான இசை ஒலியும், அதன் தெருவின் இருள் போக்கும் சுடர் ஒளியும் கலந்து, அந்தத் தெருவே தெய்வ சாந்நியத்துடன் துலங்கும்.

அன்று வெள்ளிக்கிழமை சாயரட்சை* வேளையில் அங்கு அப்படித்தான் வழக்கப்படியே பஜனைக்கூடம் திறக்கப்பட்டு, அதன் கூடம் பெருக்கி சுத்தம் செய்யப்பட்டு, திருவறையில் நெய் தீபம் ஏற்றி, ஸ்வாமியை சேவித்து விட்டு, பின்னர் மார்பில் சட்டை இல்லாமல், நாலு முழ வேஷ்டியும், அதன் மேல் இறுக்கிக் கட்டிய உத்தரியத் துண்டுமாகக் கீழே உட்கார்ந்து, சுருதிப் பெட்டியிலும், ஆர்மோனியத்திலும் சுருதி கூட்டி,

'ஓங்கி உலகளந்த உத்தமன் பேர் பாடி நாங்கள் நாம் பாவைக்குச் சாற்று நீராடினால், தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்து ஓங்கு பெருஞ்செந்நெல் ஊடு கயலுகள…? என்று ஆண்டாளின் இனிய திருப்பாவை பாசுரங்களைச் செவி குளிரப் பாடிக் கொண்டிருந்தனர். அங்கு அந்த பஜனையில் எழுப்பிய பாட்டொலி அலை அலையாய்ப் படிந்து குறுகிய சிங்க மாடத் தெருவின் நெடுகலாக எங்கும் இசை வெள்ளம். இந்தப் பஜனைப் பாடல்களைக் கேட்டபடியே தண்ணீர் சுமந்து கொண்டு, குறுக்கு நெடுக்குமாகச் செல்லும் மடிசார் கட்டிய பெண்கள். தெருவில் விளையாடும் சிறுவர்கள்.

'ஓங்கி உலகளந்த உத்தமன் ' என்று பஜனையில் பாடிக் கொண்டிருந்த போது, அந்தத் தெருவின் மேற்கு மூலையில் இருந்த தாமரை ஐஸ் கம்பெனியின் முன்பக்கத்தில் சாய்ப்பாக இருந்த சீமை ஓடுகள் எல்லாம் கிடுகிடுத்தன. அந்த சப்தம் அதே தெருவின் மடத்திலும் எதிரொலிக்கிறது. ஆர்மோனியத்தின் விசைகளில் விரல்களைப் பரவி வரும் திருஅனந்தன், அந்த விநோதமான ஓடுகள் நொறுங்கும் சத்தத்தைக் கேட்டு விட்டு, அப்படியே நிறுத்தி விட்டு, தெருவின் மேற்கு மூலையில் 'அது என்ன சப்தம்? ' என்று கேட்டபடி பார்க்க, அங்கே ஒரு பெரிய தென்னை மரத்தின் கால்கள் பெயர்ந்து நடந்து வருவது போல ஒரு பெரிய ராட்சச உருவம் புறப்பட்டு வருகிறது. இட்ட அடி முன்னே வைக்க, எடுத்த அடி பின்னே வைக்க, அந்த இரண்டு அடிகளில் அந்தத் தாமரை ஐஸ் கம்பெனியின் ஓட்டுக்கூரை, காரைச்சுவர், உள்ளே உள்ள பழைய காலத்துச் சுண்ணாம்புக் காரைத் தூண்கள் எல்லாம் நொறுக்கப்பட்டு தூள் தூளாகச் சிதறுகின்றன.

பஜனை பாடும் திருஅனந்தன் பதறிப்போய், வாயின் மேல் அன்னம் உலர்ந்து போய், வாயிலிருந்து வார்த்தைகளே எழாமல், 'இது என்ன பெருமாளோட பதினொன்னாவது அவதாரமோ? பத்து

அவதாரமும் முடிஞ்சு, இது தான் பதினொண்ணோ?' என்று திகைப்பு, அதிர்ச்சி மேலிட 'பெருமாளே! அநாத ரட்சகா! சர்வ லோக சரண்யா! பாற்கடல் வாசா! இப்படி துஷ்ட நிக்கிரஹம் பண்ண, நீயே புது அவதாரம் பண்ணி வந்திருக்கியே! உன் கருணையே கருணை! நீரே சத்யமான பிரம்மம்! ' அப்படின்னு அந்த டைனோசர் நிக்கற திசையைப் பார்த்துக் கை கூப்பி, கன்னத்தில் ரெண்டு கைகளாலும், போட்டுக்கொண்டு, 'நெருப்பென நின்ற நெடுமாலே!' என்று ஆண்டாளின் பாசுரத்தை அடிபிறழாமல் மறுபடி மறுபடி பாடுகிறான்.

சிங்க மாடத்தெரு கலவரமடைகிறது. ஆட்கள் அங்குமிங்கும் சிதறி ஓடுகின்றனர். தண்ணீர்க்குடங்களுடன், முன்னும் பின்னும் போய்க் கொண்டிருக்கும் சிங்க மாடத்தெரு அய்யங்கார் மாமிகள் எல்லோரும் அலறியடித்துக் கொண்டே குழந்தைகளை வீட்டுக்குள் இழுத்துக் கொண்டு ஓடி, கதவைச் சாத்திக்கொண்டு ஜன்னல் வழியாக டைனோசரைப் பார்த்தபடியே 'பெருமாளே! இந்தப் பெரிய அசுரன் கிட்டயிருந்து எங்களை நீ காப்பாத்தினா, திருக்குறுங்குடி பெருமாள் கோவிலுக்கு நாங்க எல்லாரும் வந்து உனக்கு உருவாரம் செஞ்சு வெக்கிறோம்! எப்படியாவது எங்களைக்காப்பாத்தேன்! ' என்று மன்றாடிப் பெருமாளை ஸ்தோத்திரம் பண்ணிக்கொண்டு இருக்கின்றனர்.

சிங்க மாட வீதியின் தெருக்களில், ஒரு கோழி தானியம் கொத்துவதற்கு சாவகாசமாக நடந்து வருவது போல, டைனோசர் நடந்து வந்து,வலது பக்கம் சந்தில் திரும்பும்போது, அங்கு செபத்தையா பிள்ளையின் பெட்டிக்கடையின் மேலே ஒரு காலை வைக்க, அந்தக் கடை சாப்பிடும் தட்டு போல ஒரேயடியாக சப்பட்டையாக நசுங்கிப் போகிறது. அந்தச் சந்திலிருந்து வெளியேறி ஆத்துக்கடை திடல் வாசலில், தெரு முக்கில் இருக்கும் ஊர் பிரசித்தி பெற்ற சுரேஷ் புரோட்டாக் கடையில் ஒரு காலை எடுத்து, அங்கு இருந்த புரோட்டா கொத்தும் பரந்த தோசைக் கல்லின் மேல் வைக்க, அதன் கல்லின் சூடு அந்த டைனோசருக்கு ஏதோ எறும்புக்கடி போல உறைக்க, அதன் இடது காலை எடுத்து ஒரு உதறு உதற, அத்தோடு சுரேஷ் புரோட்டா கடையே, கொத்துப் புரோட்டா போட்டது போல குதறப்பட்டு விடுகிறது.

அதன் அடுத்த காலை எடுத்து, சாவகாசமாக வாழைக்குளத் தெருவினை ஒட்டியிருக்கும் ஒத்தத் தெருவில் வைத்து நடந்து வர, தெருக்கள் எங்கும் ஜனங்கள், நாலாபக்கமும் சிதறி ஓட, பிறகு

செட்டியக்குடி தெரு கடந்து, அபிமன்னன் கல்யாண மண்டபம் பக்கமாக வந்து, மேல ரத வீதியில், ஆண்டாள் உலாவரும் அதே வீதியில் வெகு சாவகாசமாக டைனோசர் உலா வர, ஊரே வெறிச்சோடிப் போய், போட்டது போட்டபடி கிடக்க, வதந்திகள் எங்கும் கால் முளைத்து, நால் திசைகளிலும் பரவுகின்றன. விஷயத்தைக் கேள்விப்பட்டு ஸ்தலத்திற்கு வந்த இரண்டு நிருபர்களில் ஒருவர் தமிழ் தினசரியிலும், மற்றொருவர் ஆங்கில தினசரியிலும் வேலை செய்பவர்கள்…

….மறுநாள் காலை, தமிழ் தினசரியில் இப்படி செய்தி வந்தது.

**'ஸ்ரீவில்லிபுத்தூரில்**
**டைனோசர் நுழைந்தது! வீடுகள் நொறுங்கின**
**மக்கள் அலறி ஓட்டம்!**
**பலி 4, காயம் 348'**

என்ற தலைப்புச்செய்திகள் ஒரு பக்கம் முழுக்கக் கொட்டை எழுத்துக்களாக நிரப்பின. மற்ற எல்லாத் தினசரிகளும், தொலைக்காட்சிகளும், இந்த 'டைனோசர் உலா' என்ற செய்தியை ஒரு வாரத்திற்கு இடை விடாமல் எழுதி, பத்திரிக்கை விற்பனையை மும்மடங்கு அதிகரித்துக் கொண்டன. எல்லாத் திசைகளிலும் வண்ணப் படங்களாக டைனோசர் வெளி வந்து, பிரபல கதாநாயகனாக அது மாறி, மற்ற சினிமா, கிரிக்கெட், அரசியல், நட்சத்திரங்களையெல்லாம் 'பிரபலம்' என்ற விஷயத்தில் பின்னுக்குத் தள்ளியது.

தனியார் தொலைக்காட்சி நிறுவனங்களுக்கோ ஒரே மகிழ்ச்சி தான். 'டைனோசர் வருகை – சிறப்பு நேரடி ஒளிபரப்பு' என்ற ரீதியில் நான்கு கேமராக்களை வைத்துக்கொண்டு மாறி மாறி அந்த டைனோசரை படம் பிடித்துத் தள்ளி விட்டன. போதாக்குறைக்கு பற்பசை, சோப்பு, சீப்பு, வேட்டி, உள்ளாடை, பழச்சாறு, சீயக்காய்ப் பொடி தயாரிப்புகளின் வர்த்தக விளம்பரங்களை வேறு நடுநடுவே இணைத்து, அந்தத் தொலைக்காட்சி நிருபர் நேரடி ஒளிபரப்பு நடத்திக் கொண்டிருக்கும் போதே, நடுவில் 'விளம்பர இடைவேளைக்குப் பின்னர், நேரடி ஒளிபரப்பு நிகழ்ச்சி தொடரும் ' என்று அறிவிப்புகள் வேறு. அதைப் பார்த்த பொதுமக்கள், 'டைனோசர் வரும் நிகழ்ச்சியைப் போலவே, இந்த விளம்பரமும் சுவாரசியமா இருக்கு' என அதையும் கண் கொட்டாமல் பார்த்துக் களித்தனர்.

இந்தியத் திருநாடே அந்த டைனோசர் வரவைப் பார்த்து, அதிசயித்து நிற்க, வெளியூர், வெளி மாநிலம், வெளிநாட்டினர் எல்லாரும் சாரி, சாரியாக ஸ்ரீவில்லிபுத்தூரை நோக்கி காமிராவும் கையுமாக படையெடுத்து வர, நாட்டின் பிரதமர், முதலமைச்சர்கள், திரைப்பட முன்னணி நடிகர்கள், நடிகைகள், பரபரப்பான அரசியல்வாதிகளின் புகழை எல்லாம் ஒரே நாளில் 'ப்பூ' என ஊதித்தள்ளி விட்டு, இந்தியாவின் ஒரே நாயகன் டைனோசர்தான் என்று ஆகிப்போனது.

அந்த டைனோசரை எப்படியாவது வளைத்துப்பிடித்து, அதை வசியம் பண்ணி, அதை ஆளுங்கட்சியிலே ஒரு உறுப்பினராகச் சேர்த்து விட்டால், அடுத்த தடவை தேர்தல் வரும் போது, பிரச்சாரம் செய்வதற்கு அது ரொம்பப் பயன்படுமே என ஆளுங்கட்சித்தலைவர் திட்டமிட்டார். எதிர்க்கட்சிக்காரர்களுக்கோ, டைனோசரைப் பிடித்து, அதை ஊர் ஊராகக் கொண்டு போய், அதன் கழுத்தில் தங்களது கட்சிச் சின்னம் வரைந்த அட்டை ஒன்றைத் தொங்க விட்டு விட்டால், மக்களின் ஓட்டுக்கள் எல்லாம் தங்கள் பக்கம் வந்து விடும் எனத்திடமாக நம்பினார்கள்.

அந்த டைனோசரைப் பிடித்துக் காமிராவின் முன்னே நிற்க வைத்து, ஒன்றிரண்டு, காட்சிகளாவது எடுத்து, கதாநாயகன் கடைசிக்காட்சியில் அந்த டைனோசரை அடித்துக் கொன்று, பிறகு கதாநாயகியைக் கல்யாணம் செய்து கொள்வது போல சினிமாப்படம் தயாரித்தால் என்ன என்று கோடம்பாக்கத்து கதைப்புளுகு டைரக்டர்கள் யோசித்துக் கொண்டிருந்தனர். பாம்பு, நாய், யானை, கரடி, சிங்கம், புலி, மைனா, காடை, கவுதாரி, சேவல், ஈ, எறும்பு என எல்லா மிருக, பட்சி ஜீவராசிகளையும் வைத்துக் கண்டபடியெல்லாம் படம் எடுத்துத் தள்ளிய கோடம்பாக்கம், டைனோசரை நடிக்க வைக்க ஒரு பெரிய திரைக்கதையைத் தயார் செய்ய ஆரம்பித்தது…

## III

ஆண்டாள் கோவிலுக்குக் கிழக்குப்புறம் உள்ள வடபத்ரசயனர் கோவிலின் ராஜகோபுரம் அருகே உள்ள திருவாடிப்பூர நந்தவனம் ஒரு அழகான இடம். நடுவில் உள்ள கல் மண்டபத்தைச் சுற்றிலும் மரங்கள்.

பலா, பாக்கு, சவுக்கு மாதுளை, நந்தியாவட்டை, பாரிஜாதம், கொன்றை என அநேக மர வர்க்கங்கள். பகலில் பார்க்க அது ரொம்ப ரம்யமாக இருக்கும். அந்த இடத்திற்குள் இருந்த பசுமையைப் பார்த்த டைனோசர் உடனே உள்ளே சென்று விட்டது. அங்கு மரங்களில் இருந்த இலை, தழை, கொடிகளை எல்லாம் ஆசை தீரச் சாப்பிட்டது.

இப்போது நிருபர் கூட்டம் அங்கு திருவாடிப்பூர நந்தவனத்தை முற்றுகையிட்டது. படம் எடுத்துத் தள்ளியது. ஃப்ளாஷ் வெளிச்ச மழையில் நனைந்தது டைனோசர். மறுநாள், பத்திரிக்கையில் வர வேண்டிய தலைப்புச் செய்தியை இப்போதே மனதிற்குள் வரி வரியாக வரித்துக் கொண்டார் தினசரி நிருபர்.

**'ஆண்டாள் பிறந்த நந்தவனத்தில்**
**அதிசய டைனோசர்**
**அலை கடலென வந்த மக்கள்! '**

பசும் தழைகளையே சாப்பிட்டுக் கொண்டிருந்த டைனோசருக்கு அருகில் தைரியமாக நின்ற அமெரிக்கத் தொலைக்காட்சி நிருபர்,

**'The Vegetarian food habits of**
**Dinosaur spotted at Srivilliputtur'**

என்று ஆவணப்படம் ஒன்றை அழகான ஆங்கிலத்தில் தயார் செய்து, அதை விற்று, கொள்ளை கொள்ளையாய்ப் பணம் சம்பாதிக்கத் திட்டமிட்டுக் கொண்டிருந்தார். கிர்க் பேட்ரிக்ஸன் என்ற அந்த அமெரிக்க நிருபர் மைக்கின் முன்னால் விளக்கவுரை அளித்துக் கொண்டிருக்கும் போது, டைனோசர் பாகன், கொஞ்ச தூரத்தில் நின்று கொண்டு, அதற்கு முன்பாக ஒரு பெரிய அண்டாவில் பிசைந்த சாதத்தை வைத்துக் கொண்டு, அதை நீண்ட ஒரு கரண்டியில் எடுத்து, அதன் வாயில் ஊட்டிக் கொண்டிருந்தான்.

பொதுமக்கள் அதைப் பார்த்து விட்டு, 'என்ன இந்த டைனோசர் இப்படி தயிர் சாதமெல்லாம் சாப்பிடுதே!' என்று ரொம்பவும் ஆச்சரியப்பட்டனர். அதற்கு டைனோசர் பாகன் ஸ்தாணு போத்தி, 'இது இங்க வந்த புதுசுல எதுவுமே சாப்பிட மாட்டேன்னு முரண்டு பண்ணிச்சு. இதைப்பிடிச்சு இங்க கொண்டு வந்து கோயில்ல ஒப்படைச்ச பிறகு,

தென்னை மரத்துக் குருத்து ஓலைகளைப் பறிச்சுச் சாப்பிட்டுக்கிட்டு இருந்தது. அதனால, அதுக்கு என்ன சாப்பாடு போடலாம்னு ஆலோசனை பண்ணி, பிறகு இலை, தழை, புல்லு இதையெல்லாம் கொண்டு வந்து போட்டேன். பிறகு, கம்மாப்பட்டி, கோனார் ஒருத்தன், 'பசு மாட்டுக்குத் தீனி வெக்கற மாதிரி, இதுக்கும் வெச்சுப் பாருய்யா!' ன்னு சொல்லிட்டு ஒரு பெரிய கரும்புத்தோகை கட்டு ஒண்ணைக் கொண்டு வந்து போட்டான். அது பாட்டுக்குத் திருப்தியாச்சாப்பிட்டுட்டு தூங்கிருச்சு. இன்னொரு ஆள், அவன் தான் அந்த மாரிச்சாமிக் கோனார், 'இதுக்கு பருத்திக்கொட்டை அரைச்சுக் கொண்டு வரவா? அதை வெச்சுப் பார்ப்போம். சாப்பிட்டுட்டு இது பால் கறக்குதான்னு பார்ப்போம் ' அப்படின்னு சொல்லிக்கிட்டே அதனோட மடிப்பக்கமாப் போய்ப் பார்த்தான்.

- 'என்ன இது? பன்னெண்டு மடுக்காம்பு இருக்கு? இதை எப்படி இழுத்துப் பிடிச்சுப் பால் பீய்ச்சுறது?' அப்படின்னு சலிச்சுக்கிட்டே என்கிட்ட கேள்வி கேக்கறான் பால்கார கோனார் மாரிச்சாமி.

பிறகு, ஒரு நாள் ராத்திரி ஒம்பது மணிக்குக் கோவில் அரவணை தளிகை முடிஞ்சதும், மணியக்காரர் கண்ணன், ஒரு கை நிறைய புளியோதரையைக் கொண்டு வந்து அதுக்கு முன்னாடி வெச்சாரு. அது என்ன நெனச்சதோ தெரியலை. அதை வந்து மோந்து பாத்துச்சு. அப்புறம் நாக்கை நீட்டி ருசி பாத்துட்டு, ஒரு தடவை நாக்கைச் சப்புக் கொட்டிச்சு. அவ்வளவுதான். வாயால ஒரு இழுவை இழுத்துச்சு. அவ்வளவு தான். ஒரு உருண்டை எண்ணைப் புளியோதரையும் அதனோட வாய்க்குள்ள போயிருச்சு. மணியக்காரன் கண்ணனுக்கு ஒரே சந்தோஷம். அடடா, பரவாயில்லையே! இந்த டைனோசருக்கு கடலை எண்ணைல செஞ்ச நம்ம புளியோதரை புடிச்சுப் போச்சு போல. என்ன இருந்தாலும் நம்ம தளிகையோட ருசியே தனி தான் ', அப்படின்னு நெனச்சிக்கிட்டு அரைப்படி புளியோதரையைக் கொண்டு வந்து வெச்சான். அதையும் ஒரே இழுப்புல சாப்பிட்டுருச்சு. பிறகு, மறு நாள் மணியக்காரன் கண்ணன், ரொம்ப ஆசை ஆசையா, அரவணை பிரசாதம், தேன்குழல், அப்பம், இதையெல்லாம் ஒரு பெரிய பித்தளைத் தாம்பாளத்துல கொண்டு வந்து, அந்த டைனோசர் பக்கத்துல வெச்சிட்டு, 'லட்சுமி, சாப்பிடு! உனக்குன்னு யார் இருந்து கவனிச்சுப்பா? நான் தான் உனக்கு ஆதரவு!' அப்படின்னு கோவில்ல

மடப்பள்ளில போன வருசத்துல இருந்து சமையல்ல மாத்தாம வெச்சிருந்த பழைய கடலை எண்ணைல செஞ்ச பட்சணங்களை எல்லாம் சாப்பிட வெச்சான். அதைச்சாப்பிட்ட பிறகு, அந்த டைனோசருக்கு தலைச்சுத்தல் எல்லாம் வந்து கொஞ்சம் நிலை குலைஞ்சு, அதனோட வீராவேசம் எல்லாம் போயி, கோவில்ல அழுக்கு வேட்டி கட்டிய பரிசாரகர்கள் போலவே அதுவும் மாறியது.

இப்படி டைனோசரைக் கொஞ்சம் கொஞ்சமாப் பழகி, தன் வழிக்குக் கொண்டு வந்தார்கள் கோவில் ஊழியர்கள். அதன் பிறகு, டைனோசரை இலை, தழையெல்லாம் விட்டுட்டு, ததியோதனம், நெய், கொண்டைக்கடலை சுண்டல் இதையெல்லாம் சாப்பிட வெச்சிட்டாரு அந்த மணியக்காரன். நேத்திக்குக் காலைல சாமி கும்பிட்டுட்டு திரும்பி வர்ற போது தெற்கு மாட வீதி ரங்கநாயகி மாமி, ஒரு மூங்கில் தட்டுல தேங்காய், ரெண்டு வாழைப்பழத்தைக் கொண்டு வந்து, அது முன்னாடி வெச்சிட்டு, 'லக்ஷ்மி சாப்பிடும்மா. இப்படிச் சாப்பிடாம கிடந்து துரும்பா இளைச்சுப் போயிட்டியே ! உன்னோட லட்சணம் யாருக்கு வரும்? நீயே சொல்லு ! உன்னைப் பார்த்ததுமே பெருமாளோட விஸ்வரூபம் தான் என்னோட ஞாபகத்துக்கு வர்றது. என்னோட தம்பி பையன் கிச்சாவுக்குப் பெண் பார்த்துண்டே இருக்கேன். அவன் பாம்பேல ஒரு தனியார் கம்பெனில நல்ல உத்தியோகத்துல இருக்கான். அவனுக்குத் தான் ஜாதகம் எதுவும் சரியா அமைஞ்சு வரல. ஏதாவது வரன் வந்து கடைசி நேரத்துல தட்டிக் கழிஞ்சுண்டே போறது. உன் பார்வை பட்டா போறாதோ?! உடனே அவனுக்கு நல்ல வரன் அமைஞ்சு கெட்டி மேளம் தான்! ' என்று டைனோசரிடம் தனது சொந்த புராணத்தையெல்லாம் ஒப்பித்து விட்டுப் போய் விட்டாள்.

இப்படி ஆண்டாள் கோவிலின் அழுக்கு மடப்பள்ளியின் பழைய பட்சணங்கள், உண்டக்கட்டி, சக்கரைப் பொங்கல், புளியோதரை, தேங்காய், பழம் இவற்றையெல்லாம் தொடர்ந்து சாப்பிட்டு வந்த டைனோசர், தனது சரீர பலம், ஆன்ம பலம், மன பலம், வீரியம், உக்கிரம் எல்லாவற்றையும் ஒரு சேர மொத்தமாய்த் தொலைத்து விட்டு, பிறகு ரொம்ப அம்மாஞ்சியாகி, கிட்டத்தட்ட அம்மாஞ்சி அனந்தம்மாள் என்றே மாறி விட்டது.

டைனோசருக்கு வருகிற பெரிய கூட்டத்தைப் பார்த்ததும் கோவில் நிர்வாக அதிகாரி மானையாவுக்கு ஒரு பளீரென்ற யோசனை

மனதில் தோன்றியது. உடனே டைனோசர் நின்றிருக்கும் உயரமான பாக்கு மரங்களைச் சுற்றிலும் மூங்கில் தடுப்பு அமைக்கப்பட்டது.

டைனோசரை அருகில் சென்று பார்க்க ரூபாய் 20/- , ∴போட்டோ எடுக்க ரூ.50/- கற்பூர தீபம் காட்டி சாமி கும்பிட ரூ.100/-, கல்யாண ஊர்வலத்துக்கு டைனோசரைக் கூட்டிச் செல்ல ரூ.5000/-, என்று கோவில் தேவஸ்தானத்தின் பெயரில், கலர் கலராய் ரசீது அச்சடித்து, ஒரு ஆளை வேலைக்கு அமர்த்தி வசூலில் ஈடுபட வைத்தார், மானையா.

டைனோசர் ஜோதிடம் - 12 ராசிகள், 27 நட்சத்திரங்களுக்கும் ஸ்ரீவில்லிபுத்தூர் டைனோசர் சொல்லும் கிரக ராசி பலன்கள் - (விளக்கமான பரிகார பூஜைக்கு குறிப்புகளுடன்) என்ற பெயரில் முக்காலமும் எக்காலமும் கணிக்கும் ஜோதிட ஆசான், ஜோதிடச் சக்கரவர்த்தி, ஜோதிட பூஷணம் நாச்சியார்பட்டி பெரு. கோவிந்தன் என்பவர் ஒரு புத்தகம் எழுதி, அச்சிட்டு வெளியிட அந்த புத்தகத்தின் 2,00,000 பிரதிகளும் ஒரே நாளில் விற்றுத் தீர்ந்தன.

ஐந்து ரூபாய் அல்லது பத்து ரூபாயை எடுத்து டைனோசர் பாகன் ஸ்தாணு போத்தியிடம் கொடுத்தால், அவன் டைனோசரிடம் ஒரு சமிக்ஞை செய்வான். உடனே, டைனோசர் தன் தலையைக் குனிந்து, உயர்த்தி, தனக்குப் பணம் தந்தவரை ஆசீர்வாதம் பண்ணும்.

ஒரே மாதத்தில் டைனோசர் மூலம் ஆண்டாள் கோவிலுக்கு வந்த வருமானத்தை மானையா கணக்குப் பார்க்க, அது கோவிலின் ஒரு வருட உண்டியல் வசூல் வருமானத்தையும் தாண்டி நின்றது.

தினசரி காலை டைனோசரைச் சுத்தமாக குளிப்பாட்டி விட்ட டைனோசர் பாகன் ஸ்தாணு போத்தி, ஒரு நாள் தான் குளித்து விட்டு தனது நெற்றியில் நாமம் போட்டுக் கொள்ளும் போது, யதேச்சையாக அருகில் நின்ற டைனோசரும் அவனது ஞாபகத்துக்கு வந்து தொலைத்தது. நாம வந்து நாமம் போட்டுக்கற மாதிரி, இந்த டைனோசருக்கும் நாமம் போட்டுப் பார்த்தா என்ன? அதுவும் கோவில் மடப்பள்ளி தளிகைச் சாப்பாட்டைச் சாப்பிட்டுச் சாப்பிட்டுக் கிட்டத்தட்ட கோவிலின் சிப்பந்தி போலவே மாறி விட்டது', என்ற நினைப்பில் ஒரு நாமக்கட்டியை எடுத்து நீர் விட்டுக் குழைத்து அதன் நெற்றியில்

திருமண் காப்பு என்று சொல்லப்படும் நாமத்தை அழகாக வரைந்து விட்டான். யதேச்சையாய் அவனுக்குத் தோன்றிய இந்தக் காரியம், அதன் பின் என்னென்ன விளைவுகளை ஏற்படுத்தும் என அவன் கொஞ்சம் கூட நினைத்துப் பார்க்க மறந்து விட்டான்.

நெற்றியில் நாமத்துடன் இருந்த டைனோசரின் முகம் பளிச்சென்று விளங்கியது. காலை நேரத்தில், கோவிலுக்கு விஸ்வரூப தரிசனத்துக்குத் தவறாமல் சாமி கும்பிட முதல் ஆளாய் வரும் ராகவாச்சாரியாரின் கண்களிலா அந்த டைனோசரின் நெற்றியில் இடப்பட்டிருந்த நாமம் பட்டுத் தொலைக்க வேண்டும்?! அவருக்கு டைனோசரின் நெற்றி நாமம் தென்பட்டது. அதைப்பார்த்ததும் அவரது உதடுகள் துடித்தன.

(அவருக்கு மீசை கிடையாது. அதனால் வெறும் உதடுகள் மட்டும் துடித்தன). அவரது நெற்றி சுருங்கியது. கண்கள் கோபக் கனலைக் கொட்டின. காதோரங்களில் நெருப்புப் பொறி பறந்தது. உடலில் ரத்தக் கொதிப்பு ஏற்பட்டு, நாடி, நரம்பு, மண்டை ஓடு, கழுத்து, குடல், அடி வயிறு என உடலின் எல்லா பாகங்களுமே அநீதி கண்டு கொதித்தன.

உடனே அவர் டைனோசர் பாகன் ஸ்தாணு போத்தியைக் கூப்பிட்டார்.

- 'டேய், இங்க வாடா!'
- 'சாமி, என்ன சாமி? டைனோசருக்கு பழம், கிழம்னு ஏதாவது கொடுக்கப் போறீங்களா?'
- 'ஏண்டா, நீ செஞ்ச காரியத்துக்கு உன்னைய என்ன பண்ணனும்னு தெரியுமா? கிராதகப் பயலே! இதைச் செய்ய உனக்கு எப்படிடா இவ்வளவு துணிச்சல் வந்தது? ராஸ்கல்! ' என்று அடுப்பில் கொதிக்கும் எண்ணை போல கடுகடுவென கொதித்தார் ரங்காச்சாரி.
- 'சாமி! நான் ஒரு தப்பும் பண்ணலியே, சாமி ஏதாவது தப்பு செஞ்சிருந்தா சொல்லுங்க. திருத்திக்கிறேன் சாமி!' என்று பவ்யமாய்ப் பேசினான் ஸ்தாணு போத்தி.
- 'நீயே என்ன தப்பு செஞ்சிருக்கேன்னு பாருடா!'

ஸ்தாணு போத்திக்கு ஒண்ணுமே விளங்கவில்லை. புரியாமல் மண்டையைச் சொறிந்தபடி லயன் ராகவாச்சாரியார் முன்பு நின்று கொண்டிருக்கிறான் அவன்.

- 'அங்க நெற்றியைப் பாருடா மடையா! அங்க என்ன தெரியுது?'
- 'என்ன தெரியுது சாமி! ஒண்ணும் இல்லையே! புரியற மாதிரி கொஞ்சம் சொல்லுங்க சாமி!'
- 'ஏண்டா, இவ்வளவு தூரம் நான் சொல்லிண்டே போறேன். ஒண்ணுமே தெரியாத மாதிரி மடச்சாம்பிராணி மாதிரி முழிச்சிண்டு நிக்கறியே!'
- 'புரியற மாதிரி நீங்களே சொல்லுங்க சாமி!'
- 'ஏண்டா மடையா! அந்த டைனோசருக்கு நெத்தியில பெரிசா நாமம் போட்டிருக்கியே! '

  தன் தலையைத் திருப்பி அந்த டைனோசரின் நெற்றியை ஒரு பார்வை பார்த்து விட்டு ஸ்தாணு போத்தி, 'ஆமாம்! ', என்ற ரீதியில் தலையாட்டுகிறான்.
- 'அந்த நாமத்துல என்ன சாமி?'
- 'ஆமாண்டா, நீ போட்டுருக்கற நாமத்துல தான் கோளாறு. வளைச்சுப் போட்டுருக்கியே, அது வடகலை நாமம். ஆனா, இந்தக் கோவில் தென்கலையார் கோவில். அதனால இங்க இருக்கற டைனோசருக்கு தென்கலை நாமம் தான் போடணும் '.
- 'வடகலையா, அப்படின்னா என்ன சாமி?'
- உனக்கு ஒரு மண்ணும் புரியாது! நான் சொல்றபடி செய். நீ போட்ட நாமத்தை நீயே அழிச்சுட்டு, அந்த டைனோசர் நெத்தியில மறுபடி தென்கலை நாமத்தை நீயே போட்டு வுடு!'

ஸ்தாணு போத்தி புரியாமல் திருதிருவென முழிக்க, குனிந்து நிலத்தில் தன் வலது கை ஆள் காட்டி விரலால், தென்கலை நாமம் எப்படி இருக்கும் என வரைந்து காட்டுகிறார் ராகவாச்சாரியார்.

நிலத்தில் வரையப்பட்ட அந்தச் சின்னத்தைப் பார்த்த யானைப்பாகன், மன்னிக்கவும், டைனோசர் பாகன், அதைப் புரிந்து கொண்டு, டைனோசரின் பக்கமாகப் போய், ஒரு பெரிய வாளி நிறைய தண்ணீரை எடுத்து, அதன் முகத்தில் கொட்டி, மறுபடி சுண்ணாம்புக்

கட்டியை எடுத்து, ராகவாச்சாரியார் வரைந்து காட்டிய அதே வடிவத்தில் திருமண் என்ற நாமத்தை டைனோசரின் நெற்றியில் இடுகிறான்.

அவன் நாமம் வரைந்து முடித்த அரை மணி நேரம் கழித்து, அவ்வழியாக வரும் தேசிகன், டைனோசரைப் பார்த்து, அது ஹயக்ரீவர் என்ற ஸ்வாமியின் வடிவம் என்பதாகக் கருதி, அதனை மிகுந்த பயபக்தியுடன் வணங்கி, கன்னத்தில் போட்டுக் கொண்டு, பிறகு யதேச்சையாக அதன் நெற்றியைப் பார்த்து விட்டு,

- 'போத்தி, இங்க வா! டைனோசருக்கு நாமம் போட்டுருக்கியே!'
- 'ஆமா சாமி!'
- 'அதுல சின்ன தப்பு பண்ணிட்டியே!'
- 'என்ன தப்பு சாமி?' - மறுபடி போத்தி குழம்பிப் போகிறான்.
- 'நீ போட்டிருக்கியே அந்த நாமத்துல தாண்டா தப்பு நடந்துருக்கு!'
- 'மறுபடி தப்பா?'
- 'என்ன மறுபடி தப்பான்னு கேட்கற? உனக்கு யாராவது இதை எடுத்துச் சொன்னாளா? இங்க இதையெல்லாம் யார் எடுத்துச் சொல்றா? எரியற வீட்டுல பிடுங்கினது ஆதாயம்னு அந்தக் கோவில் எக்சிகியூட்டிவ் ஆபீசர் கிடைச்சதைச் சுருட்டிண்டு கொண்டு போயிண்டிருக்கான். என்ன பண்றது? அகப்பட்டதைச் சுருட்டிண்டு ஆளாளுக்கு போயிண்டே இருக்கா. நல்ல வேளை இந்தக் கோவில் தூண்களையெல்லாம் கருங்கல்லுல பண்ணியிருக்கா. இல்லன்னா, என்னிக்கோ இந்தச்சுவர், தூணையெல்லாம் பேர்த்து எடுத்துண்டு போய் வித்துக் காசாக்கியிருப்பான் அந்த எக்சிகியூட்டிவ் ஆபீசர். கட்டைல போறவன். இந்த நாமம் போட்டிருக்கியே, இதை இப்படி போடக்கூடாது. இது தப்பு. இதை வளைச்சு இப்படி இருக்கற மாதிரி போடணும், என்று விரல்களால் காற்றில் வரைந்து காட்டுகிறார் தேசிகன்.
- 'அப்ப அந்த சாமி இதை வேற மாதிரி வரையச் சொன்னாங்களே?' என்கிறான் குழப்பமடைந்த ஸ்தாணு போத்தி.

- 'அய்யா, எதுக்குப் பிரச்னை? எதுக்கும் நான் அந்த கோவில்ல இருக்கற ஆபீசர் அய்யா கிட்டப் பேசிக்கிறேன்' என்று நழுவுகிறான் ஸ்தாணு போத்தி.
- 'அந்த எக்சிகியூட்டிவ் ஆபீசருக்கு மண்டை முழுக்க களிமண்ணு தான். அவனுக்கெல்லாம் எப்படித்தான் வேலை கிடைச்சுதோ?! நான் எதுக்கும் அந்த மாங்கா மடையன் கிட்டப் போயி பேசிப் பார்க்கிறேன்', என்று சலித்தபடி திருவாடிப்பூர நந்தவனத்தை விட்டு வெளியேறுகிறார் தேசிகன். நேராக ஆண்டாள் கோவில் எக்சிகியூட்டிவ் ஆபீசரைப் போய்ப் பார்த்து, உடனடியாக டைனோசருக்கு நெற்றியில் வடகலை நாமம் தான் இடப்பட வேண்டும் எனக் கோரிக்கை வைக்கிறார்.

எக்சிகியூட்டிவ் ஆபீசர் மானையாவுக்குத் தெரிஞ்ச விசயமெல்லாம், ஒரு ரூபாய்க்கு நூறு பைசா என்பதே. பத்து ரூபாயிலிருந்து ஆரம்பித்து ஆயிரம் ரூபாய் நோட்டு வரை எதை எடுத்து அவர் முன்னே நீட்டினாலும், கூளம் கடிக்கும் செம்மறி ஆடு போல அவர் உடனே அதைப் பார்த்து விட்டுத் தலையாட்டுவார். ரூபாய் நோட்டினுடைய காகிதத்தின் இனிய மணமே அவருக்கு உகந்த நறுமணம். இப்படி ரூபாய் நோட்டின் ருசி கண்ட மானையா, கோவில் வாசலில் வாடகைக்கு விடப்பட்டிருந்த வளையல் கடை, பாத்திரக்கடை, வாசனை ஸ்நானப்பவுடர் கடைகளில் இருந்து ஒவ்வொரு மாதமும், கறாராக மாமூல் வசூல் பண்ணி, அமோகமாக வாழ்ந்து கொண்டிருந்தார். சம்பளத்தை விட 'மேற்படி வருமானமே' அவருக்கு அதிகம்.

அவரிடம் தேசிகன் போய், 'சார், நமஸ்காரம்! ' என்றார்.

- 'வாங்க சாமி! உக்காருங்க. என்ன விஷயம்? '
- 'சார், இந்த நம்ம கோவில் டைனோசருக்கு நெத்தியில நாமம் போட்டிருக்கு'.
- ஆமா, சாமி! நானும் அதைப் பார்த்தேன். ரொம்ப லச்சணமா இருக்கு. பாத்துக்கிட்டே இருக்கலாம் போல இருக்கு.'
- 'சார், அங்க தான் சின்ன தப்பு பண்ணிட்டேள்! '
- 'எது, டைனோசருக்கு நாமம் போட்டதா?'
- 'அது தான் சார்! நாமம் பார்க்க சகிக்கல. ச்சீ… ச்சீ…'

- 'ச்சேசே! நீங்க எல்லாம் படிச்ச சாமிங்க. கோவில்ல பூஜை பண்றவங்க. நீங்களே அப்படியெல்லாம் சொல்லலாமா?'
- 'சார், நான் சொல்ல வர்றதைப் புரிஞ்சுக்கங்க சார்! டைனோசருக்கு நெத்தியில இருக்கற நாமத்தைச் சரியாப் போடல!'
- 'அப்படியா? நான் அந்தப் பாகனைக் கூப்பிட்டு சரியாப் போடச் சொல்றேன். நீங்க போயிட்டு வாங்க!'
- 'சார், அந்த டைனோசருக்கு இப்ப நெத்தியில போட்டிருக்கறது தென்கலை நாமம். அது ரொம்ப தப்பு. அதை அழிச்சுட்டு, வடகலை நாமம் போடச் சொல்லுங்க!'
- 'அது எப்படி சாமி போட முடியும்? ஏதோ ஒரு நாமம் போட்டாச்சு. எல்லாச் சாமியும் ஒரே சாமி தான! அதே மாதிரி எல்லா நாமமும் ஒரே நாமம் தான!'
- 'நாமம் போட்டதுல தான் சின்ன மிஸ்டேக் பண்ணிட்டான் அந்த ப்ரம்மஹத்தி. அதை அழிச்சுட்டு, அதை மாத்தி, வடகலை நாமம் போடச் சொல்லுங்க! '

அதை எக்சிகியூட்டிவ் ஆபீசர் மறுத்தவுடன், தனது ஒரே துருப்புச்சீட்டை வெளியே எடுக்கிறார் தேசிகன்.

- 'சார், நீங்க ஒண்ணும் வெறுமனே போடச் சொல்ல வேணாம். இந்தாங்க பிடிங்க', என்று சொல்லி புதிய நூறு ரூபாய் நோட்டுக்களில் இரண்டை எடுத்து அவர் முன்னே நீட்டுகிறார் தேசிகன். உடனே, அந்தப் பணத்தைப் பார்த்த எக்சிகியூட்டிவ் ஆபீசர் எலும்புத்துண்டைக் கண்ட நாய் போலவும், இளம் வாலிபனைக் கண்ட கன்னிப் பிசாசு போலவும், அதனை நோக்கிப் பாய்ந்து, அதைக் கைகளில் வாங்கிக் கொண்டு,

- 'சாமி, நீங்க போயிட்டு வாங்க சாமி! நீங்க சொல்ற மாதிரி அந்த வடகலை நாமத்தையே போடச் சொல்லிருவோம். அது சரி, அந்த வடகலை நாமத்தை எப்படி வரைறயது? அது எப்படி இருக்கும் என்று கேட்கிறார் மானையா.

மேஜையின் மேல் இருக்கும் ஒரு காகிதத்தை எடுத்து, அதில் பேனாவால் ஆங்கில 'U' என்ற எழுத்தை வரைந்து காட்டுகிறார் தேசிகன்…

… டைனோசர் பாகன் ஸ்தாணு போத்தி, தன் கையில் இருக்கும் காகிதத்தைப் பார்த்தபடியே அந்த டைனோசரைத் தலை குனிய வைத்து, அதன் நெற்றியில் வளைந்த வடகலை நாமத்தைப் போட்டு விட்டு, தன் கையில் இருக்கும் கறையைத் தண்ணீரில் கழுவிக் கொண்டிருக்கும் சமயம், மிகச்சரியாக அந்த இடத்திற்கு வரும் ராகவாச்சாரியார், டைனோசரின் நெற்றியில் இருக்கும் வடகலை நாமத்தைப் பார்த்து விட்டு,

- 'யோவ் போத்தி! இது என்னய்யா அக்கிரமம்? நான் தான் உன் கிட்ட படிச்சுப் படிச்சு சொல்லிட்டுப் போனேன்ல. உனக்கு புத்தி எங்க போச்சு? டைனோசருக்கு தென்கலை நாமம் போடுன்னா, பிடிவாதமா வடகலை நாமம் போட்டுருக்கியே! உனக்கு எவ்வளவு திமிரு? அறிவில்ல! நீ இந்த அப்பாவி ஜீவனுக்கு வடகலை நாமம் போடலாமா ? உன்கிட்ட பேசி பிரயோஜனமில்லை! நான் அந்த தெண்டக் கருமாந்தரம் எக்சிகியூட்டிவ் ஆபீசர் கிட்ட பேசிக்கிறேன்', என்று கோபத்தில் பொரிந்து தள்ளி விட்டு, விடு விடு வென நடந்து போய், எக்சிகியூட்டிவ் ஆபீசரிடம், தன்னுடைய பழைய மெட்ராஸ் பல்கலைக்கழக பி.ஏ., ஆங்கிலத்தை வைத்துக் கொண்டு, அரைமணி நேரம் லெ.்.ப்ட், ரைட் வாங்கி விட்டார்.

அதை நிதானமாகக் கேட்டுக் கொண்ட மானையா,

’சாமி! நீங்க இப்படிச் சொல்றீங்க! அந்த டைனோசருக்கு வடகலை நாமம்தான் போடணும்னு சொல்லி, அந்த தேசிகன் சாமி என்னைய பிடிபிடின்னு பிடிச்சிட்டுப் போயிட்டார். நீங்க இப்ப வந்து தென்கலை நாமம் தான் போடணும்னு பிடிவாதம் பிடிக்கறீங்க. உங்க ரெண்டு பேருக்கும் நடுவுல கிடந்து நான் படாதபாடு பட்டுக்கிட்டிருக்கேன்' என்று சொன்னபடியே, தனது வலது கையால் தன் இதயத்தைத் தொட்டு உணர்ச்சி வசப்பட்டார். அப்படி தன் இதயத்தைத் தொடும்போதே, தேசிகன் தன்னிடம் கொடுத்த 'அன்பளிப்பு' ரூபாய்

இருநூறு பத்திரமாக இருக்கிறதா என்று ஒரு தடவை தொட்டுப்பார்த்துக் கொண்டார். என்ன செய்ய? கால் பணம்னாலும் கிம்பளப் பணமாச்சே!'

- 'இப்ப அந்த டைனோசருக்கு தென்கலை நாமம் போட முடியுமா, முடியாதா? எனக் கோபாவேசமாய்க் கொந்தளித்தார் ராகவாச்சாரியார்.
- 'சாமி, நாங்க கவர்மெண்ட்ல போடுற உத்தரவை அப்படியே கேட்டுக்கிட்டு அதன்படி ஆமாஞ்சாமி போட்டுத்தான் ஆகணும். மறுக்க முடியாது. மறுத்தா எங்களை வீட்டுக்கு அனுப்பிச்சிருவாங்க. இப்ப என் கெட்டுப் போச்சு? அந்த டைனோசருக்கு முகம் பெரிய முகம். அதனால ஒரு நாமம் இல்ல. ஏழெட்டு நாமம் கூட போடலாம். ஏன் வடகலை, தென்கலை, அத்தோட விபூதிப் பட்டை, சந்தனக்கோடு, குங்குமம், அப்படின்னு எதை வேணும்னாலும் குழைச்சுப் பூசலாம். நீங்க ஏன் கவலைப்படுறீங்க? டைனோசர் முகத்துல நாலு தென்கலை நாமம், நாலு வடகலை நாமம் அப்படின்னு ஏகப்பட்ட நாமத்தை மொத்தமாப் போடச் சொல்லி, அந்தப் பாகன் கிட்ட சொல்லிடறேன்…அப்புறம் சாமி அதுல பாருங்க, அடுத்த வாரம் எங்களுக்கு ஆடிட் இருக்கு. அதுக்கு மெட்ராஸ்ல இருந்து நாலு பேர் வர்றாங்க. அவங்களுக்கு சாப்பாடு, தங்கற இடம் இப்படி எல்லாத்துக்கும் நான் தான் செலவழிக்கணும். நீங்க கொஞ்சம் பெரிய மனசு பண்ணி, ஒரு ரெண்டாயிரம் கொடுத்தா, ரொம்ப உதவியா இருக்கும்… என்ன சொல்றீங்க?' என்று ஒரு இழுவையைப் போட்டார் மானையா.

ராகவாச்சாரியாரின் முகத்தில் சிவகாசி சரவெடிகள் எல்லாம் ஒரே நேரத்தில் பட்படால்.. பட் படால் என வெடித்தன.

- 'ஏன் சார், இங்க உலகத்துல ரொம்ப முக்கியமான பிரச்னை ஒண்ணைப் பத்தி சீரியசா விவாதம் பண்ணிக்கிட்டு இருக்கேன். நீங்க என்னடான்னா ஆடிட் வருது, ரூவாயை எடுன்னு என்கிட்டயே வசூல் பண்றீங்களா? யு னோ மை ஃபாதர் மிஸ்டர் கேசவாச்சாரி? ஹி வாஸ் தி டிஸ்டிரிக்ட் ரெவின்யூ ஆபீசர் டூரிங் த பிரிட்டிஷ் பீரியட். வெரி ஹானஸ்ட் மேன். ஒரு பைசா வாங்க மாட்டார். அது அந்தக் காலம். வெள்ளைக்காரன் காலத்துல

ஒரு பைசா லஞ்சம் உண்டா? ஒருத்தன் கையை நீட்டினா, உடனே சீட்டைக் கிழிச்சு வீட்டுக்கு அனுப்பிடுவான். பட் டுடே. ஸீ… வாட் எ ஷேம்…மிஸ்டர் மானையா, ஐ வில் ஸீ யூ இன் த கோர்ட் ஆ.்.ப் லா. ஐ வில் சூ யூ இன் த கோர்ட் ஆப் லா.'

( I'll see you in the court of law.
I'll sue you in the court of law. )

என்று தன் வாயின் இயந்திரத் துப்பாக்கியால் வார்த்தைகளைச் சுட்டுத் தள்ளி விட்டுப் போய் விடுகிறார் ராகவாச்சாரியார்.

போனவர், தன்னுடைய சகாவான அனந்தராமனைப் பார்த்து, விஷயத்தை விளக்கி, உடனடியாக கோவில் எக்சிகியூட்டிவ் ஆபீசருக்கு அழகான ஆங்கிலத்தில், ஆறு பக்கத்தில், ஒரு வக்கீல் நோட்டீஸை அனுப்பி வைத்தார்.

அதைப் படிப்பதற்கு போதுமான அறிவு ஏதும் இல்லாத மானையா, உடனடியாக அரசு வழக்கறிஞரைத் தொடர்பு கொண்டு, அதற்கு உரிய பதில் தருமாறு கேட்டுக்கொண்டார். அரசு வழக்கறிஞர் புது மாடன் என்பவர், அந்தப் பதவியைப் பிடிப்பதற்காக மேலிடத்திற்கு இருபது லட்ச ரூபாயை ஒரு பெட்டியில் வைத்து உயர்நீதிமன்ற நீதிபதிக்கு சுளையாகக் கொடுத்து விட்டு, அரசு வழக்கறிஞர் பதவிக்கு வந்தவர். அவருக்கு வழக்கறிஞர் நோட்டிஸில் இருந்த வடகலை, தென்கலை நாமம் என்பது எதுவும் புரியவில்லை. போதாக்குறைக்கு அந்த நோட்டிஸில் வைணவக் கோவில் மரபுகளை எல்லாம் சுட்டிக்காட்டி, அதன் ஆதி வரலாறை எல்லாம் எடுத்துச் சொல்லி, கோவில் டைனோசருக்கு தென்கலை நாமமே போடப்பட வேண்டும் என்று கோவில் எக்சிகியூட்டிவ் ஆபீசருக்கு கோரிக்கையை வைத்தது நோட்டிஸ்.

அரசு வழக்கறிஞர் புதுமாடனுக்கு வடகலை, தென்கலை, மட்டுமல்ல, ஓவியக்கலை, புகைப்படக்கலை, கட்டிடக்கலை, சமையற்கலை என்று எந்தக்கலையும் தெரியாது. அவருக்குத் தெரிந்ததெல்லாம், தனது தொழிலில் போட்ட முதல் இருபது இலட்சத்தை ஒரே வருடத்தில் எப்படி எடுப்பது என்பது தான்.

புதுமாடன், 'சரி, வழக்கு என்று வரும்போது பிராதைப் படித்துப்பார்த்து, அதற்கு எதிர்ப்பாட்டு பாடி விடுவோம். என்று

எண்ணிக்கொண்டு ராகவாச்சாரியார் விட்ட வக்கீல் நோட்டிஸைப் பொருட்படுத்தாமல் இருந்தார். ராகவாச்சாரிக்கு வந்ததே கோபம். உடனடியாக, ஸ்ரீவில்லிபுத்தூர் மாவட்ட உரிமையியல் நீதிமன்றத்தில் ஆண்டாள் கோவிலில் உள்ள டைனோசருக்கு நெற்றியில் தென்கலை நாமம் தான் போட வேண்டும் என உறுத்துக் கட்டளைப் பரிகாரம் கோரி வழக்கு தொடுத்தார்.

சிவில் வழக்கு களை கட்டியது. வழக்கில் இரண்டு பிரதிவாதிகள்.

1. ஆண்டாள் கோவில் எக்சிகியூட்டிவ் ஆபீசர், 2. இணை ஆணையர், சிவகங்கை என இரண்டு பேரையும் படாத பாடு படுத்தி, ஒரு சிவில் வியாஜ்யம் நடந்தது.

தன் பக்கம் உள்ள ஆவணங்கள், எல்லாவற்றையும் நீதிமன்றத்தில் சமர்ப்பித்த ராகவாச்சாரி தரப்பு தென்கலை வழக்கறிஞர் அனந்தராமன், ப்ராட்டஸ்டன்ட் சமயத்தவரான முன்சீ.ஃ.ப் வின்சென்ட் தானியேலிடம் விஷயத்தை விளக்குவதற்குப் பெரும் பாடுபட்டார்.

- 'யுவர் ஆனர்… தி தென்கலை பீப்பிள்'
- 'மிஸ்டர். அனந்தராமன். வாட் இஸ் தென்கலை?'
- 'இட்ஸ் எ ஸெக்ட் யுவர் ஆனர் '
- 'வாட் ஸெக்ட் '
- 'யுவர் ஆனர், தேர் ஆர் டு ஸ்கூல்ஸ் ஆ.ஃ.ப் வைஷ்ணவிஸம்! '
- 'டு ஸ்கூல்ஸ்! டு மைன்யூட் எ டிவிஷன்! '
- 'பட் லெட் மி எக்ஸ்ப்ளெய்ன் திஸ் யுவர் ஆனர்! '

அனந்தராமன், வைணவத்தின் தென்கலை பிரிவு எப்படித் தோன்றியது என்பதை ஆதியோடந்தமாக விளக்கி, ஒரு பெரிய கோவில் கதாகாலட்சேபமே நடத்தி, முன்சீப் கோர்ட்டை பஜனை மண்டபமாக மாற்றினார்.

அனந்தராமனின் வைணவ விளக்கத்தைக் கேட்ட சக வழக்கறிஞர்கள் 'சர்வத்ர கோவிந்த நாம சங்கீர்த்தனம். கோவிந்தா, கோவிந்தா!' என்று கோஷ்டிப்பாடல் பாடாதது மட்டும்தான் பாக்கி.

முன்சீப் வின்சென்ட் தானியேல், தலைமுடியைப் பிய்த்துக் கொள்ளாதது ஒன்று தான் பாக்கி. நம் அனந்தராமனின் முக்கால் மணி நேர வைணவ விரிவுரை முன்சீப்பை முழு மனிதர் என்ற நிலையில் இருந்து கிட்டத்தட்ட அரைப்பைத்தியம் என்ற நிலைக்குக் கொண்டு வந்து விட்டது.

கடைசியில், அனந்தராமன், தனது முயற்சியில் சற்றும் மனம் சளைக்காமல் ஒரே அடியாக, குனிந்து, ஒரு காகிதத்தில், தென்கலை என்றால் 'Y' என்ற ஆங்கில எழுத்தும், வடகலை என்றால் 'U' என்ற எழுத்தும் போன்ற வடிவில் நாமங்கள் இருக்கும் என்று வரைந்து காட்டியதும், வின்சென்ட் தானியேல், தனது இழந்த சுய புத்தியைக் கொஞ்சமாக மீட்டெடுத்து, நீதிமன்றத்தைப் பார்த்து சிரித்தவாறே,

- 'ஸோ பெக்யூலியர் கேஸ் ', என்று ஒரு முத்தை உதிர்த்தார்.

டைனோசருக்கு நெற்றியில் நாமம் போடுவதில் ஆரம்பித்த வழக்கு ஸ்ரீவில்லிபுத்தூர் முன்சீப் கோர்ட்டில் மூன்று வருடங்கள் நடந்தது. தென்கலை பிரிவு வழக்கறிஞர் அனந்தராமன், அதற்குள் ஒரு கார் வாங்கி விட்டார். தீர்ப்பைப் பார்த்த வடகலை நாமப் பிரிவுத்தலைவர் தேசிகன், தரைக்கும் வானத்துக்குமாகக்குதித்து,

'என்ன தீர்ப்பு இது? முட்டாள்தனமா இருக்கு. அந்த முன்சீப்புக்கு சட்டமும் தெரியாது. ஒரு மண்ணும் தெரியாது. பைபிள் வாசிக்கிற ப்ராட்டஸ்டன்ட் கிறிஸ்தவனிடம் வடகலை, தென்கலை-ன்னு சொன்னா அவனுக்கு என்ன தெரியும்? அந்த முன்சீப் ஒரு தெண்டம். கோர்ட்டே வெறும் தண்டம் ', என்று எல்லோருக்கும் விஸ்வாமித்திர முனிவர் போல சாபம் கொடுத்து விட்டு, தனது தரப்பு வழக்கறிஞர் சாரங்கபாணியிடம் பணம் கொடுத்து, சப்-கோர்ட்டில் அப்பீல் போடச் சொன்னார்.

வழக்கு மேல்முறையீட்டுக்குப் போனது. ராகவாச்சாரியார் விடுவாரா? எது முக்கியம்? டைனோசருக்கு நெற்றியில் தென்கலை நாமம் போடுவதல்லவா ரொம்ப முக்கியமான உலகப்பிரச்னை! எனவே, அவர் அனந்த ராமனைப் பார்த்து, வழக்கு அப்பீலில், தனது தரப்பில் கவுண்ட்டர், எதிர் மனு தாக்கல் செய்யுமாறு சொல்லி, ஒரு கனமான தொகையை அவரிடம் கொடுத்தார். வழக்கு சப்-கோர்ட்டில் முடிந்த

போது, தீர்ப்பு தேசிகனுக்குச்சாதகமாக வந்தது. கீழமை நீதிமன்றத்தில் தென்கலை நாமத்திற்குச் சாதகமாகத் தரப்பட்ட தீர்ப்பை தள்ளி வைத்து விட்டு, வடகலை நாமத்துக்குச் சாதகமாக தீர்ப்பளித்தார் சார்பு நீதிபதி பூரணம்.

வடகலை நாமக்காரர்கள் இந்தத் தீர்ப்பைப் பார்த்து விட்டு ஆனந்தக் கூத்தாடினார்கள். வழக்கில் வெற்றி பெற்ற வழக்கறிஞர் சாரங்கபாணிக்கு மாலை போட்டு ஊர்வலமாகக் கொண்டு போனார்கள்.

ஊர்வலம் வடக்கு ரத வீதியின் பக்கம் வந்த போது, அதைப் பார்த்த தென்கலை நாமப் பிரிவு ராகவாச்சாரிக்கு அடிவயிறு அடுப்பு போல எரிந்தது. போதாக்குறைக்கு வடகலை வைணவர்களின் பிரிவு தலைவர் தேசிகன், அந்த ஊர்வலத்தில் நடந்து வரும்போது, ராகவாச்சாரியாரைப் பார்த்து, முகத்தை சுளித்து, ஏளனமாகச்சிரித்து வைத்து விட்டுப் போய் விட்டார். அந்த ஏளனச் சிரிப்பைப் பார்த்த ராகவாச்சாரியின் முகம் கொல்லன் பட்டறை இரும்பு போல கொதித்துச் சிவந்து போனது.

அவரோ, தனது சொத்தை விற்றாவது, சிவில் கேஸில் ஜெயித்து அந்த வடகலை நாமம் தேசிகனை மண்ணைக் கவ்வ வைப்பதாகச் சபதம் போட்டார்.

அடேங்கப்பா! எப்பேர்ப்பட்ட சபதம்! அவரது சபதத்துக்கு முன்பு சாணக்கியன் போட்ட சபதமெல்லாம் வெறும் பிஸ்கோத்து! மறுநாள், ராகவாச்சாரி சென்னைக்குப்பெட்டி, படுக்கையுடன் புறப்பட்டுப் போய், உடனடியாக சென்னை மயிலாப்பூர் வக்கீல் விஜயராகவனைப் பிடித்து, உயர்நீதிமன்றத்தில் மேல்முறையீட்டு மனுவைத் தாக்கல் செய்து விட்டு , வெற்றிகரமாக ஊர் திரும்பினார். மேல்முறையீட்டு வழக்கு சென்னையில் ஆரம்பமானது. உயர்நீதிமன்றத்தில் உள்ள நீதியரசர்களுக்கும் வழக்கு குறித்து ஒன்றுமே புரியவில்லை.

- 'வாட் இஸ் வடகலை? வாட் இஸ் தென்கலை?' என்று கீழமை நீதிமன்றத்தில் முன்சீப் வின்செண்ட் தானியேல் கேட்ட அதே கேள்விகளைத் தான் உயர்நீதிமன்ற நீதியரசர்களும் கேட்டனர். அவர்களுக்கு இந்த வடகலை, தென்கலை நாமம் போடுவதில் உள்ள வித்தியாசங்களை விளக்குவதற்கு, இரு

தரப்பு வழக்கறிஞர்களும் தலை வழுக்கையாகி விட்டனர். போதாக்குறைக்கு இவர்களது வைணவ மதப்பரிவுகள் குறித்த தத்துவ விளக்கங்களைக் கேட்ட நீதியரசரும், ஒன்றுமே புரியாமல், புத்தி பேதலித்து, தலைச்சுற்றல் ஏற்பட்டு, மயக்கம் உண்டாகி, நீதிமன்ற இருக்கையிலேயே சுய நினைவு இழந்து விழுந்தார்.

மறுநாள் ஆங்கில தினசரிகளில்

***'Namam dispute makes***
***Lordship go nuts'***

( நாமப் பிரச்னை நீதியரசர்களைப் புத்தி பேதலிக்க வைத்தது ) என்று செய்தி வந்தது.

இறுதியில், இவ்வழக்கு தீர்க்கப்படாமல் வேறு ஒரு அமர்வுக்கு மாற்றப்பட்டு, அங்கு உள்ள நீதியரசர்கள் முன்பாக வடகலை – தென்கலை நாமம் குறித்த பட்டிமன்றம் நடத்தப்பட்டது. ஆண்டாள் கோவிலில் திருவாடிப்பூர நந்தவனத்தில் உள்ள டைனோசருக்கு நெற்றியில் போடுவதற்குச் சிறந்த நாமம், தென்கலை நாமமே - இல்லை வடகலை நாமமே என்று வழக்கறிஞர்களில் இரு தரப்பினரும் சம பலத்துடன் வாதப்பிரதிவாதங்களை முன் வைத்து வாதாடினார்கள். இதை யாராவது வீடியோ படமாக எடுத்திருந்தால் ஒரு நல்ல நிகழ்ச்சியாக அது அமைந்து, அந்த நிகழ்ச்சியின் வீடியோ லட்சக்கணக்கில் விற்பனையாகி, லாபம் கொட்டோ கொட்டோ என்று கொட்டியிருக்குமே என நீதிமன்ற ஊழியர்கள் பலரும் ஆதங்கப்பட்டனர்.

உயர்நீதிமன்ற அமர்வில் இரு தரப்பு கற்றறிந்த வழக்கறிஞர்களின் நாமம் போடும் பிரச்னை குறித்த வாதுரைகளைக் கேட்ட நீதியரசர்கள், 'இந்த மாதிரி வேலைக்கு ஏண்டா வந்து சேர்ந்தோம்!' எனத் தங்களையே நொந்து கொண்டனர். கடைசியில், அவர்கள் இரு தரப்பு வழக்கறிஞர்களையும் பார்த்து மிகவும் கெஞ்சுகின்ற தோரணையில், 'இவ்வழக்கில் நாங்கள் ரொம்பவும் குழம்பிப் போய் விட்டோம். இனி மேலும் நாங்கள் குழம்பிப் போக வழியே இல்லை. எனவே, இவ்வழக்கில் தீர்வு ஏற்படும் பொருட்டு, தென்கலை-வடகலை நாமம் போடும் இரு வேறு கட்சிகளின்

வழக்கறிஞர்களே கலந்து பேசி ஏதாவது சமாதானமான ஒரு தீர்வு கண்டால்தான் என்ன? நீங்கள் அவ்வாறு விட்டுக் கொடுத்துப் பேசி, ஒரு முடிவுக்கு வந்து, அதையே ஆவணமாக எழுதி, கையெழுத்திட்டு, இங்கு நீதிமன்றத்தில் கொண்டு வந்து சமர்ப்பிக்க சம்மதமா?' என்று கேட்டனர்.

இந்த யானைக்கு நாமம் போடும் கேஸில், இரு தரப்பு வழக்கறிஞர்களும் வழக்கறிஞர் கட்டணம், குமாஸ்தா கட்டணம், டைப் அடிக்க ஃபீஸ், எதிர் உரை தாக்கல் செய்ய ஃபீஸ், விவாதம் பண்ண ஃபீஸ், கோர்ட் செலவு, டவாலி ஃபீஸ், ப்யூன் மாமூல், அது இதுவென்று கறகறவென்று கறந்த பின்பு, இனி மேலும் பணம் கறக்க வழியில்லாமல், இரு கட்சிக்காரர்களையும் சுத்தமாக மொட்டை அடித்து, சந்தனம் பூசி விட்ட பிறகு, மேலும் கட்சிக்காரர்களுக்கு நெற்றியில் நாமம் போட வேண்டியது ஒன்று தான் பாக்கி என்பதால், அந்த நாமம் எந்த நாமமாக இருந்தால் தான் என்ன என்ற முடிவுக்கு உயர்நீதிமன்றத்தில் பழம் தின்று கொட்டை போட்ட வழக்கறிஞர்கள் வந்து விட்டனர்.

எனவே, அவர்கள் ஒன்றாகக் கூடி கலந்து பேசி, 'இந்த பாருங்க ஸார்! உங்களுக்கு வரவேண்டிய வக்கீல் ஃபீஸ் உங்களுக்கு வந்தாச்சு. எனக்கு வரவேண்டிய ஃபீஸ் வந்தாச்சு. இதுக்கப்புறம் நம்ம கட்சிக்காரங்க எக்கேடு கெட்டுப் போனா நமக்கு என்ன? 'Damn them!..' என்ற முடிவுக்கு வந்து, பிறகு அடுத்த வாய்தாவில், தாங்கள் இருவருமே மேல்முறையீட்டில் சமாதானமாகி, ஒரு பரஸ்பர ஏற்பாட்டிற்கு வந்திருப்பதாக நீதியரசர்களிடம் தெரிவித்து விட்டனர்.

நீதியரசர்கள், தங்களது தலையை உருட்டிக் கொண்டிருந்த பெரிய வேதனை தங்களை விட்டுப் போனால் போதும் என்ற முடிவுக்கு வந்து, அந்த வழக்கிற்காக ஒரு நீதிமன்ற வழக்கறிஞரையே ஆணையராக நியமித்து, வழக்கில் சம்பந்தப்பட்ட ஸ்ரீவில்லிபுத்தூர் டைனோசரைப் பார்வையிட்டு, ஒரு அறிக்கை வழங்கவும், அந்த மேல்முறையீட்டு வழக்கின் உபயதாரர்களான இரண்டு எதிரெதிர் கட்சிக்காரர்களிடம், அந்த உயர்நீதிமன்ற ஆணையர் பேசி ராசி பண்ணி, சமரசத் தீர்வு ஏற்படுத்துமாறும், அதன் இறுதியில் 'ஒரு ஒத்திசைவு ஏற்பாட்டுத் தீர்ப்பாணை' (Scheme decree) ஒன்றை ஏற்படுத்துமாறும் உத்தரவிட்டனர். வழக்கை முடிக்கும் வரை, ஆண்டாள் கோவில் டைனோசருக்கு தென்கலை நாமமோ, வடகலை

நாமமோ எந்த நாமமும், போடக்கூடாது என்றும், வழக்கின் இறுதித்தீர்ப்பு வரும் வரை, தினந்தோறும் டைனோசருக்கு விபூதிப் பட்டையையே நெற்றியில் பூச வேண்டும் எனவும் உத்தரவிட்டனர்.

உயர்நீதிமன்ற உத்தரவின்படி, சென்னையிலிருந்து புறப்பட்ட நீதிமன்ற ஆணையர், ஸ்ரீவில்லிபுத்தூருக்கு வந்து ரயில்வே ஸ்டேஷனில் காலடி வைத்ததும், அவருக்கு ராஜ மரியாதை தரப்பட்டது. இரு தரப்பிலும், தென்கலை – வடகலை தரப்பு வழக்கறிஞர்கள் அவரை எதிர் கொண்டு வரவேற்று, காரில் ஏற்றிக்கொண்டு போய் ஊரின் மேற்கே திருமுக்குளம் அருகே உள்ள விருந்தினர் மாளிகையில் தங்க வைத்தனர்.

காலை பத்து மணி வாக்கில், தனது சக வழக்கறிஞர்களுடன் ஆண்டாள் கோவிலுக்குள் பிரவேசித்த நீதிமன்ற ஆணையர், திருவாடிப்பூர நந்தவனத்தில் இருந்த டைனோசரைப் பார்வையிட்டார். பிறகு, நீதிமன்ற ஆணையரின் முன்னிலையில், தென்கலை-வடகலை தரப்பு வழக்கறிஞர்கள் கலந்து பேசி, ஒரு முடிவுக்கு வந்து, ஒரு பாவமும் அறியாத அந்த அப்பிராணி டைனோசருக்கு ஒரு நாள் தென்கலை நாமமும், மறுநாள் வடகலை நாமமும், அதற்கு அடுத்த நாள் மறுபடி தென்கலை நாமம் என்ற ரீதியில், ஒரு நாள் விட்டு ஒருநாள் நாமம் போடுவது என்றும், ஞாயிற்றுக்கிழமை அன்று எல்லா அரசாங்க அலுவலகங்களுக்கும் விடுமுறை என்பது போலவே, டைனோசருக்கும் நாமம் போடுவதிலிருந்து விடுமுறை என்றும், அந்த ஒரு நாள் எந்த நாமமும் அதற்குப் போட வேண்டாம் எனவும் முடிவுக்கு வந்தனர்.

இதற்கு, இருதரப்பு கட்சிக்காரர்களும் ஏக மனதாக ஒப்புக்கொண்டு, ராசி மனுவில் கையெழுத்திட்டனர். இந்த விவரம் கோவில் எக்சிகியூட்டிவ் ஆபீசர் மானையாவுக்கும் தெரிவிக்கப்பட்டது.

திங்கள் கிழமை அன்று ராகவாச்சாரியரின் முன்னிலையில், டைனோசர் பாகன் ஸ்தாணு போத்தி, டைனோசருக்கு தென்கலை நாமத்தை நெற்றியில் வரைந்தான். செவ்வாய்க்கிழமை தேசிகன் வந்தார். அவரது முன்னிலையில், ஏற்கெனவே இருந்த தென்கலை நாமம் அழிக்கப்பட்டு, டைனோசரின் நெற்றியில் வடகலை நாமம் போடப்பட்டது. இந்த ஏற்பாடு சுமூகமாக ஒரு மாதம் சென்றது. அதன் பின், மார்கழி மாதத்தில் ராகவாச்சாரியாருக்கு ஒரு குயுக்த யோசனை

உருவாகியது. நாமம் போட்டுக் கொள்ளலாம் என்று தான் கோர்ட்டில் சொன்னார்களே தவிர, நெற்றியில் மட்டும்தான் என்று சமரச ஏற்பாட்டில் சொல்லவில்லையே. அதனால், டைனோசரின் உடம்பு பூராவும் தென்கலை நாமம் போட்டால் என்ன? என்ற யோசனை உருவாகி, அதன்படி அடுத்த வாரம், திங்கள் கிழமை ஸ்தாணு போத்தியிடம் ஐம்பது ரூபாய் நோட்டைக் கொடுத்தார். ஸ்தாணு போத்தி வாங்கின காசுக்கு வஞ்சனையே பண்ணாமல், டைனோசரின் நெற்றி, கழுத்து, உடம்பு, கால் என்று ஒரு இடம் பாக்கியில்லாமல் தென்கலை நாமம் வரைந்து தீட்டி விட்டான்.

இதைப்பார்த்த தேசிகனுக்கு, கோபம் தலைக்கேறி, மறுநாள் அவர் வந்து, ஸ்தாணு போத்திக்கு ரூபாய் ஐம்பது கொடுக்க, அவனும் முந்தின நாள் போட்ட தென்கலை நாமங்கள் யாவற்றையும் தண்ணீர் ஊற்றி அழித்துவிட்டு, டைனோசருக்கு உடல் முழுக்க வடகலை நாமத்தைப் போட்டு விட்டான். இப்படி இரு நாமப்பிரிவுக்காரர்களும் போட்டி போட்டு டைனோசரின் உடம்பை மாறி மாறி நாமம் போட்டுப் புண்ணாக்கி விட்டனர். ஸ்தாணு போத்திக்கு நல்ல வசூல் மழை.

ஸ்தாணு போத்திக்கு இருந்த ஒரே ஏக்கம் என்னவென்றால், ஆண்டாள் கோவிலில் ஒரு டைனோசருக்குப் பதிலாக பத்து டைனோசர்கள் இருந்தால் எவ்வளவு வசதியாக இருக்கும்!? என்பது தான். இரண்டு நாமக்கார பிரிவுகளும் தங்கள் நாமத்தையே டைனோசருக்குப் போடச் சொல்லி, மாறி மாறி தனக்குப் பணம் கொடுத்துக் கொண்டேயிருப்பார்களே என ஏங்கினான். அதே ஏக்கத்தோடு, அன்றிரவு ஸ்தாணு போத்தி, திருவாடிப்பூர நந்தவனத்தில் டைனோசருக்கு அருகிலேயே தைரியமாகப் படுத்துக் கொண்டான். கனவில் ஸ்ரீவில்லிபுத்தூர் வந்தது. பெரிய, வானை முட்டும் வடபத்ர சயனர் கோவிலின் ராஜ கோபுரம் தெரிந்தது. அந்தப்பெரிய வடபத்ர சயனர் கோவிலும் தெரிந்தது. ஆண்டாள் கோவிலின் தங்க விமானம் தெரிந்தது. கோவிலைச் சுற்றி மாட வீதிகளும், அதன் புறத்தில் ரத வீதிகளும் தெரிந்தன. வீதிகளில் வைணவர்கள் சுத்தமாகக் குளித்து விட்டு, நெற்றியில் திருமண் எனப்படும் நாமம் தரித்து 'ஆண்டாள் திருவடிகளே சரணம்! ' என்று குரலெழுப்பியபடியே சென்றனர்.

அவர்களுக்குப் பின்புறமாக டைனோசர்கள் நடந்து வந்து கொண்டிருந்தன. ஒன்றா, இல்லை. நான்கு. இல்லை எட்டு, பதினொன்று.

இல்லவே இல்லை. முப்பது. நாற்பத்தி ஏழு. தொண்ணூற்று மூன்று. பல்கிப் பெருகிய டைனோசர் கூட்டம், ஸ்ரீவில்லிபுத்தூரின் அகன்ற கம்பீரமான ரத வீதிகளில், கச்சேரித் தெருவில் அவை உலா வந்தன. ராகவாச்சாரியாரும், தேசிகனும் அவைகளைப் பார்த்து பிரமித்துப் போய், பின்னர் ஸ்தாணு போத்தியிடம் 'டேய் போத்தி! நிறைய டைனோசர் இருக்குடா! எல்லா டைனோசருக்கும் தென்கலை நாமமே போட்டு விடுறா!' என்று உத்தரவிட்டார். தேசிகன் அதற்கு எதிராக, 'வேணாம் போத்தி! எல்லா டைனோசருக்கும் வடகலை நாமத்தைத் தான் போடணும். வடகலை நாமமே போட்டுரு!' என்று கணீரென உத்தரவிட்டார்.

ஸ்ரீவில்லிபுத்தூரின் ராஜ வீதிகளில் டைனோசர்கள் அணிவகுத்துச் சென்றன. ஊர் மக்கள் அவைகளுக்கு வழி விட்டு, விலகி நின்றனர். ஸ்தாணு போத்தி அவைகளை எண்ணிப் பார்த்தான். ஒன்று, இரண்டு, ஐம்பது, நூறு, இருநூறு, நானூறு, அறுநூறு, எண்ணூறு, தொள்ளாயிரம், ஆயிரம். … அடேங்கப்பா, ஆயிரம் டைனோசர்கள்! … இத்தனை டைனோசர்களையும் எங்க கொண்டு போய் நிறுத்தறது? இவைகள் எல்லாத்தையும் எப்படிக் குளிப்பாட்டி, நாமம் போடுறது?… ஆயிரம் டைனோசர்களுக்கும் நெற்றியில நாமம் போட பத்து நாளாகுமே!' என்ற கவலையில் ஆழ்ந்தான்… அவனுக்கு ஆண்டாளின் நாச்சியார் திருமொழிப்பாசுரம் ஞாபகத்துக்கு வந்தது.

'வாரணம் ஆயிரம் சூழ வலஞ் செய்து
நாரணன் நம்பி நடக்கின்றான் நின்னெதிர்
பூரண பொற்குடம் வைத்துப் புறமெங்கும்
தோரணம் நாட்டக் கனாக்கண்டேன் தோழி நான்!! '

ஒரு டைனோசர் வந்ததுக்கே இவ்வளவு சர்ச்சை உருவானதே! ஆயிரம் டைனோசர்கள் இங்கு ஸ்ரீவில்லிபுத்தூரில் சூழ வலஞ் செய்தால், எப்படி இருக்கும் என்று யோசித்துப் பார்த்தான்…

… ராகவாச்சாரியர், தேசிகன் இருவரும் போட்டுப்படுத்திய பாட்டில், தினசரி டைனோசருக்கு உடல் முழுக்க நாமம் போடப்பட்டு, அது மறுநாளே அழிக்கப்பட்டு, வேறு நாமம் போடப்பட்டு, அதுவும்

அழிக்கப்பட்டு, வேறு நாமம் போடப்பட்டு, அதுவும் அழிக்கப்பட்டு, வேறு நாமம் போடப்பட்டு… என்று இதே ரீதியில் நாமம் போடப்பட்டதில், அந்த நாமம் போடுவதில் பயன்படுத்தப்பட்ட நாமக்கட்டிகள் சுத்தமாக இல்லாததால், அவற்றில் இருந்த சுண்ணாம்பு டைனோசருக்கு தோல் அரிப்பை ஏற்படுத்தி விட்டது. அதனால் உடல் அரிப்பு ஏற்பட்டு, டைனோசர் ரொம்பச் சிரமப்பட்டது. மனித உடலா, கையை வைத்துச் சொறிந்து கொள்ள?! எனவே, அதன் தோலில் ஒவ்வாமை ஏற்பட்டு, தோல் உரிந்து, சீழ் வழியத் தெடங்கியது. கொப்புளம் வந்து, உடல் முழுக்க பந்து பந்தாக ரண வீக்கம் வந்தது. அதன் சீழ் அடிக்கடி உடைந்து, வழிந்து எங்கும் துர்நாற்றம் வீசியது. அந்த டைனோசரின் பக்கத்திலேயே போக முடியவில்லை. அவ்வளவு துர்நாற்றம்! போதாக்குறைக்கு ராகாவாச்சாரியரும், தேசிகனும் மாறி மாறி உடல் முழுக்க நாமம் போட்டு டைனோசரைப் படாதபாடு படுத்தினர்.

இப்பொழுதெல்லாம், ஸ்தாணு போத்தி திருவாடிப்பூர நந்தவனத்தில் தங்குவதில்லை. வேலை முடிந்ததும் சாயங்காலமே வீட்டுக்குப் போய் விடுகிறான்.

ஒரு நாள், நள்ளிரவில், டைனோசர் கண் விழித்தது. அதன் மேல் உடம்பு புண்பட்டுப் போயிருந்ததால், அதன் மேல் போட்டுக் கட்டியிருந்த கொச்சக் கயிறுகளை அவிழ்த்து விட்டிருந்தான் ஸ்தாணு போத்தி. டைனோசர் மிகவும் சிரமப்பட்டு, வேதனையுடன், உடலைத் தூக்கித்தரையில் இருந்து சுற்றும் முற்றும் பார்த்தது. மெதுவாக நடந்து வந்து, நந்தவனத்தின் கதவு அருகே நின்றது. அதன் அதிர்ஷ்டம், கதவுகள் பூட்டப்படாமல் இருந்தன. நந்தவனத்தை விட்டு வெளியே வந்து டைனோசர் மெதுவாக சத்தமின்றி வந்து, சன்னதி தெரு வழியாக நடந்தது. தூரத்தில் சிங்கம்மாள் குறடு மண்டபம். அதைத் தாண்டி, ஆண்டாள் கோவில் வாசலில் இடது பக்கமாகத் திரும்பியது. அங்கு கோவில் வாசலில் காவலில் இருக்கும் வாட்ச்மேன் நல்ல ஆழ்ந்த தூக்கத்தில் இருந்தார். அவரைக் கடந்து வெளியேறி, தெற்கு மாட வீதி வழியாகப் போன டைனோசர், மேல மாட வீதி வழியாக ரத வீதியைக் கடந்து நடந்தது. பிறகு, ஒரே ஓட்டம். மேற்கே திருமுக்குளத்தைக் கடந்து போன போது, குளத்தாங்கரையின் படிக்கட்டுகளில் இருந்த ரங்கநாதபுரம் கிராம ஆட்கள் இரண்டு பேர் அதைப்பார்த்து விட்டு, 'யோவ், அந்த டைனோசரு, இது எப்படி இங்க வந்தது?' என ஆச்சரியப்பட்டுத் திகிலடைந்தனர். ஆனால், முழு போதையில் இருந்த அவர்கள் சத்தம் ஏதும் போடவில்லை.

டைனோசர் அந்த இருவரையும் பார்த்து விட்டு, தலையைத் திருப்பிக் கொண்டு, ஓட்டம் பிடித்தது. சி.எம்.எஸ். ஸ்கூல் தாண்டி, சீனியாபுரம் வழியாக, செம்பகத்தோப்பு போகும் தார்ச்சாலையில் ஒரே ஓட்டம். மூச்சுப் பிடிக்காமல் ஓடி, பொன்னாங்கண்ணி கண்மாய் கடந்து செம்பகத்தோப்புக்குள் நுழைந்தது.

மனிதர்களுக்குத்தான் ஞாபகமறதி... டைனோசர்களுக்கு ஞாபக சக்தி அபாரம். (இதில் உங்களுக்குச் சந்தேகம் என்றால், ஒரு டைனோசரிடம் பொது அறிவுக் கேள்விகளைக் கேட்டுப் பாருங்கள். அப்போது தெரியும் அதனது ஞாபக சக்தி).

தான் புறப்பட்ட, தனக்குச் சொந்தமான குகைக்கே வந்து சேர்ந்தது. அதன் பிறகு, அதை யாரும் பார்த்ததே இல்லை. ஸ்தாணு போத்தி வேலையை இழந்து, தனது சொந்த நாடு கேரளாவுக்குப் போய் விட்டான். ராகவாச்சாரியாரும், தேசிகனும் இப்போது கோவில் வசந்த மண்டபத்தில் இருக்கும் காராம்பசு மாடுகளுக்கு நெற்றியில் தென்கலை நாமம் போடுவதா, வடகலை நாமம் போடுவதா என்று சண்டை போட்டுக் கொண்டு, மறுபடி ஸ்ரீவில்லிபுத்தூர் மாவட்ட உரிமையியல் நீதிமன்றத்திற்குப்போய், அந்த வழக்கு தற்போது நிலுவையில் உள்ளது.

----------------------------

**குறிப்புக்கள்**

**1.சாயரட்சை** - சாயங்காலம், சந்தியா காலத்தில் நடத்தப்படும் கோவில் வழிபாடு, ஆறு கால பூஜைகளில் ஒன்று.

**2.திருமடப்பள்ளி** - கோவிலுக்குள் இருக்கும் சமையல் செய்யும் அறை.

**3.தளிகை** - சமையல், உணவு

**4.பரிசாரகர்கள்** - கோவில் சிப்பந்திகள், கோவில் மடப்பள்ளியில் சமையல் வேலை மற்றும் கோவில் வழிபாடு, நைவேத்தியத்தில் உடன் இருந்து உதவி செய்பவர்கள்.

----------------------------

*References :*


1. http://www.vengrai.com/?p=257
2. http://creative.sulekha.com/vadakalai-iyengars-versus-thenkalai-iyengars_616419_blog
3. http://indiankanoon.org/doc/257174/
4. Judgment in Second Appeal : **Madras High Court R. Thathadesika Thathachariar ... Vs K.V. Alagia Manavala Jeerswamy ... on 9 September , 1976**

**Equivalent citations: AIR 1978 Mad 210**

**Bench: P Kailasam J , Balasubrahmanyan J**

**JUDGMENT P.S. Kailasam, C.J.**